اركب معنا
للدكتور: محمد بن عبد الرحمن العريفي

# எம்முடன்
# பயணம் செய்யுங்கள்

அரபு மூலம்:
டாக்டர் முஹம்மத் இப்னு அப்துர் ரஹ்மான் அல் உரை:.பி

தமிழாக்கம்:
முஹம்மத் அஸ்ஹர் முஹம்மத் யூசுப் (ஸீலானி).

வெளியீடு:
அழைப்பு, மற்றும் வழிகாட்டல் மையம், அல்ஜுபைல்

# பொருளடக்கம் الفهارس

بسم الله الرحمن الرحيم

## முன்னுரை

அளவற்ற அருளாளனும் நிகரற்ற அன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் திருப்பெயரால்.

புகழ் அனைத்தும் அல்லாஹ்வுக்கே! அவனது கருணையும், சாந்தியும் நபிகளார் (ஸல்) அவர்கள் மீதும் அவர்களின் தோழர்கள், குடும்பத்தவர்கள் அனைவர் மீதும் உண்டாவதாக.

நம் இஸ்லாமிய சமூகம் ஓரிறை வழிபாட்டுக் கொள்கையில் எவ்வளவு தூரம் பின்தங்கி தூரமாகியுள்ளது என்பதை நான் சந்தித்த சில சம்பவங்களை இங்கு குறிப்பிடுவதன் மூலம் தெளிவு படுத்தலாம் என்று நினைக்கின்றேன்.. அண்மையில் சில நபர்களைச் சந்திக்கக் கிடைத்தது அவர்களில்......

முதலாமவர்:

கவலை, சோகம் நிறைந்தவனாக என்னிடத்தில் வந்து அமர்ந்தவராகச் சொன்னார்:

அறிஞரே. நான் என் குடும்பத்தை விட்டுப் பிரிந்து இங்கு தனிமையில் வாடுகின்றேன். அதனால் சோகம் நிறைந்தவனாக உள்ளேன்' என்றார்.

நான் சொன்னேன்: உமது குடும்பத்தினர் பக்கம் அவசரமாக அல்லாஹ் உம்மை அனுப்பி வைப்பானாக.

இதனைக் கேட்ட அவர் அழ ஆரம்பித்தார். பின்பு அவர், அல்லாஹ்வின் மீது ஆணையாக அவர்களைப் பற்றி என் உள்ளத்தில் உள்ள கவலையையும், அவர்களுக்கு என்னைப் பற்றி உள்ள கவலையையும் நீர் அறிவீரா? எனது தாய் நானூறு மைல் தொலைவில் அடக்கப்பட்டிருக்கும், ஒரு ஷைகின் கப்ருக்குச் சென்று எனக்காகப் பிரார்த்திக்கின்றாள். நான் குடும்பத்தினரிடம் மிக விரைவில் வரவேண்டுமென வேண்டிக் கொள்கிறாள்.

அவர் ஒரு அருள் நிறைந்த மனிதர், அவர் மக்களின் பிரார்த்தனைகளை ஏற்றுக்கொள்கிறார், கஷ்டங்களைப் போக்குகின்றார், மரணித்ததன் பின்னரும் பிரார்த்திப்பவர்களின் பிரார்த்தனைகளை செவி மடுக்கிறார். (என்று கூறி ஷிர்க்கின் வாயல்களை ஒன்றன் பின் ஒன்றாகத் திறந்து கொண்டே சென்றார் ).

இரண்டாமவன்:

அறிஞர் அப்துல்லாஹ் இப்னு ஜப்ரீன் என்னிடம் கூறிய ஒரு நிகழ்ச்சி இது: நான் அரபாவில் தங்கியிருந்த வேலையில் மக்களெல்லாம் அழுதவண்ணம் பிரார்த்தனையில் ஈடுபட்டிருந்தனர். வெள்ளை நிற இஹ்ராம் ஆடையால் மேனிகள் மூடப்பட்டிருந்த அந்த காட்சி பார்ப்பதற்கே இன்பமாயிருந்தது. தமது கைகளை உயர்த்தி அரசர்களுக்கெல்லாம் அரசனான மிக அறிந்தோனாகிய அல்லாஹ்விடம் பிரார்த்தித்தவர்களாக இருக்கின்றனர். நாமும் அச்சத்துடனும் பணிவுடனும் அல்லாஹ்வின் அருள் வானத்திலிருந்து இறங்கவேண்டுமென பிரார்த்தித்துக் கொண்டிருக்கிறோம். அப்போது வயது முதிர்ந்த ஒருவரின் பக்கம் எனது பார்வை திரும்பியது, உடல் நிலை பலவீனமுற்றவராக, முதுகு கூனியவராக, எலும்புகள் தளர்ச்சியடைந்தவராக இருக்கும் அவர் அல்லாஹ்வின் நல்லடியாரே, என எவரையோ ஒரு அவ்லியாவின் பெயரைக் கூறி அழைத்து 'எனது துன்பங்களை நீக்கும் படி நான் உம்மிடம் கேட்கிறேன், எனக்குப் பரிந்துரை செய்யுங்கள், எனக்கு அருள் புரியுங்கள்' என்று இறைஞ்சுகின்றார், அழுகிறார், கண்ணீர் வடிக்கிறார். இதைப் பார்த்த எனது உடல் நடுங்குகிறது, எனது ரோமங்கள் சிலிர்க்கின்றன. நான் அவரிடம் 'நண்பரே அல்லாஹ்வை அஞ்சிக் கொள்வீராக அல்லாஹ் அல்லாதவர்களை எவ்வாறு அழைப்பீர்? அல்லாஹ் அல்லாதவர்களிடம் எப்படித் தேவைகளை கேட்பீர்? உன்னைப்போன்று படைக்கப்பட்ட ஒரு அடிமையிடம் எப்படிப் பிரார்த்திப்பீர்? உனது பிரார்தனையை அவரால் செவிமடுக்க முடியாது அதற்குப் பதிலளிக்கவும் அவரால் முடியாது. எந்த ஒரு இணை துணையற்ற ஏகனான அல்லாஹ்விடம் மாத்திரமே பிரார்த்தனை புரிவீராக என்று அவருக்கு நல்லுபதேசம் செய்தேன். பின் என்னைப் பார்த்த அவர் ஏய்ய்! வயோதிபரே! அல்லாஹ்விடத்தில் அந்த ஷைகுக்குள்ள மரியாதையை நீர் அறிய மாட்டீர். வானத்தில் இருந்து ஒரு துளி மழை பொழிவதாக இருந்தாலும் பூமியில் ஒரு புல் முளைப்பதாக இருந்தாலும்

அந்த ஷைகின் அனுமதியின்றி அது நடக்காது என உறுதியாக நம்புகிறேன் என்று அவர் கூறியதும் ...

நான் சொன்னேன் அல்லாஹ் மிக உயர்ந்தவன் நீர் அல்லாஹ்வுக்கென்று எந்த ஒரு ஆற்றலையும் விட்டு வைக்கவில்லை எல்லா ஆற்றலையும் உனது அந்த ஷைக்குக்கே கொடுத்து விட்டீரே அல்லாஹ்வைப் பயந்து கொள்வீராக என்று கூறினேன். இதை கேட்டவுடன் அவர் விருட்டென அங்கிருந்து சென்று விட்டார்.

மூன்றாமவன்... நான்காமவன்... ஐந்தாமவன்... இப்படியே செய்திகள் நீளுகின்றன. அல்லாஹ் தூய்மையானவன் படைத்தவனை விட்டு விட்டு எங்கு போய் இவர்கள் அடைக்கலம் தேடுகிறார்கள் பாருங்கள்? மரித்தோரிடம் தேவைகளை முன்வைக்கின்றனர்!!

உக்கிப்போன எலும்புகளிடம் வெறும் கட்டைகளாக இருக்கும் உடம்புகளிடம் கஷ்டங்களைப் போக்க துன்பங்களை அகற்றப்பிரார்த்திக்கின்றனர். உண்மையாளன், ஆட்சியாளர்களுக்கெல்லாம் ஆட்சியாளன், தாயின் கர்ப்பறையில் உள்ள சிசுவின் அசைவுகளைக் கூட அறியக்கூடியவன்-- துன்பத்தில் இருப்போரின் அழைப்பை எல்லாம் செவிமடுக்கக்கூடியவன்- தனது அடியார்கள் தன்னிடமல்லாது வேறுயாரிடமும் பிரார்த்திப்பதை ஒரு போதும் விரும்பாதவன்- அவனை விட்டு இவர்கள் எங்கே செல்கின்றனர்!!

இச் சமுதாயத்தின் நிலையை எண்ணிப்பார்க்கும் போது கண்கள் கண்ணீர் வடிக்கின்றன. உள்ளம் படபடக்கின்றது. உமது பார்வையை இஸ்லாமிய நாடுகளின் பக்கம் செலுத்தினால் தர்காக்களை, சமாதிகளை, உடல்கள் மக்கிப்போனவர்களின் கப்றுகளைப் புனிதப்படுத்துவதையும், கஷ்டங்கள் சோதனைகள் என்று வரும்போது சிறியவர் பெரியவர் என்ற வயது பேதமின்றி அனைவரும் அவைகள் முன்னிலையில் மண்டியிடும் அவலக்காட்சிகளையும் காணலாம். மௌட்டீகத்திலேயே அவர்கள் சிறுபிராயத்திலிருந்து வளர்த்தெடுக்கப்படுகின்றனர் அந்த நம்பிக்கையிலேயே வயது முதிரும் வரை வாழ்ந்து பின் இறந்து மடிகின்றனர்...

**இந்த சிற்றேட்டில் பதியப்படும் வார்த்தைகள் இவ்வாறானவர்களுக்கு இரகசியமான-- பகிரங்கமான அழைப்பாகவும், ஷிர்க் எனும் இருளில் மூழ்கித் தங்களை அழித்துக் கொள்ள முயலும் ஆண்களுக்கும், பெண்களுக்கும் பகிரங்க அரைகூவலுமாகும் என்று அல்லாஹ்வின் மீது சத்தியமிட்டுக் கூறுகின்றேன். தவ்ஹீத் எனும் வெற்றிக் கப்பலில் ஏறிக் கொள்ளாமல் இணைவைப்பாளர்களாகவே மரணித்துவிட்ட அவர்கள் தங்களை முஸ்லிம்களென எண்ணிக்கொண்டிருந்தார்கள்.**

**நிச்சயமாக இது ஏகத்துவத்தின் கப்பலாகும். இது நூஹ் நபியின் கப்பலைப்போன்றது அதில் ஏறியவர் வெற்றி பெற்றுவிட்டார். எவர் அதில் ஏற வில்லையோ அவர் அழிந்து விட்டவராவார். எத்தனை முஸ்லிம் நாடுகளில் - அங்கு வாழும் நமது உறவினர்கள், தோழர்கள், அயலவர்கள் உலக வாழ்க்கையில் மறுமைக்கான அனைத்து முயற்சிகளிலும் வழிதவறி விட்டு நாம் செய்வது தான் சரியென எண்ணிக் கொண்டிருக்கிறார்கள்.**

**அல்லாஹ்வை மாத்திரம் வணங்கி வழிபட்டு, அவனுக்கு எந்த ஒரு இணையையும் கற்பிக்கக்கூடாது என அனைவருக்கும் அறைகூவல் விடுப்பதற்கே இந்நூல்.**

**டாக்டர் முஹம்மத் இப்னு**
**அப்துர் ரஹ்மான் அல் உரை∴பி**
email:- arefe@arefe.com
**த. பெ. 151597, ரியாத் 11775**
**ஸவுதி அரேபியா.**

## மொழிபெயர்தோனின் உரை:

வானங்கள், பூமி, சூரியன், சந்திரன், வேறு கோள்கள், மற்றும் அனைத்து ஜீவராசிகளும் படைக்கப்பட்டிருப்பது, இந்த உலகம் இயங்கிக்கொண்டிருப்பது, மனித சமூகத்திற்கு வழிகாட்டுவதற்கு இறைத்தூதர்கள் அனுப்பப்பட்டது, வேத வழிகாட்டுதல்கள் அருளப்பட்டது அனைத்தும் ஓரிறைக் கொள்கையை நிலைநிறுத்துவதற்காகவே.

அல்லாஹ் தனது திருமறையில்: 'வானங்களையும், பூமியையும் படைத்திருப்பதிலும் இரவு, பகல் மாறி மாறி வருவதிலும் அறிவுடைய மக்களுக்குப் பல சான்றுகள் உள்ளன. அவர்கள் நின்றும், அமர்ந்தும், படுத்த நிலையிலும் அல்லாஹ்வை நினைப்பார்கள். வானங்கள் மற்றும் பூமி படைக்கப்பட்டது குறித்துச் சிந்திப்பார்கள். எங்கள் இறைவா! இதை நீ வீணாகப் படைக்கவில்லை. நீ தூயவன். எனவே நரக வேதனையிலிருந்து எங்களைக் காப்பாற்றுவாயாக!' (என்று அவர்கள் கூறுவார்கள்). (ஆலு இம்ரான்: 190, 191).

மற்றோர் இடத்தில்: 'ஏழு வானங்களும், பூமியும், அவற்றில் உள்ளவைகளும் அவனைத் துதிக்கின்றன. அவனைப் போற்றிப் புகழாத எதுவுமே இல்லை. ஆயினும் அவை துதிப்பதைப் புரிந்து கொள்ள மாட்டீர்கள்! அவன் சகிப்புத் தன்மையுடையவன், மன்னிப்பவன்' (பனூ இஸ்ராயீல்: 44).

'என்னைத் தவிர வணக்கத்திற் குரியவன் வேறு யாருமில்லை: எனவே என்னையே வணங்குங்கள்! என்பதை அறிவிக்காமல் (நபியே) உமக்கு முன் எந்தத் தூதரையும் நாம் அனுப்பியதில்லை' (அல் அன்பியா: 25).
ஒவ்வொரு சமூகத்திலும் திட்டமாக நாம் ஒரு தூதரை அனுப்பியிருக்கின்றோம். (அத்தூதர் அச்சமூகத்தவர்களிடம்) அல்லாஹ்வேயே வணங்குங்கள். (அல்லாஹ் அல்லாத ஷைத்தான்களாகிய அனைத்து) தாவூத்திலிருந்தும் விலகிக்கொள்ளுங்கள் (என்று கூறினார்கள்). (அந்நஹ்ல் - 16:36).

மேற்குறிப்பிடப்பட்ட அனைத்து வசனங்களும் ஓரிறைக்கொள்கையின் அவசியத்தை தெளிவுபடுத்தும் வசனங்களாகும். இதை சரியாக முஸ்லிம்

சமூகத்தின் பெரும்பாலானவர்களால் புரிந்து கொள்ளப்படவில்லை என்பது வேதனைக்குரிய விடயமாகும். ஓரிறைக்கொள்கையை உறுதி செய்யாதவரை ஒருவரது நல்லறன்கள் ஏற்றுக்கொள்ளப்படமாட்டாது என்பது அதிகமான முஸ்லிம்களால் அறியப்படாத உண்மையாகும்.

ஆயிரத்திற்கு ஐம்பது வருடங்கள் குறைவாக ஏகத்துவப் பிரச்சாரத்திற்காக தனது வாழ்நாளை அர்ப்பணித்த நூஹ் (அலை) அவர்கள், மக்களை இரவுப்பகலாக ஓரிறைக்கொள்கையின் பால் அழைத்தார்கள். அவர்களை ஏற்றுக்கொண்டவர்களில் எவர்களெல்லாம் அந்தக்கப்பலில் ஏறிக்கொண்டார்களோ அவர்கள் அனைவரும் வெற்றிபெற்றார்கள். ஓரிறைக்கொள்கையை ஏற்றுக்கொள்ளாத மற்ற அனைவரும் ஏன் அவரது மனைவி, மகன்கூட அழிந்துபோனார்கள்.

முஸ்லிம் சமூகத்தை ஓரிறைக்கொள்கையெனும் அந்த வெற்றிக்கப்பலில் ஏறுவதற்குரிய அறைகூவலே இந்நூல். ஏகத்துவத்தின் அவசியத்தை எடுத்துச்சொல்லும் இந்நூல், இஸ்லாத்திற்கு எதிரான பெரும்பாவங்கள், முஸ்லிம் சமூகத்தில் ஷிர்க் பரவுவதற்கான காரணிகள், இஸ்லாத்தை விட்டு வெளியேற்றும் செயல்கள், சுவர்க்கத்தை ஹராமாக்கக்கூடிய நரகத்தை நிரந்தர பரிசாக பெற்றுத்தரக்கூடிய ஷிர்க் போன்ற விடயங்களை தெளிவுபடுத்துகிறது. இந்நூல் மொழிபெயர்க்கப்படவேண்டிய ஒரு நூல். எனவே எனது சக்திக்குட்பட்ட வகையில் எளிய தமிழில் மொழியாக்கம் செய்துள்ளேன். தமிழறிந்த சகோதரர்கள் அனைவரும் இதைப்படித்து பயன்பெறவேண்டுமென அல்லாஹ்வைப் பிரார்த்திக்கின்றேன். இதை சரிப்பார்த்துத் தந்த மௌலவி ஜலீல் மதனி அவர்களுக்கும், மற்றும் ஏனைய சகோதரர்களுக்கும் அல்லாஹ் அருள்புரிவானாக! இம்மொழிபெயர்ப்பில் என்னையறியாமல் ஏதேனும் தவறுகள் ஏற்பட்டிருப்பின் அதனை சுட்டிக்காட்டுமாறு அன்புடன் கேட்டுக்கொள்கின்றேன்.

தாங்களின் இஸ்லாமிய ஊழியன்
முஹம்மத் அஸ்ஹர் முஹம்மத் யூசுப் ஸீலானி
இஸ்லாமிய அழைப்பாளன்
அல்-ஜுபைல் இஸ்லாமிய அழைப்பு மற்றும்
வழிகாட்டல் நிலையம்.

## அலை மோதும் கடல்

இன்றைய முஸ்லிம் உலகம் இணைவைப்பாளர்களால் நிறைந்து வழிகிறது. ஒருவன் சிலைகளை அழைக்கிறான், மற்றொருவன் தர்ஹாக்களைப் பூஜிக்கிறான், மூன்றாமவன் அவனைப் போன்ற மனிதனுக்கு சிரம் வணங்குகிறான், நான்காமவன் மரத்தைப் புனிதப்படுத்துகிறான். அன்றைய ஜாஹிலிய்யாக் காலத்தில் அரபுக்கள், அரபுக்கள் அல்லாதவர்கள் என்ற பேதமின்றி அனைவரும் இம் மௌட்டீகத்தில் மூழ்கிக் கிடக்கும் அவலத்தை, அகிலத்தைப் படைத்தவனான அல்லாஹ் பார்க்கிறான், இப் பூமியில் அன்று ஏகத்துவ வாதிகளாகத் திகழ்ந்தவர்கள் ஒரு சில கிருஸ்தவப் பாதிரிகளே...

அந்த அறபிய பிற்போக்கு வாதிகளுக்கு மத்தியில் உள்ள பிரமுகர்களுக்குத் தலைவராக விளங்கியவர், அம்ருப்னுல் ஜமூஹ் ஆவார். அவருக்கு 'மனாப்!' என்ற பெயரில் ஒரு சிலை இருந்தது. அதற்கு முன் தலை வணங்குவதும், அதனிடம் பிரார்திப்பதும் அவரின் அன்றாட வழக்கமாக இருந்தது.

மனாப் எனும் சிலை! துன்பங்களின் போது உதவக் கூடியதும்! தேவைகளை நிறைவேற்றக் கூடியதும் என அவர் ஆழமாக நம்பினார்!

அது பலகையால் வடிவமைக்கப்பட்ட ஒரு சிலையாகும். அதை அவர் தனது மனைவி, குழந்தைகள், சொத்து செல்வங்களை விடவும் அதிகமாக நேசித்தார். அவர் அச்சிலையை அழகுபடுத்துவதற்கு, புனிதப்படுத்துவதற்கு, வாசனைத் திரவியங்களால் மணங்கமழச் செய்வதற்கென அதிக பணத்தை விரயம் செய்தார். அவருக்கு உலகக் காரியங்களில் அது மிகவும் விருப்பமாக இருந்தது. இவ்வாறே அவரது வாழ்நாளில் அறுபது வருடங்கள் கடந்தோடி விட்டன.

நபிகளார் (ஸல்) அவர்கள் மக்காவில் இருக்கும் போது முஸ்அப் இப்னு உமைர் (ரலி) அவர்களை மதீனா வாசிகளுக்கு அழைப்புப் பணி செய்வதற்காக அனுப்பிவைத்தார்கள். அம்ரிப்னு ஜமூஹுக்கு தெரியாமல் அவரது மூன்று பிள்ளைகளும், அவர்களது தாயும் இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டனர். தனது தந்தைக்கு மதீனா வந்திருக்கும் புதிய அழைப்பாளர் - போதகர் பற்றித் தெரிவிப்பதற்கு முடிவு செய்து அவருக்கு குர்ஆனையும் ஓதி

காண்பித்தனர். தந்தையே! மக்கள் அவரைப் பின்பற்றுகின்றனர், அவர் கூறும் கருத்துக்கள் மிகவும் சிறந்தவையாக இருக்கின்றன. அவரைப் பின்பற்றும் விடயத்தில் உங்களது அபிப்பிராயம் என்ன? என்று வினவினர்.

அதற்கு அவர், எனது கடவுள் மனாபுடன் ஆலோசனை செய்து! அது என்ன சொல்கிறது என்பதை கவனிக்க வேண்டும். அதன் பின்பே நான் ஒரு முடிவெடுக்க இயலும் என்று கூறினார். அதன் பின் அம்ர் சிலையின் முன்னால் எழுந்து நின்றார். அக்கால மக்கள் தமது தனிப்பட்ட விடயங்களில் தம் கடவுளிடம் ஆலோசனை செய்யும் போது அவர்களது சிலையின் பின்னால் ஓர் முதியவரை நிறுத்தி அவர்களின் தேவைகளுக்கு அவரை பதிலளிக்க வைக்கும் ஒரு மூடப்பழக்கத்தைக் கொண்டிருந்தனர்! அம்ரு பெரும் மதிப்பு வைத்திருக்கக் கூடிய மனாப் எனும் சிலையிடம் ஊன்று கோலின் உதவியுடன் வந்தார், அவரது இரு கால்களில் ஒன்று குட்டையாக (ஊனமுற்றதாக) இருந்தது, அவர் அடுத்த காலில் சாய்ந்தவராக மிக மதிப்புடன் கௌரவத்துடன் சிலையின் முன்னால் நின்றார். பின் சிலையைப் புகழ்ந்து, மனாபே! சந்தேகமின்றி எதிர்காலத்தில் நடக்கவிருப்பதை நீ அறிந்துவைத்திருக்கின்றாய். புதியதொரு மார்க்கத்தை கொண்டு வந்திருப்பதாக மக்கள் பேசிக் கொள்ளும் அந்த முஹம்மத் என்பவரை நீ அறிவாய். அவர் உனக்குத் தொல்லை தர வேண்டும் எனும் நோக்கில்தான் இவ்வாறு சொல்லித் திரிகின்றார் போலும். என்னைத் தவிர ஏனையவர்கள் உனக்குத் தீங்கு செய்யவே விரும்புகின்றனர். அவர்கள், நான் உன்னை வணங்குவதை விட்டும் என்னைத் தடுக்க முயற்சிக்கின்றனர். இந்த விடயத்தில் மனாபே! எனக்குத் தெளிவைத்தா! எனக்கு அறிவுரை கூறு என்றார். அதற்குச் சிலை எந்த ஒன்றும் பேசாமல் மௌனமாக இருந்தது. மறுபடியும் கேட்கிறார் எந்த பதிலும் இல்லை. நீ கோபமாக இருக்கிறாய் போலும்! உனது கோபம் தணியும் வரை நான் சில நாட்களுக்கு அமைதியாக இருக்கிறேன் அதன் பின்பு சொல் என்று கூறி அங்கிருந்து சென்று விடுகின்றார்.

இரவு இருளால் மூடிக் கொள்கிறது. அச்சமயத்தில் அவரது பிள்ளைகள் யாருக்கும் தெரியாமல் வெளியே வந்து அவரது சிலையைத் தூக்கிச் சென்று ஊரின் கோடியில் இருந்த ஒரு கழிவுப்பொருட்கள் மற்றும் குப்பை கூழங்களும் போடப்படும் ஒரு குழியில் போட்டு விடுகின்றனர். காலையில் பொழுது விடிந்ததும் சிலைக்குக் காணிக்கை செலுத்த அம்ரு செல்கிறார் ஆனால் அங்கு சிலை காணப்படவில்லை. உரத்தக் குரலில் யார் எனது

சிலையைக் கொண்டு சென்றது? உங்களுக்கு கேடு உண்டாவதாக! என்று கூக்குரலிடுகின்றார், புலம்புகின்றார், தலையில அடித்துக் கொண்டு கூப்பாடுபோடுகின்றார். அவரது மக்கள் எதுவும் பேசாமல் மௌனமாக இருக்கின்றனர். உடனே பதட்டமடைந்தவராக சிலையைத் தேட ஆரம்பிக்கிறார். இறுதியில் குப்பையில் அச் சிலையை தலை கீழாகக் கிடக்கக் காண்கிறார். உடனே அங்கிருந்து அதை வெளியேற்றி வாசனைத் திரவியங்களால் மணங்கமழச் செய்து மறுபடியும் அதற்குரிய இடத்தில் வைக்கிறார். அல்லாஹ்வின் மீது சத்தியமாக மனாபே! உமக்கு இவ்வாறு செய்தவர்கள் யாரென நான் அறிந்தால் அவர்களை கடுமையாகத் தண்டித்திருப்பேன் என்று சூளுரைக்கின்றார்.

அதை தொடர்ந்து அடுத்த இரவிலும் அவரது பிள்ளைகள் சிலையை எடுத்துச் சென்று அதே குப்பைக் குழியில் எறிந்தனர். காலையானதும் சிலை அதற்குரிய இடத்தில் இல்லாததைக் கண்டு கொதிக்கிறார், கோபமடைகிறார். மறு படியும் அதனைக் குப்பையில் இருந்து வெளியேற்றி சுத்தப்படுத்துகிறார், மணம் பூசுகிறார். அதன் முன் மண்டியிட்டுப் பூஜை நடத்துகின்றார்.

இந் நிகழ்வு இவ்வாறு தொடர்ச்சியாக நடைபெற்றுக் கொண்டிருந்தது. ஒரு தினம் இரவு தூங்கச் செல்வதற்கு முன் சிலைக்கு முன்னால் சென்று மனாபே! உனக்கு கேடு உண்டாகட்டும். உனக்குத் தீங்கிழைக்க விளையும் உன் எதிரிகளை ஏன் நீ தண்டிக்காமல் இருக்கின்றாய்? என்று வினாத்தொடுத்து விட்டு, பின் சிலையின் தலையில் ஒரு வாளை தொங்கவிட்டு உன்னை உனது எதிரியை விட்டு இதன் மூலம் நீயே தற்காத்துக் கொள்! என்று கூறி விட்டு அங்கிருந்து சென்று விடுகின்றார். இரவானதும் மறுபடியும் அவர்கள் வழமை போல் அச்சிலையைச் சுமந்து சென்று இறந்து போன ஒரு நாயொன்றுடன் இணைத்துக் கட்டி குப்பை கூழங்கள், இறந்த சடலங்கள் போடப்படும் ஒரு கிணற்றில் போட்டனர். முதியவர் காலையானதும் தனது அபிமானத்திற்குரிய சிலையைக் காணாததால் தேட ஆரம்பிக்கிறார். இரவு வாளுடன் வீற்றிருந்த அவரது கடவுள் இப்போது செத்த நாயுடன் பிணைக்கப்பட்டு, மலக்குழியில் பரிதாபமாய்க் கிடக்கும் அவலத்தைக் காண்கின்றார் . போதாக்குறைக்கு அவ்விடத்தில் நின்ற நரிக்கூட்டம் அந்த சிலையின் தலை மீது சிறு நீர் கழித்து அசுத்தப் படுத்திக் கொண்டிருந்தது. இதனைக் கண்ணுற்ற அவரது மனதில் அச்சிலை மீது

ஒருவித வெறுப்பும் நம்பிக்கையற்ற நிலையும் உருவாகியது. உடனே செத்த நாயுடன் கிணற்றில் வீசப்பட்டிருந்த தனது கடவுளை நோக்கி இப்படிப் பாடுகின்றார் .

أرب بال الثعلبان برأسه ؟     لقد ضل من بالت عليه الثعالب

தன் தலை மீது நரிக்கூட்டம் சிறு நீர் கழிப்பதையே பார்த்துக் கொண்டிருக்கும் இது எப்படிக் கடவுளாக முடியும். நரிக்கூட்டம் அசுத்தப் படுத்திய இச்சிலை நிச்சயமாக வழிகேட்டிலேயே இருக்கின்றது.

பின்பு அவர் அல்லாஹ்வின் சத்திய மார்க்கத்தில் நுழைகின்றார். மார்க்கத்தில் சிறந்த நல்லடியார்களில் ஒருவராகிவிட்டார்.

நெகிழ்வூட்டும் இந் நிகழ்ச்சியைப் பாருங்கள், இதன் பின்பு பத்ர் யுத்தத்திற்காக களத்திற்கு முஸ்லிம்கள் வெளியேறிச் செல்ல நாடிய வேளையில், அம்ரிப்னு ஜமூஹ் (ரலி) முதியவராகவும், உடல் ஊனமுற்றவராகவும் இருந்த காரணத்தினால் அப்போருக்குச் செல்வதை அவரது பிள்ளைகள் விரும்ப வில்லை. அவர் போருக்கு செல்வதில் உறுதியாக இருந்ததால் அவரது பிள்ளைகள் நபியவர்களிடம் விடயத்தை எடுத்துக்கூறி நபியவர்களின் பணிப்புரையின் பேரில் அவர் போருக்குச் செல்லாமல் மதீனாவில் தங்க ஏற்பாடு செய்தனர்.

உஹுத் போர் நடக்கப் போகிறது என்பதை அறிந்த அம்ரு (ரலி) போருக்குச் செல்ல ஆயத்தமாகிறார். அப்பொழுதும் அவரது பிள்ளைகள் தடுக்கின்றனர். உடனே அவர் நபியிடத்தில் சென்று அல்லாஹ்வின் தூதரே! உங்களுடன் போருக்குச் செல்வதை எனது பிள்ளைகள் தடுக்க முயல்கின்றனர் என முறையிட்டார். அதற்கு நபி (ஸல்) அவர்கள் (நீங்கள் அங்கவீனராக இருப்பதால்) அல்லாஹ் உங்களுக்கு போரில் கலந்து கொள்ளாமல் இருக்க சலுகை அளித்திருக்கிறான் எனக் கூறினார்கள்.

அதற்கவர் அல்லாஹ்வின் தூதரே! நான் இந்த ஊன்றுகோலுடன் சுவர்க்கத்தில் உலா வருவதை விரும்புகிறேன் என உணர்வுபூர்வமாகக் கூறினார். இதனைக் கேட்ட நபி (ஸல்) அவர்கள் போரில் கலந்து கொள்ள அவருக்கு அனுமதி வழங்கினார்கள், உடனே அவர் ஆயுதத்தைத் தனது கையில் ஏந்திக் கொண்டு அல்லாஹ்விடம் யா அல்லாஹ்! எனக்கு

ஷஹாதத் எனும் வீர மரணத்தை அளித்துவிடு! என்னை எனது குடும்பத்தார் வசம் மீண்டுவரச் செய்து விடாதே! என்று பிரார்த்திக்கின்றார். போர் களத்தை அடைந்த போது இரு படைகளும் சந்திக்கின்றன, போர் உக்கிரம் அடைகிறது, அம்புகள் எய்யப்படுகின்றன. அம்ர் (ரலி) எதிரிகளின் படைக்குள் நுழைந்து சிலை வணங்கிகளைத் தீர்த்துக் கட்டவேண்டும் என்ற உறுதியுடன் வாளை ஏந்தியவராக நுழைந்து போராடுகின்றார். எதிரிகளை சந்திக்கிறார் ஷஹாதத் எனும் உயரிய மரணம் அவரைத் தழுவிக்கொள்கிறது. அல்லாஹ்வின் அருளைப் பெற்ற உயர் ஷுஹதாக்களுடன் அவரும் அடக்கம் செய்யப்படுகிறார்.

இச்சம்பவம் நடைபெற்று 46 வருடங்களுக்குப் பிறகு, முஆவியா (ரலி) அவர்களின் ஆட்சிக் காலத்தில், ஷுஹதாக்கள் அடக்கப்பட்ட உஹத் மலைப் பகுதி, வெள்ளத்தால் மூழ்கடிக்கப்படுகிறது. கப்றுகள் வெள்ளத்தால் முழுமையாக மூழ்கி விடுகின்றன. ஷுஹதாக்களின் கப்றுகளைத் தோண்டியெடுத்து வேறிடத்தில் நல்லடக்கம் செய்வதற்கு முஸ்லிம்கள் எத்தனிக்கின்றார்கள். அம்ரிப்னு ஜமூஹ் (ரலி) அவர்களின் கப்ரைத் தோண்டிய போது அன்னார் தூக்கத்தில் இருப்பவரைப் போன்று காட்சியளித்தார். உடல் முழுமையாக இருந்தது. பூமி அந்த உடலின் எந்தவொரு பகுதியையும் சாப்பிடாத நிலையில் அவ்வுடலில் எந்நக் காயங்களும் ஏற்படாதவண்ணம் முழுமையாக இருந்தது. சத்தியத்தை விளங்கி அதன் பக்கம் மீண்டு விட்டதனால் அல்லாஹ் எப்படி அவரது முடிவை சிறந்ததாக ஆக்கினான் என்பதை சற்று சிந்தித்துப் பாருங்கள் சகோதரர்களே! ‘லா இலாஹ இல்லல்லாஹ்’ வணக்கத்திற்குரிய நாயன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை என்பதை ஏற்று செயல்படுத்தியதால், அல்லாஹ் தனது ஆற்றலை மறுமைக்கு முன்பு இவ்வுலகிலேயே அவர் விடயத்தில் நிகழ்த்திக் காட்டினான்.

சிந்தித்துப் பாருங்கள். அந்தக்கலிமாவுக்காகவே வானம் பூமி ஆகியன இயங்கிக் கொண்டிருக்கின்றன. இன்னும் அக்கலிமாவினை ஏற்ற இதயத்துடனேயே அனைத்து ஜீவ ராசிகளையும் படைத்திருக்கிறான். இதுவே சுவர்க்கம் நுழைவதற்குக் காரணமாக இருக்கிறது, அதற்காகவே சுவர்க்கம்- நரகம் படைக்கப்பட்டிருக்கிறது. முஃமின்- காஃபிர் என்றும் நல்லவர்-தீயவர் என்றும் அக்கலிமாவே பிரித்துக்காட்டுகிறது.

அல்லாஹ்வின் முன்னிலையில் நீர் எதை வணங்குபவர்களாக இருந்தீர்? இறைத் தூதர்களுக்கு எவ்வாறு செவிசாய்த்தீர்கள்? என அவன் கேட்கும் இரு கேள்விகளுக்கு பதில் அளிக்காமல் அடியானின் பாதங்கள் நகராது.

## வெற்றிக் கப்பல்

எத்தனை மனிதர்கள் அழிந்தவர்களோடு சேர்ந்து அழிந்து மறுமை சம்பவிக்கும் வரை இறைவனின் கோபத்திற்கும், சாபத்திற்கும் இலக்காகி மரணித்திருக்கின்றார்கள். அவர்களுக்கு சாபம் உறுதியாகி விட்டது, காரணம் அவர்கள் தௌஹீத் எனும் ஓரிறைக் கோற்பாட்டை ஏற்றுக் கொள்ளாதது தான். அல்லாஹ்தான் ஏக இறைவன், ஒவ்வொரு அடியானும் அவனிடம் அன்றி வேறுயாரிடமும் தனது காரியங்களை பொறுப்பு சாட்டக் கூடாது அல்லாஹ்வைத்தவிர வேறு எவரிடமும் அவன் நம்பிக்கை வைத்தவனாக இருக்கக் கூடாது. அவனை விடுத்து வேறு யாருக்கும் பயப்படக் கூடாது அவனுடைய பெயரைத்தவிர வேறு எவர் பெயரிலும் சத்தியம் செய்யக் கூடாது. அவனை விடுத்து வேறு எவர் பெயரிலும் நேர்ச்சை செய்யக் கூடாது. அவனிடத்தில் மாத்திரமே பாவ மன்னிப்புக் கோர வேண்டும். இவ்வாறு நடந்தால் மாத்திரமே வணக்கத்திற்குரிய நாயன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை என்று அவன் கொடுத்த உறுதி மொழியை சரியாக நிறைவேற்றியவனாகக் கருதப்படுவான். இவ் உறுதி மொழியை சரியாகச் செய்து அதற்குரிய கடமைகளை முழுமையாக நிறைவேற்றும் போதுதான் அல்லாஹ் அவனுக்கு நரகத்தை ஹராமாக்கி விடுகிறான்.

ஒருமுறை முஆத் (ரலி) அவர்கள் ஒட்டகத்தில் நபி (ஸல்) அவர்களின் பின்னால் அமர்ந்து சென்ற வேளையில் அன்னவர்கள் திடீரென பின்னால் திரும்பி முஆதே! அடியார்கள் அல்லாஹ்விற்கு செய்யவேண்டிய கடமைகள் என்னவென்று அறிவீரா? அல்லாஹ் தனது அடியார்கள் மீது செய்ய வேண்டிய கடமைகள் என்னவென்று அறிவீரா? எனக் கேட்க அல்லாஹ்வும் அவனதும் ரஸூலும் மிக அறிந்தவர்கள் என முஆத் (ரலி) சொல்கிறார். 'அடியார்கள் அல்லாஹ்விற்கு செய்ய வேண்டியது அவனுக்கு எந்த ஒன்றையும் இணையாக்காமல் அவனை வணங்குவதாகும், அல்லாஹ் அடியார்களுக்கு செய்ய வேண்டியது அவனுக்கு எந்த

**ஒன்றையும் இணையாக்காமல் இருந்தவர்களை தண்டிக்காமல் இருப்பதாகும்' என்று கூறினார்கள். (ஆதாரம்: புஹாரி).**

**ஒரு முறை அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் (ரலி) அவர்கள் நபிகளார் (ஸல்) அவர்களிடம் அல்லாஹ்வின் தூதரே! அல்லாஹ்விடத்தில் பெரும் பாவமாக கருதப்படுவது எது? எனக் கேட்டார்கள் அதற்கு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அல்லாஹ்வே உன்னைப் படைத்திருக்கும் போது அவனை விட்டுவிட்டு வேறொரு கடவுளை அவனுக்கு இணையாக்குவதாகும் என்று கூறினார்கள்.**

**உண்மைதான். ஏகத்துவத்தை நிலை நிறுத்துவதற்காகவும், எடுத்துச் சொல்வதற்காகவும் தான் இறைத் தூதர்கள் அனுப்பப்படுகின்றனர்.**
**அல்லாஹ் சொல்கிறான், 'ஒவ்வொரு சமூகத்திலும் திட்டமாக நாம் ஒரு தூதரை அனுப்பியிருக்கிறோம் (அத்தூதர் அச்சமூகத்தவர்களிடம்) அல்லாஹ்வையே வணங்குங்கள் (அல்லாஹ் அல்லாத வணங்கப்படும் ஷைத்தான்களாகிய அனைத்து) தாகூத்திலிருந்தும் விலகிக்கொள்ளுங்கள் (என்று கூறினார்கள்)' (அந்நஹ்ல் 16: 36).**

***தாகூத் என்பது: அல்லாஹ் அல்லாது வணங்கப்படக்கூடிய சிலைகள், கப்றுகள், கற்கள், மரங்கள் அனைத்தையும் குறிக்கும். ஏகத்துவம் என்பது தூதர்களின் அழைப்புப் பணியின் மணி மகுடமாகும்.***

**'(நபியே) உமக்கு முன்னர் நாம் அனுப்பி வைத்த நம்முடைய தூதர்களிடம் நாம் அல்லாஹ்வையன்றி வணங்கப்படும் வேறு தெய்வங்களை ஆக்கியிருந்தோமா? என்று நீர் கேட்பீராக!'என்று அல்லாஹ் கூறுகின்றான். (ஸுஹ்ருப் 43: 45).**

**அல்லாஹ்வின் ஏகத்துவத்தை பறை சாற்றுவதற்காக அன்றி எந்த ஒரு படைப்பினமும் படைக்கப்படவில்லை. அல்லாஹ் கூறுகிறான்: 'நான் மனித ஜின் இனங்களை என்னை வணங்குவதற்காகவே அன்றிப் படைக்கவில்லை'. (அத்தாரியாத் 51: 56).**

**எந்த நற்கிரிகைகளும் தவ்ஹீத் கொள்கையில் உறுதியான நம்பிக்கை இல்லாத பட்சத்தில் அவை மறுக்கப்பட்டு விடும். அல்லாஹ்**

தனது திருமறையில்: 'அவர்கள் (அல்லாஹ்விற்கு) இணை வைத்திருந்தால் அவர்களது நல்லறங்கள் அழிந்துவிடும்' (அல்அன்ஆம் 6:88).

எவன் ஓரிறைக் கொள்கையில் உறுதியான நம்பிக்கை கொண்டிருக்கின்றானோ அவன் வெற்றி பெற்றுவிட்டான். திர்மிதியில் இடம் பெற்றுள்ள ஒரு ஹதீஸுல் குத்ஸியில் வருவதாவது, 'ஆதமுடைய மகனே எனக்கு எந்த ஒரு இணையையும் கற்பிக்காத நிலையில் பூமியைப் போன்றளவுக்கு அதிக பாவங்களுடன் நீ என்னைச் சந்தித்தாலும் உனது பாவங்கள் அனைத்தையும் நான் மன்னித் விடுவேன்'.

ஏகத்துவத்தின் மகத்துவம் தெளிவானதாகும் அதனால்தான் நபிமார்கள் கூட அது இழக்கப்பட்டுவிடுமோ என பயந்தார்கள். ஏகத்துவவாதிகளின் தந்தையும், சிலைகளை உடைத்தவரும், புனித இறை ஆலயத்தை நிர்மானித்தவருமான, அல்லாஹ்வின் நேசத்திற்குரிய இப்ராஹீம் (அலை) அவர்களே அரசர்களுக்கெல்லாம் அரசனான அல்லாஹ்விடம் 'என்னையும் என் மக்களையும் சிலைகளை வணங்குவதை விட்டு தூரப்படுத்திவிடுவாயாக' எனப் பிரார்த்தித்தார்கள். (இப்றாஹீம் 14:35).

இப்றாஹீம் நபியே, இந்தச் சோதனையிலிருந்து பாதுகாப்புத் தேடினாரென்றால் அவருக்கு பின்னுள்ளவர்கள் எப்படி இதை விட்டு அச்சமற்றிருக்க முடியும்?

## வழி கேட்டின் ஆரம்பம்

ஷிர்கின் ஆரம்ப விதைகள் தூவப்பட்டது நூஹ் (அலை) அவர்களது சமுதாயத்தில்தான். நூஹ் (அலை) அச்சமுதாயத்திற்கு இறைத் தூதராக அனுப்பப்படுகிறார், அவர் அவர்களை ஷிர்கை விட்டு முழு மூச்சாக தடுக்கிறார் எவர் அல்லாஹ்விற்கு வழிப்பட்டு, அவனது ஏகத்துவத்தை பரைச்சாற்றுகிறாரோ அவன் வெற்றிபெற்றுவிட்டான்' என முழங்குகிறார். எவர்கள் தொடர்ச்சியாக இணைவைப்பில் இருந்தார்களோ அவர்கள், தூபான் என்ற வெள்ளத்தில் அழிக்கப்பட்டார்கள். நூஹ் நபிக்குப் பின் பூமியில் உயிர் வாழ்ந்தவர்கள் சில காலம் ஏகத்துவத்தில் நிலைத்திருந்தார்கள். ஆனால் மறுபடியும் ஷைத்தான் குழப்பங்கள் செய்ய ஆரம்பிக்கிறான், மறுபடியும் அடியார்களுக்கு மத்தியில ஷிர்க் பரவுகின்றது.

கருணையாளனான அல்லாஹ் நன்மாராயம் கூறக்கூடியவர்களாகவும், அச்சமூட்டி எச்சரிக்கை செய்யக்கூடியவர்களாகவும் இறைத்தூதர்களை - இறுதி நபியான முஹம்மத் (ஸல்) அவர்கள் வரும் வரைக்கும் தொடர்ச்சியாக அனுப்பிக் கொண்டே இருந்தான். நபியவர்களும் ஏகத்துவத்தின்பால் மக்களை அழைத்தார்கள். இணைவைப்பாளர்களுக்கு எதிராகப் போராடினார்கள், சிலைகளை உடைத்தெறிந்தார்கள். சமுதாயம் அவர்களுக்குப் பின் ஏகத்துவத்தில் நிலைத்திருந்தது. மறுபடியும் சமுதாயத்தில் அவ்லியாக்கள், நல்லவர்கள், இறை நேசச் செல்வர்கள் என்ற பெயரால் ஷிர்க் தலை தூக்க ஆரம்பித்தது. அவர்களுடைய கப்றுகள் மீது கட்டடங்கள் கட்டப்பட்டன, அவர்கள் பெயரில் பல தர்ஹாக்களும், நினைவு மண்டபங்களும் நிர்மானிக்கப்பட்டன. அவைகளிடம் பிரார்த்திப்பதும், உதவி தேடுவதும், அவ்லியாக்களுக்காக அறுத்துப் பலியிடுவதும், நேர்ச்சை செய்வதும் இப்படி எத்தனையோ ஷிர்க்குகள் 'இபாதத்கள்' என்ற போர்வையில் அரங்கேறின. இது போன்ற ஷிர்க்குகளுக்கு அவ்லியாக்களை நேசிப்பதென்றும், நல்லடியார்களிடம் உதவி தேடுவதென்றும் நியாயங்கள் கற்பிக்கப்பட்டன. இவர்களின் அடக்கஸ்தலங்களை புனிதப்படுத்துவதன் மூலம்தான் இவர்களை நேசித்தவர்களாக ஆக முடியும் என நினைத்துவிட்டார்கள். இன்னும் மேற்படி ஷிர்க்கான விடயங்களை அவர்கள் பெயரில் அரங்கேற்றுவதன் மூலம் அவர்கள் நம்மை அல்லாஹ்வின் பக்கம் நெருக்கி வைப்பார்கள் என்றும் தப்புக் கணக்குப் போட்டு விட்டார்கள். முன்சென்ற காலங்களில் வாழ்ந்த இணைவைப்பாளர்களும் அவர்களுடைய சிலைகளின் விடயத்தில் இதே வாதத்தையே முன் வைத்தார்கள் என்பதைத் தற்கால நூதன முஷ்ரிக்குகள் மறந்து விட்டார்கள் போலும்.

அவர்கள் 'அல்லாஹ்வின் பக்கம் நம்மை அவர்கள் நெருக்கி வைப்பார்கள் என்பதற்கே அன்றி நாம் அவர்களை வணங்கவில்லை'. (ஸுமர் 39:3).

என்று கூறித்தான் தமது தவறுகளை நியாயப்படுத்தினர். இதில் வியப்புக்குரியது என்ன வென்றால் நாம் அவர்கள் செய்யும் ஷிர்க்கைக் கண்டித்து நிராகரிக்கும் போது அவர்கள் 'நாம் ஏகத்துவ வாதிகள்- இறைவனுக்கு முழுமையாக கட்டுப்பட்டவர்கள். என்று கூறுகின்றனர். அல்லாஹ் ஒருவன் இருக்கின்றான் என்று அவனது உள்ளம் நம்பி விட்டால் அதுதான் தவ்ஹீத். அதன் பின் எந்த அவ்லியாவிடம் வேண்டுமானாலும் உதவி தேடலாம் என்று இவர்கள் நினைத்து விட்டார்கள் போலும். இது

தௌஹீத் பற்றிய இவர்களது குறுகிய தவறான கருத்தாகும். இவர்களின் கொள்கைப்படி அபூலஹப், அபூஜஹ்ல் போன்றவர்களும் ஏகத்துவவாதிகளாகத்தான் கருதப்பட வேண்டும், ஏனெனில் அவர்களும் அல்லாஹ் தான் மகத்தான இறைவன் என்றும், வணங்கப்படுவதற்கு தகுதியானவன் என்றும் நம்பியதோடு, இன்னும் பல கடவுள்களை அவனுக்கு இணையாக்கினார்கள் அவைகளிடம் உதவி தேடினார்கள், அவர்களும்-இவர்கள் அல்லாஹ்விடம் நம்மை நெருக்கி வைப்பார்கள், அவனிடம் பரிந்துரை செய்வார்கள் என்று தான் எண்ணியிருந்தார்கள்.

## நெகிழ்வூட்டும் ஓர் உண்மைச் சம்பவம்

பைஹகீ எனும் கிரந்தத்தில் ஹஸன் தரத்தில் பதிவு செய்யப்பட்டுள்ள ஒரு ஹதீஸ்: அதாவது நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் மக்களிடம் அழைப்புப் பணி செய்த போது நபியை விட்டு மக்களை தூரப்படுத்த வேண்டும் என காபிர்கள் பல சதிகளை மேற்கொண்டனர் அதாவது, அவர்கள் முஹம்மத் ஒரு சூனியக்காரர், ஜோஷியக்காரர், பைத்தியக்காரர், என்றெல்லாம் மக்கள் மத்தியில் கூறித்திரிந்தார்கள். என்ற போதிலும் நபி (ஸல்) அவர்களை நபி என ஏற்றுக்கொண்டு பின்பற்றிய மக்களின் எண்ணிக்கை நாளுக்கு நாள் அதிகரித்ததே தவிர குறையவில்லை. உலகத்துடைய இன்பங்களைக் காட்டியாவது நபியை மயக்கவேண்டும், திசைதிருப்பவேண்டும் என ஆலோசனை செய்த காபிர்கள், அவர்களில் பேச்சில் தலை சிறந்தவனான ஹுஸைன் இப்னுல் முன்திர் அல் குஸாஈ என்பவனை நபியிடம் அனுப்பி வைத்தனர்.

நபியிடம் வந்த அவன் முஹம்மதே! நீர் கூறி வரும் புதிய கொள்கையின் மூலம் நமது கூட்டமைப்பைப் பிரித்துவிட்டீர்! நமக்கு மத்தியில் பிளவை ஏற்படுத்தி விட்டீர், இவ்வாறு செய்தீர் அவ்வாறு செய்தீர் என அடுக்கிக் கொண்டே சென்றான். பின்னர் கூறினான். நீர் சொத்து செல்வத்தை விரும்புவதாக இருந்தால் நாம் உமக்கு சொத்து செல்வத்தை சேகரித்துத் தருகிறோம் நம்மிடத்திலேயே மிகப்பெரிய செல்வந்தராக உம்மை ஆக்குகின்றோம். அல்லது அழகிய பெண்களை அனுபவிப்பது உமது விருப்பமாக இருந்தால், நாம் உமக்கு அழகிய பெண்களை மணமுடித்து தருகிறோம், நீர் பதவியை விரும்புவதாக இருந்தால், நாம் உமக்கு பதவியை தருகிறோம் எதை விரும்புகின்றீர்? உமது ஆசை என்ன?

உடனே நிறைவேற்றுகின்றோம் என்று கூறினான். இந்த ஆசை வார்தைகளையெல்லாம் மௌனமாக கேட்டுக்கொண்டிருந்த நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், அவன் பேசி முடித்த பின், இம்ரானின் தந்தையே நீர் பேசி முடித்துவிட்டீரா? எனக் கேட்டார்கள் ஆம் என்று அவன் சொன்ன பொழுது நான் கேட்கக்கூடியவைகளுக்கு முதலில் பதில் அளிப்பீராக! என்று கூறினார்கள். அதற்கு அவன், கேளும் என்று சொன்னான்.

இம்ரானின் தந்தையே! நீர் எத்தனை கடவுள்களை வணங்குகிறீர்? என்றார்கள். அதற்கு அவன் நான் ஏழு கடவுள்களை வணங்குகிறேன், ஆறு பூமியிலும்! ஒன்று( அல்லாஹ்வாகிய) வானத்திலிருக்கும் கடவுளுமாகும் என்று பதிலளித்தான். அதற்கு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் செல்வங்கள் அழிந்து விட்டால் எந்தக் கடவுளை அழைப்பீர்? என்றார்கள், அவன் வானத்தில் உள்ளவனை(அல்லாஹ்வை) அழைப்பேன் என்றான். மழை பொழிய வில்லையானால் எந்தக் கடவுளை அழைப்பீர்? என்று கேட்க அவன் வானத்தில் உள்ளவனையே அழைப்பேன் என்றான். குடும்பத்தினர் பசியால் பட்டினியால் வாடும் பொழுது எந்தக் கடவுளை அழைப்பீர்? என்று கேட்க அதற்கும் அவன் வானத்தில் உள்ளவனையே அழைப்பேன் என்று பதிலளித்தான். தொடர்ந்து நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அவனிடம் நீ உன் தேவைகளைக் கூறிப் பிரார்த்திக்கும் போது உமக்கு அனைத்து கடவுள்களும் பதிலளிக்கின்றனரா? அல்லது ஒருவன்(அல்லாஹ்) மாத்திரம் பதிலளிக்கின்றானா? என்று வினவினார்கள். அதற்கு அவன் அல்லாஹ் ஒருவன் மாத்திரம் தான் பதிலளிக்கிறான் என சொன்னான். நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், உமக்கு ஒருவன் தான் பதிலளிக்கிறான், ஒருவன் தான் அருள் புரிகிறான் என்று தெரிந்து கொண்டே அவனுக்கு நன்றி செலுத்துவதில் ஏன் அவனல்லாத வேறு போலிக் கடவுள்களைக் கூட்டாக்குகிறீர்? அந்தக் கடவுளர்கள் உன் விடயத்தில் ஒரே கடவுளாகிய அல்லாஹ்வை மிகைத்துவிடும் சக்தியுள்ளவர்கள் என அச்சம் கொள்கிறீரா? என்று ஒரு போடு போட்டார்கள். அதற்கு ஹுஸைன் அவர்கள் அதற்கு எப்படி சக்தி பெற முடியும் ஒரு போதும் சக்தி பெற முடியாது என்று கூறினான். நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் ஹுஸைனே! பல தெய்வக் கொள்கையை விட்டு விடுவீராக இஸ்லாத்தை ஏற்றுக் கொள்வீராக. அல்லாஹ்விடத்தில் உமக்குப் பயன் தரக்கூடிய சில வார்த்தைகளைக் கற்றுத் தருகிறேன் என்று கூறினார்கள்.

## உண்மை நிலை

ஆம் அவர்கள் லாத், உஸ்ஸா போன்ற சிலைகளை வணங்கக் கூடியவர்களாக இருந்தார்கள். எனினும் அவையெல்லாம் மகத்தான இறைவன் அல்லாஹ்வின் பால் நெருக்கி வைக்கக்கூடிய உப தெய்வங்களாகவே அவைகளை நம்பி வந்தனர். அல்லாஹ்விடத்தில் இவைகள் பரிந்து பேசும் என்ற நம்பிக்கையில் பல விதமான வணக்க வழிபாடுகளை அவைகளுக்குச் செய்து வந்தனர். அல்லாஹுத்தஆலா இவர்களது கூற்றை அல்குர்ஆனில் இவ்வாறு கூறுகின்றான்... 'இவைகள் நம்மை அல்லாஹ்வின் பால் நெருக்கி வைக்கும் என்பதற்காகவே அன்றி நாம் வணங்கவில்லை'. (ஸுமர் 39:3).

அல்லாஹ் தான் படைப்பவன், உணவளிப்பவன், உயிர் கொடுப்பவன், மரணிக்கச் செய்பவன் என்பதையெல்லாம் உறுதியாக அவர்கள் நம்பினர். 'மேலும் வானங்களையும் பூமியையும் சிருஷ்டித்தவன் யார்? என்று நபியே நீர் அவர்களை கேட்பீராயின் அ(தற்க)வர்கள் அல்லாஹ் என்று நிச்சயமாக கூறுவார்கள் (அது பற்றி) புகழனைத்தும் அல்லாஹ்வுக்கே என்று கூறுவீராக எனினும் அவர்களில் பெரும்பாலானோர் (இரட்சகனை இவ்வாறு புகழ்ந்து துதி செய்ய) அறிய மாட்டார்கள்' (லுக்மான் 31:25).

அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள் 'நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் குதிரைப் படையை நஜ்த் பக்கம் அதன் நிலவரங்களை அறிந்து வர அனுப்பி வைத்தார்கள். அவர்கள் தமது வாகனங்களில் சுற்றி வந்து கொண்டிருந்த வேலையில் இஹ்ராம் உடை அணிந்து வாளைத் தொங்க விட்ட ஒரு மனிதரைக் கண்டார்கள். அவர் உம்ராச் செய்யப் புறப்பட்டு தல்பியாக்கூறிய வண்ணம் இருந்தார். அவர் தல்பியா சொன்ன விதம் வித்தியாசமாக இருந்தது. 'லப்பைக் அல்லாஹும்ம லப்பைக் லா ஷரீக லக இல்லா ஷரீகன் ஹுவலக தம்லிகுஹு வமாமலக்'. இல்லா ஷரீகன் ஹுவ லக தம்லிகுஹு வமா மலக், என்பதை திரும்ப திரும்ப சொன்ன வண்ணம் இருக்கிறார். அதன் கருத்தாவது... நான் உன் சமூகம் வந்து விட்டேன் நாயனே! நான் உன் சமூகம் வந்து விட்டேன்! உனக்கு எந்த ஒரு இணையும் இல்லை. ஒரேயொருவரைத் தவிர அவர் மாத்திரம் உனக்கு நிகரானவர் என்று கூறிக் கொண்டிருக்கக் கண்டனர். நபித்தோழர்கள் அவனை நெருங்கி 'எங்கு செல்கின்றாய்' என்று கேட்டனர். அவன் புனித

**மக்காவுக்கு செல்வதாகக் கூறினான். மேலும் அவனை விசாரித்தபோது அந்தப்பபகுதியில் தன்னை நபியாக வாதிட்டுக் கொண்டிருக்கக்கூடிய பொய்யன் *முஸைலமாவின்* ஊர்ப் பக்கமிருந்து அவன் வந்ததாகக் கூறினான். உடனே நபித் தோழர்கள் அவனைக் கைதியாகப் பிடித்து ஒரு கயிற்றால் கட்டி மதீனாவுக்கு கொண்டு வந்தனர். அவனை நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்கு முன் அவன் விடயத்தில் தீர்ப்பளிப்பதற்காகக் கொண்டு போய் நிறுத்தினர். நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அவனை பார்த்த போது நபித்தோழர்களிடம் நீங்கள் சிறை பிடித்து வந்த இவன் யார் என நீங்கள் அறிவீரா? இவன்தான் 'ஸுமாமதிப்னு அஸால்' ஹனீபா கோத்தினரின் தலைவன். எனக்கூறினார்கள்.**

**பின் அவனை மஸ்ஜிதின் ஒரு தூனில் கட்டுமாறும் அவனை நல்ல முறையில் கவனித்துக் கொள்ளுமாறும் பணித்தார்கள். அவனுக்குரிய உரிமைகள் பேணப்பட்டன. நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தனது வீட்டிற்குச் சென்று தன்னிடமுள்ள உணவில் அவனுக்கும் அனுப்பி வைத்தார்கள். ஸுமாமா ஏறி வந்த குதிரையினையும் நல்ல முறையில் கவனித்து புல் மேய விடுமாறும், தினமும் காலையிலும் மாலையிலும் அதை அவனுக்கு முன்னால் கொண்டு வந்து காட்டுமாறும் கட்டளையிட்டார்கள். அதையும் மஸ்ஜிதின் தூண்களில் ஒன்றில் கட்டப்பட்டது. நபி (ஸல்) அவர்கள் ஸுமாமாவே. எப்படி நிலவரங்கள்? என அவருக்கு இஸ்லாத்தை ஏற்றுக் கொள்ளும் எண்ணம் யாதாவது உள்ளதா? என அறியும் எண்ணத்தில் கேட்கிறார்கள். முஹம்மதே! நீங்கள் ஒன்று என்னைக் கொன்று விட முடியும். அப்படிச் செய்தால் என் கோத்திரத்தினர் அதற்காக நிச்சயம் உம்மைப் பழி வாங்குவார்கள், நீர் எனக்கு கருணை காட்டி மன்னித்து விட்டால் நான் அதற்கு நன்றி தெரிவிக்க கடமைப் பட்டுள்ளேன், அல்லது நீர் என்னிடம் பணத்தை எதிர்பார்ப்பவராக இருந்தால் விரும்பியதைக் கேட்கலாம் தருகின்றேன் என்று கூறினார்.**

**நபியவர்கள் மறு நாள் வரை அவனை விட்டு விட்டார்கள் பின்பு மறுதினம் அவனிடம் ஸுமாமாவே உனது நிலமை என்ன? என்று வினவினார்கள். அதற்கவன் முஹம்மதே! நீங்கள் ஒன்று என்னைக் கொன்று விட முடியும். அப்படிச் செய்தால் என் கோத்திரத்தினர் அதற்காக நிச்சயம் உம்மைப் பழி வாங்குவார்கள், நீர் எனக்கு கருணை காட்டி மன்னித்து விட்டால் நான் அதற்கு நன்றி தெரிவிக்க கடமைப் பட்டுள்ளேன், அல்லது நீர் என்னிடம் பணத்தை எதிர்பார்ப்பவராக இருந்தால் விரும்பியதைக் கேட்கலாம்.**

தருகின்றேன் என்று கூறினார். நபி (ஸல்) அவர்கள் மறுநாள் வரை அவனை விட்டு விட்டார்கள். அடுத்த நாள் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் ஸுமாமாவே என்ன நிலமை என்று கேட்கிறார்கள். நான் சொன்னதைத் தான் இப்போதும் சொல்கிறேன் என அவன் பதிலளித்தான். தினமும் அவன் முஸ்லிம்களின் தொழுகையைப் பார்க்கிறான், உரைகளைக் கேட்கிறான், முஸ்லிம்களில் உபசரிப்பைக் காண்கிறான். இவற்றையெல்லாம் கண்ணுற்றும் கூட அவனது உள்ளத்தில் இஸ்லாத்தைப் பற்றிய நல்லெண்ணம் வராததை அறிந்த நபியவர்கள் அவனை அவிழ்த்து விடுமாறு கட்டளையிடுகிறார்கள்.

அவன் அவிழ்த்து விடப்படுகிறான், அவனது வாகனம் அவனிடம் ஒப்படைக்கப்படுகிறது. உடனே ஸுமாமா மஸ்ஜிதின் அன்மையில் இருந்த ஒரு கிணற்றிக்குச் சென்று குளிக்கிறான் பின் மஸ்ஜிதுக்குள் நுழைந்து 'அஷ்ஹது அன்லாஇலாஹ இல்லல்லாஹு வஅன்ன முஹம்மதர் ரஸுலுல்லாஹ்' வணக்கத்திற்குரிய நாயன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை என்றும் முஹம்மத் அல்லாஹ்வின் தூதர் என்றும் நான் சாட்சி கூறுகிறேன். முஹம்மதே! அல்லாஹ்வின் மீது சத்தியமாக! இந்த பூமியில் எனக்கு மிக வெறுப்பான ஒரு முகம் இருந்ததென்றால் அது உம்முடைய முகமாகத்தான் இருந்தது, இப்பொழுது எனக்கு மிக விருப்பமான முகம் ஒன்று இருக்குமானால் அது உம்முடைய முகம் தான். அல்லாஹ்வின் மீது ஆணையாக இந்த பூமியில் எனக்கு ஒரு வெறுப்பான மார்க்கம் இருந்ததென்றால் அது உம்முடைய மார்க்கம் தான் ஆனால் அது இப்பொழுது எனக்கு மிகப் பிரியமான மார்க்கமாக மாறிவிட்டது. அல்லாஹ்வின் மீது ஆணையாக இந்தப் பூமியில் எனக்கு ஒரு வெறுப்பான ஊர் இருந்ததென்றால் அது உங்கள் ஊர் மதீனாதான் ஆனால் அது இப்பொழுது எனக்கு மிக விருப்பமான ஊராக மாறிவிட்டது என்று கூறினார். பின்பு அல்லாஹ்வின் தூதரே எனது குதிரையில் நான் உம்ராவை நிறைவேற்ற செல்ல விரும்பியே புறப்பட்டு வந்தேன். இது விடயத்தில் உங்கள் அபிப்பிராயம் என்ன? என்று கேட்டார். நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அவருக்கு அனுமதி வழங்கி வாழ்த்தி வழி அனுப்பினார்கள்.

தல்பியாவைச் சொன்னவராக மக்காவை நோக்கி தனது பிரயாணத்தை ஆரம்பிக்கிறார் ஸுமாமா... இப்பொழுது அவரது தல்பியாவில் ஏகத்துவம்-ஓரிறைக் கொள்கை எதிரொலிக்கின்றது. அல்லாஹ்வே! உனது சமூகம் வந்து விட்டேன்! உனக்கு எந்த இணையும் இல்லை உனது சமூகம் வந்து

விட்டேன்! உனக்கு எந்த இணையுமில்லை. அல்லாஹ்வுடன் இணைத்து வணங்கப்பப்படுவதற்கு, சிரம்பணிவதற்கு, தொழுவதற்கு எந்த சமாதியுமில்லை எந்தச் சிலையுமில்லை என்று வீரத்துடன் முழங்கிச் செல்கின்றார். சுமாமா (ரலி) மக்காவிற்குள் நுழைந்ததும் குரைஷித் தலைவர்கள் அவரது வருகையைக் கேள்விப்பட்டு அவரைச் சந்திக்க வருகின்றனர். ஆனால் அவர் முழங்கும் தல்பியாவைச் செவிமடுக்கின்றனர் 'யா அல்லாஹ் உனது சமூகம் வந்து விட்டேன் உனக்கு எந்த இணையுமில்லை யா அல்லாஹ் உனது சமூகம் வந்து விட்டேன் உனக்கு எந்த இணையுமில்லை' என்று கூறக் கேட்டு ஆத்திரமும் ஆச்சரியமுமடைகின்றனர். அவரிடம் ஒருவன் என்ன சிறுபிள்ளையைப் போன்று (பைத்தியகாரத்தனமாக) உளறுகிறாய்? என்று அதட்டுகின்றான். அதற்கவர் இல்லை முஹம்மத் (ஸல்) அவர்களிடம் சென்று இஸ்லாத்தைத் தழுவி விட்டேன் என உறுதியுடன் கூறுகின்றார். இதனைக் கேட்ட அவர்கள் அவரைத் துன்புறுத்துவதற்கு முற்பட்ட பொழுது அவர் உரத்தக் குரலில் சொல்கிறார், அல்லாஹ்வின் மீது ஆணையாக என்னை நீங்கள் அடித்துத் தாக்கினால் அதற்குப் பின்னர் யமாமா பிரதேசத்தில் இருந்து ஒரு வித்து தானியத்தைக் கூட உங்களுக்கு நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் உத்தரவின்றி இங்கு நீங்கள் கொண்டு வர முடியாது என்று கூறி அவர்களை சுமாமா எச்சரித்ததும் அவரை ஒன்றும் செய்யாது விட்டு விட்டனர். அவர் பாதுகாப்பாக ஊர் வந்து சேர்ந்தார்.

அக்கால குறைஷிக் காபிர்களை எடுத்துக் கொண்டால் கூட அவர்கள் பல்வேறு கடவுள்களை வழிபடுபவர்களாக இருந்தாலும்கூட அந்த அனைத்து சிலைகளை விட அல்லாஹ்வை மகத்துவப் படுத்தக்கூடியவர்களாக இருந்தனர். அப்படியாயின் இக்கால மக்கள் செய்யும் இந்த ஷிர்க்குக்கும் அபூ ஜஹ்ல், அபூலஹப் போன்றோர் செய்த ஷிர்க்கும் மத்தியிலும் என்ன வித்தியாசம் வேறுபாடு இருக்கின்றது. இக்கால கப்ர் வணங்கிகள் அவைகளிடம் தமது தேவைகளை கேட்கின்றனர், அவரது துன்பங்கள் நீங்க பிரார்த்திக்கின்றனர், கப்ரில் அடக்கப்பட்டுள்ள அவ்லியாவின் பெயரால் அறுத்துப் பலியிடுகின்றனர். அவரது கப்ரின் மீது விழுந்து கும்பிடுகின்றனர், துன்பங்கள் நீங்கினால் அவரது கப்ரைச் சுற்றி வருவதாக நேர்ச்சை செய்து சுற்றியும் வருகின்றனர். அவ்லியாவின் கப்றுக்கு முன்னால் பயபக்தியுடனும் உள்ளச்சத்துடனும் மனமுருகி நின்று தமது கோரிக்கைகளை முன் வைக்கின்றனர். அத்துடன் நாங்கள் அல்லாஹ்வையே நம்புகின்றோம் என்றும் கூறுகின்றனர்.

ஆச்சரியமாக இருக்கிறது! இவர்களுக்கும் அக்கால குரைஷிக் காபிர்களுக்குமிடையில் என்ன வித்தியாசம் இருக்கின்றது.
அல்லாஹ் கேட்கிறான்: 'அல்லாஹ்வை விட்டு விட்டு நீங்கள் அழைக்கக்கூடியவர்கள் உங்களைப் போன்றவர்களே.. நீங்கள் அவர்களை அழையுங்கள் நீங்கள் (உங்கள் செயலில்)உண்மையாளர்களாக இருந்தால் அவைகள் உங்களுக்கு பதிலளிக்கட்டும்'. (அல்அஃராப் 7:194).

சமாதிகளுக்காக தர்காக்களுக்காக அறுத்துப் பலியிடுவது, அதன் நெருக்கத்தை தேடுவது, அவைகளை வலம் வருவது பெரும் ஷிர்க்காகும் மிகப் பெரும் பாவமாகும் விபச்சாரத்தை விடக் கொடியதாகும், மது அருந்துவதை விட, கொலையை விட, பெற்றோர்களை நோவினை செய்வதை விடப் பெரும் குற்றமாகும். அல்லாஹ் தனது திருமறையில் கூறுகிறான்: 'நிச்சயமாக அல்லாஹ் ஷிர்க் என்ற கொடிய பாவத்தை மன்னிக்க மாட்டான் அதல்லாத ஏனைய பாவங்களை தான் நாடியவர்களுக்கு மன்னிப்பான்'. (அந்நிஸா 4:116).

அல்லாஹ் கொலை, விபச்சாரம் போன்ற பெரும் பாவங்களையே தான் நாடியவர்களுக்கு மன்னிப்பதாக வாக்களிக்கிறான். ஆனால் ஷிர்க் என்ற கொடிய பாவத்தை மன்னிக்க மாட்டேன் என சொல்கிறான்.

நபியவர்கள் கூறினார்கள்...'பனீ இஸ்ரவேலர்களில் தவறான நடத்தை உள்ள விபச்சாரம் புரியும் ஒரு பெண் பாலைவனத்தில் நடந்து செல்கிறாள். அப்போது அங்கே ஒரு நாயைக் காண்கிறாள். அந்நாய் அருகிலிருந்த கிணறில் சுற்றி வருவதும் அதில் ஏறுவதுமாக இருந்தது. தாகத்தின் கடுமையால் நாவைக் கீழே தொங்கப் போட்ட வண்ணம் இருக்கிறது. தாக மேலீட்டால் உயிரை விடக் கூடிய நிலையில் இருக்கிறது. தவறான நடத்தையுள்ளவள், அவளது இறைவனுக்கு மாறு செய்து கொண்டிருந்தவள், பிறரை வழி கெடுத்தவள், பாவங்களில் மூழ்கி இருந்தவள், தவறான முறையில் உழைத்துச் சாப்பிட்டவள் அந்த நாயின் பரிதாப நிலையைப் பார்த்து இரங்குகின்றாள். தனது பாதணியைக் கழட்டி தன் முகத்தை மூடும் துப்பட்டியால் அதனைக் கட்டி அதனைக் கிணற்றினுள் விட்டு நீரினை அள்ளி அந்த நாய்க்கு நீர் புகட்டுகின்றாள். அல்லாஹ், அவளின் இந்தச் செயலுக்காக அவளை மன்னித்து விட்டான். (ஆதாரம்: புகாரி, முஸ்லிம்)

அல்லாஹ் எதற்காக அவளை மன்னித்தான்? அவள் இரவு முழுவதும் நின்று வணங்கினாளா? அல்லது பகல் முழுவதும் நோன்பு நோற்றாளா? அல்லாஹ்வின் பாதையில் போராடிக் கொலை செய்யப்பட்டாளா? அவள் செய்ததெல்லாம் தாகத்தோடு இருந்த ஒரு நாய்க்குத் தண்ணீர் புகட்டியது தான் அல்லாஹ் அவளை மன்னித்து விட்டான் அவள் பாவங்களில் மூழ்கி இருந்தாள் ஆனால், அவள் அல்லாஹ்விற்கு ஷிர்க் செய்யக்கூடியவளாக இருக்கவில்லை கப்றுக்கு, அவ்லியாக்களுக்கு வழிப் படவில்லை அவள் கல்லையோ மனிதனையோ புனிதப் படுத்த வில்லை அதனால் அவளுக்கு மன்னிப்பின் வாயில்கள் திறக்கப்பட்டன அல்லாஹ்வின் மன்னிப்பு பாவிகளுக்கும் கூட மிக நெருக்கமானது தான் ஆனால் இணைவைப்பாளர்களை விட்டும் மிக மிகத் தூரமானது.

## படிப்பினையூட்டும் ஒரு சம்பவம்

மனிதர்களில் சிலர் விபச்சாரம், மதுபானம் அருந்துதல் போன்ற பாவச் செயல்களைப் பார்த்துக் கொதிப்படைகின்றனர், கவலைகொள்கின்றனர் அதே நேரம் சமாதிகளை வழிபடக்கூடியவர்களை, அதை வலம் வரக்கூடியவர்களை, அதை தொட்டு முத்தமிடக் கூடியவர்களைப் பார்க்கும் போது எந்தவித பிரதிபலிப்பும், ஆத்திர உணர்வும் அவர்களிடம் காணப்படுவதில்லை. விபச்சாரம் மதுபானம் போன்றவைகள் பெரும்பாவம் என்பதில் எந்தச் சந்தேகமும் கருத்து வேறுபாடும் இல்லை, அதே நேரம் அவை அவற்றைப் புரிந்தவனை மார்க்கத்தை விட்டு வெளியேற்றும் அளவு கொடியவைகள் அல்ல. ஒரு மனிதன் அல்லாஹ் அல்லாதவர்களுக்கு வணக்க வழிபாடுகள் செலுத்துவது ஷிர்காகும். அதே நிலையில் அவன் மரணித்து விட்டால் அவன் காபிராக மரணிக்கிறான். அதனால்தான் நல்வழி சென்ற அறிஞர்கள் ஓரிரைக்கொள்கையை, மார்க்கத்தின் அடிப்படை விடயங்களைக் கற்றுக்கொள்வதை தலையாய கடமையாக ஆக்கியிருக்கிறார்கள்.

அறிஞர் ஒருவர் ஓரிறைக் கொள்கையின் அவசியம் சம்பந்தமாக ஒரு நூலை எழுதியிருந்தார். அதை மாணவர்களுக்குக் கற்பிக்க ஆரம்பித்த அவர், அதில் வரும் சட்ட திட்டங்களை மாணவர்களுக்கு பல முறை விளக்கினார். ஒரு நாள் மாணவர்கள் அவரைப் பார்த்து ஆசிரியரே தினமும் தவ்ஹீத் எனும் இப்பாடத்தை மாத்திரமே கற்றுத்தருகின்றீகள். எனவே இதனை

**விடுத்து கதைகள் வரலாறு போன்ற வேறு பாடங்களையும் நீங்கள் கற்றுத்தர வேண்டுமென நாங்கள் விரும்புகிறோம் என்று கூறினார்கள். அதற்கு அவ்வாசிரியர் இன்ஷா அல்லாஹ் அது பற்றி யோசிப்போம் என சொன்னார். அடுத்த நாள் கடும் கவலையோடு எதைப்பற்றியோ கடுமையாக யோசித்த வண்ணம் ஆசிரியர் வகுப்புக்கு வந்தார். மாணவர்களிடம் வந்த போது அவர்கள் கவலைக்குரிய காரணத்தைக் கேட்டனர். அதற்கு அவர் பக்கத்து ஊரில் புது வீட்டில் குடியேறிய ஒருவன் ஜின்களின் அட்டகாசங்களுக்குப் பயந்து, அவைகளின் நெருக்கத்தை பெறும் நோக்கில் அவைகளுக்காக தனது வீட்டு வாயலின் முன்னால் ஒரு கோழியை ஜின்களுக்காக அறுத்துப் பலியிட்டதாக அறிந்தேன். நடந்த இந்நிகழ்ச்சியை உண்மையா? என்பதை உறுதிப்படுத்த நான் ஆள் அனுப்பியுள்ளேன். என்று கவலை ததும்பக் கூறி முடித்தார். இந்நிகழ்ச்சியைச் சொன்ன போது மாணவர்களிடம் எவ்வித மாற்றமுமோ, இதுபற்றி எதுவித கவலையோ ஏற்படவில்லை. அந்த மனிதனின் நேர்வழிக்காக பிரார்த்தித்த போதும் அவர்கள் மௌனமாகவே இருந்தார்கள். அம்மாணவர்கள் இதுபற்றிப் பெரிதாக அலட்டிக் கொள்ளவில்லையென்பதை ஆசிரியர் இதன்மூலம் யூகித்துக் கொண்டார்.**

**மறுநாள் அவர் அம்மாணவர்களிடம் வந்து நேற்று இரவு நடந்த நிகழ்ச்சியை உறுதி செய்தோம். நேற்று எனக்குக் கிடைத்த தகவலுக்கு மாற்றமாகவே அந்தச் சம்பவம் நடந்துள்ளது. ஆம், அந்த மனிதன் ஜின்னின் நெருக்கத்தைப் பெறுவதற்காக எந்தக் கோழியையும் அறுக்கவில்லை, மாறாக அவன் தனது தாயுடன் விபச்சாரத்தில் ஈடுபட்டுள்ளான் என்று கூறினார். இதைக்கேட்ட அம்மாணவர்கள் பதபதைத்தர்கள், கூக்குரலிட்டார்கள், கண்டனக் கணைகளை ஏவி விட்டார்கள். அவனைத் திட்டினார்கள், அவனுக்கு உபதேசிக்க வேண்டும் அவனைத் தண்டிக்க வேண்டும் என்று அவர்களது கோபத்தையும் வெறுப்பையும் வெளிப்படுத்தினர். இவற்றையெல்லாம் அமைதியாகக் கேட்டுக் கொண்டிருந்த அறிஞர், 'உங்களது செயலைப்பார்த்து நான் வியப்படைகிறேன்! அவன் ஷிர்க் செய்து விட்டான் அல்லாஹ் அல்லாத ஒன்றுக்கு அறுத்துப் பலியிட்டு விட்டான் வணக்கத்தை அல்லாஹ் அல்லாத ஒருவனுக்கு செலுத்திவிட்டான் என்று நான் சொன்ன போது அதைக்கேட்டுவிட்டு கண்டும் காணாதது போல் இருந்த நீங்கள், இப்பொழுது அவன் இஸ்லாத்தை விட்டும் வெளியேற்றி விடாத ஒரு பெரும் பாவத்தைச் செய்து விட்டான் என்று கூறியதைக் கேட்டதும்**

கொதிப்படைகின்றீர்கள். பாவம் என்ற வகையில் இரண்டுமே குற்றச் செயல்களாக இருப்பினும் விபச்சாரத்தை விட ஷிர்க்-இணை வைத்தலே மிகக் கொடிய - அல்லாஹ் மன்னிக்காத பாவமாகும் என்று கூறினார்கள். இதனைக் கேட்ட மாணவர்கள் மறு பேச்சுப் பேச முடியாது அமைதியாக இருந்தனர். அறிஞர் மாணவர்களில் ஒருவருக்கு சைகை செய்து எழுந்து சென்று தௌஹீத் பாடக் கிதாபை எடுத்து வாருங்கள். புதிதாக மீண்டும் ஆரம்பத்திலிருந்து தவ்ஹீத் பாடம் படிப்போம் என்றார். பாவங்களில் மிகக் கொடியது அல்லாஹ்வுக்கு இணைகற்பித்தலாகும். அல்லாஹ் அதை ஒரு போதும் மன்னிக்கமாட்டான்.

அல்லாஹ் கூறுகிறான்: ‘இணைவைத்தல் மிகப் பெரும் அநியாயமாகும்’ (லுக்மான் 31:13).

இணைவைப்பாளர்கள் மீது சுவர்க்கம் ஹராமாகும். அவர்கள் நரகில் நிரந்தரமாக இருப்பார்கள். ஏனெனில் அல்லாஹ் தனது திருமறையில், ‘நிச்சயமாக எவர் அல்லாஹ்வுக்கு இணை வைக்கின்றாரோ அவர் மீது திட்டமாக அல்லாஹ் சுவனபதியைத் தடுத்து விடுகின்றான். மேலும் அவர் தங்குமிடம் நரகம்தான். இன்னும் (இத்தகைய) அநியாயக்காரர்களுக்கு (மறுமையில்) உதவி செய்வோர் யாரும்இல்லை’. (அல்மாயிதா 5:72). எவன் ஷிர்க் எனும் கொடிய பாவத்தில் வீழ்ந்து விடுகிறானோ அவனது அனைத்து நல்லறங்களும் (தொழுகை, நோன்பு, தான தர்மங்கள், ஹஜ், ஜிஹாத்) பாழாகி விடும்.

அல்லாஹ் தனது திருமறையில், ‘(நபியே) நீர் இணைவைத்தால் நிச்சயமாக உம்முடைய நற்செயல் (கள் யாவும்) அழிந்து விடும், நிச்சயமாக நீர் நஷ்டமடைபவர்களில் ஆகிவிடுவீர் என உமக்கும், உமக்கு முன்னிருந்தவர்களுக்கும் (வஹீ) அறிவிக்கப்பட்டது’ (ஸுமர் 39: 65).

## ஷிர்க்கின் பல வடிவங்கள்!

ஷிர்க் ஒருவனை மார்க்கத்தை விட்டு வெளியேற்றும், அவன் பாவ மன்னிப்பு வேண்டாமல் மரணித்து விடுவானானால் நிரந்தர நரகவாதியாக மாறிவிடுவான். அல்லாஹ் அல்லாதவர்களிடம் பிரார்த்திப்பது, நெருக்கத்தைப் பெறுவதற்காக அல்லாஹ் அல்லாத கப்றுகளுக்காக, ஜின்களுக்காக, ஷைத்தான்களுக்காக அறுத்துப் பலியிடுவது, நேர்ச்சை செய்வது, அல்லது மரணித்தோருக்கு அஞ்சி அல்லது ஜின்களின், ஷைத்தான்களின் தீங்குகளுக்கு அஞ்சி அவர்கள் நோய் நொடிகளையோ சோதனைகளையோ ஏற்படுத்துவார்கள் எனப் பயந்து அவைகளுக்காக இவ்வாறான செயல்களைச் செய்வது பெரும் ஷிர்க்காகும். அல்லாஹ் மாத்திரம் அனைத்தையும் செய்ய ஆற்றல் பெற்றிருக்க அவனல்லாதவர்களிடம் தேவைகளை நிறைவேற்றுவதற்கும், துன்பங்களை போக்குவதற்கும் ஆதரவு வைப்பது பெரும் ஷிர்க்காகும்.

கப்றுகளைத் தரிசிக்க அனுமதிக்கப்பட்டது மறுமையை சிந்தனையை ஏற்படுத்திக்கொள்வதற்கும், மரித்தோரின் பாவங்களுக்கு அல்லாஹ்விடம் பிழை பொறுக்கத் தேடுவதற்குமாகும். ‘கப்றுகளை தரிசியுங்கள் நிச்சயமாக அது மறுமையின் சிந்தனையை உங்களுக்கு ஏற்படுத்தும்’ என நபிகளார் (ஸல்) அவர்கள் கூறினார்கள். இது ஆண்களுக்கு மாத்திரம் அனுமதிக்கப்பட்டதாகும். பெண்கள் கப்றுகளை தரிசிப்பதற்கு அனுமதிக்கப்பட மாட்டார்கள். ஏனெனில் நபி (ஸல்) அவர்கள் கப்றுகளை தரிசிக்கும் பெண்களைச் சபித்துள்ளார்கள், அவர்கள் அவைகளை தரிசிப்பதன் மூலம் அவர்களுக்கோ, அவர்கள் மூலமாகப் பிறருக்கோ பிரச்சனைகளும் மார்க்கவிரோத விடயங்களும் ஏற்பட வாய்ப்புண்டு.

கப்றுகளைத் தரிசிக்கச் செல்ல அனுமதிக்கப்பட்டிருப்பதன் நோக்கம் அங்குள்ளவர்களுக்கு அல்லாஹ்விடம் பிரார்த்திப்பதற்கேயன்றி, அவர்களிடம் உதவி தேடுவதற்கோ, அல்லது அவர்களுக்காக அறுத்துப் பலியிடுவதற்கோ, அல்லது அவர்களைக்கொண்டு அருள் பெறுவதற்கோ, அவர்களிடம் தேவைகளைக் கேட்பதற்கோ, அவர்களுக்காக நேர்ச்சைகளை நிறைவேற்றுவதற்கோ அல்ல. அவைகள் யாவுமே கொடிய பெரும் ஷிர்க்காகும். அந்த கப்றுகள் நபிமார்களுடையதாக அல்லது நல்லடியார்களுடையதாக, அல்லது வலிமார்களுடையதாகக்

கூட இருக்கலாம். அவர்களில் யாரை அழைத்தாலும் அவர்கள் அனைவரும் மனிதர்களே! எந்த ஒரு தீங்கோ நன்மையோ இழைப்பதற்கு அவர்கள் அதிகாரம் படைத்தவர்கள் (சக்தி பெற்றவர்கள்) அல்லர்.

அல்லாஹ் தனது படைப்புக்களில் மிக விருப்பமான முஹம்மது நபியைப் பார்த்து இவ்வாறு சொல்கிறான், '(நபியே) நீர் கூறுவீராக அல்லாஹ் நாடியதைத் தவிர எவ்வித நன்மை(யைச் செய்வதற்)கும், தீமை(யைத் தடுத்துக் கொள்வதற்)கும் நான் சக்தி பெறமாட்டேன்'. (அஃராப் 7:188).

மார்க்க அறிவற்ற சில மூடர்கள் நபியுடைய கப்ரின் முன்னால், அல்லது ஹுஸைன் (ரலி) யின் கப்ரின் முன்னால், அல்லது ஃபதவியின், ஜைலானியின், இவர்கள் அல்லாத வேறு நல்லடியார்களுடைய கப்ரின் முன்னால் பிரார்த்திப்பது அவர்களிடம் உதவி தேடுவது அனைத்தும் அந்த பெரும் பாவத்திலேயே சேரும்.

கப்றுகளைத் தரிசித்து அவைகளுக்கு முன்னால் தொழுவது, குர்ஆன் ஓதுவது அனைத்துமே வழிகெட்ட பித்அத்துக்களாகும். கப்றுகளைத் தரிசித்தல் அனுமதிக்கப் பட்டதே மறுமை சிந்தனையை ஏற்படுத்திக் கொள்வதற்கும் அங்கு அடக்கப்பட்டுள்ளோரின் பாவங்களுக்கு அல்லாஹ்விடம் மன்னிப்புக் கோருவதற்குமாகும். அந்த கப்றுகளில் இருப்பது வெறும் உக்கிப்போன எழும்புக் கூடுகளே என்பதை முஸ்லிம்கள் அறிந்திருந்தும்கூட அவைகளை நாடிச்செல்வது பெரும் வேதனையாகவும் வியப்பாகவும் உள்ளது. அவர்களுக்கே எந்த ஒன்றும் செய்ய சக்தி பெறாத நிலையில் அவர்களிடம் பிரார்த்தனைகளை ஏற்றுக் கொள்ளுமாறு கோருவதும் துன்பங்களை அகற்றுமாறு கோருவதும் விந்தையிலும் விந்தையாகும். பெரும்பான்மையான தர்ஹாக்கள், கப்றுகளைப் பொறுத்த வரைக்கும் அவற்றைப் பரிபாலிக்கும் போர்வையில் அவைகளுக்கு பாமரர்கள் கொண்டுவந்து குவிக்கும் பணத்தையும் ஏனைய நேர்ச்சைப் பொருட்களையும் விழுங்கி கபளீகரம் செய்து கொள்வதற்காகவே தர்ம கர்த்தாக்கள் எனும் பெயரில் பலர் செயல்படுவது அதிகம் பேருக்குத் தெரியாத உண்மையாகும். இவர்களே வருமானம் தேடி தம் பைகளை நிறைத்துக் கொள்ளும் சுயநல நோக்குடன் அக்கப்றுகளில் அடங்கப் பெற்றிருக்கும் அவ்லியாக்களைப் புனிதப்படுத்துவது போல் பாசாங்கு செய்து போலி பயபக்தியை வெளிப்படுத்தி பாமர மக்களுக்கு அவ்லியாக்கள் பேரில் பொய்யான கதைகளையும், கப்ஸாக்களையும் கூறி,

அவர்களின் கப்றுகளிலிருந்து பல கராமத்துகள் (அதிசயங்கள்) நிகழ்ந்ததாகக் கபட நாடகமாடி அப்பாவிப் பொதுமக்களை வழிகெடுத்து அவர்களை ஷிர்கின் பால் அழைப்பு விடுத்துக் கொண்டிருக்கின்றார்கள்.

## தேங்காயை வழிபடும் கூட்டம்!

மரித்து விட்டோரை அழைத்துப் பிரார்த்திப்பவர்களே! உங்களிடம் கேட்கிறேன் அவர்கள் இறந்து விட்டவர்கள். நீங்கள் அவர்களது கல்லறைகளில் மண்டியிட்டுக் கொண்டு கண்ணீர் வழிந்தோட அவர்களை அழைத்துப் பிரார்த்திக்கின்றீர்களே. அவர்களிடம் பரிந்துரையை செய்யுமாறு கோருகின்றீர்களே! ‘நீங்கள் அழைத்தால் அவர்கள் உங்களுக்கு செவிசாய்க்கிறார்களா? அல்லது அவர்கள் உங்களுக்கு நன்மையோ,தீமையோ செய்திடத்தான் முடியுமா? (அஷ்ஷுஅரா 26:72).

அல்லாஹ்வின் மீது ஆணையாக அவர்கள் ஒருபோதும் உங்கள் பிரார்த்தனையைச் செவிமடுக்கவோ உங்களுக்கு எவ்வித உதவியையும் செய்திடவோ முடியாது. மாறாக அவர்கள் மறுமையில் உங்களைக் கைவிட்டு விடுவார்கள். உங்கள் ஆசைகளை நிராசையாக்கி விடுவார்கள்.

**ஓர் உண்மைச் சம்பவம்:**

பதிமூன்று வயதுச் சிறுவன் செய்த ஒரு வியக்கத்தக்க விடயத்தை பாருங்கள். அவன் தனது தந்தையுடன் இந்தியாவுக்குச் சென்றான், இந்தியா ஓர் பெரிய நாடு, அங்குள்ள மக்கள் பல்வேறு கடவுள்களை வணங்கி வழிபட்டு வருகின்றார்கள். மிருகங்கள், தாவரங்கள், மரங்கள், கற்கள், மனிதர்கள், நடசத்திரங்கள் அனைத்தும் அங்கு வணங்கப்படக்கூடிய தெய்வங்களே. அச் சிறுவன் அங்குள்ள ஒரு ஆலயத்திற்குள் நுழைகிறான். மனிதர்கள் அங்கு தேங்காய்க்கு வணக்க வழிபாடுகள் செய்து பூஜிக்கக் கூடிய காட்சியைப் பார்க்கின்றான். அவர்கள் அதற்கு இரு கண்கள் மூக்கு, வாய் ஆகியவற்றை வரைந்து வைத்திருக்கின்றனர். அதற்கு உணவு குடி பானங்கள் போன்றவற்றைப் படைத்து, அதன் முன் வாசனைத் திரவியங்களைப் புகைப் போட்டு வைத்துப் பூஜிக்கிறார்கள். அதனைக் கும்பிட்டு சிரம்சாய்த்து வணங்குகின்றார்கள். இவற்றை ஆச்சரியத்துடனும், வெறுப்புடனும்

பார்த்துக் கொண்டிருந்த அந்தச் சிறுவன் அவர்கள் தரையில் விழுந்து அதனைக் கும்பிட ஆரம்பித்ததும் ஓடிச் சென்று அத்தேங்காயை எடுத்துக் கொண்டு ஓடி விடுகிறான். அவர்கள் தலையை உயர்த்திப் பார்த்த பொழுது அங்கு அவர்களின் கடவுள் இல்லாதது கண்டு திடுக்கிட்டார்கள். திரும்பிப் பார்த்த பொழுது அவர்களின் கடவுளை அச்சிறுவன் எடுத்துக் கொண்டு ஓடுவதைப் பார்க்கின்றனர். அவர்களுடைய வணக்க வழிபாடுகளை இடைநிறுத்தி விட்டு அவனுக்குப் பின்னால் அனைவரும் துரத்திக் கொண்டு ஓடுகின்றனர். அவனோ அவர்களை விட்டும் மிகத் தூரம் சென்றதன் பின் ஒரு இடத்தில் அமர்ந்து அந்தத் தேங்காயை உடைத்து அதன் நீரைப் பருகுகிறான், பின் மிகுதித் தேங்காயை தூரத்தில் எறிந்து சுக்கு நூறாக உடைத்து விட்டான்.

அவர்கள் அங்கு வந்து பார்த்த பொழுது கடவுள் உடைக்கப்பட்டு சிதறிக் கிடந்ததைக் கண்டு உறுமுகின்றனர். கூப்பாடு போடுகின்றனர், ஆத்திரத்துடன் அவனைப் பிடித்து அவர்களின் கோபம் தீரும் வரை நைய்யப் புடைக்கின்றனர். பின்னர் அவ்வூரின் நீதிபதியிடம் அவனை அழைத்துச் செல்கிறார்கள். அவனிடத்தில் ஊரின் நீதிபதி நீதானா கடவுளை உடைத்தது என்று கேட்டார்? சிறுவன் இல்லை நான் வெறும் தேங்காய் ஒன்றைத் தானே உடைத்தேன் என்று கூறினான். நீதிபதியோ இல்லையில்லை அது அவர்களது கடவுள் அதை எப்படி நீ உடைக்க முடியும் என்று குறுக்கீடு செய்தார். சிறுவனோ சற்றும் தயங்காமல் கேட்கிறான், நீதிபதியவர்களே! நீர் உமது வாழ்நாளில் தேங்காயை உடைத்ததில்லையா? அதனைச் சாப்பிட்டதில்லையா? என்று மிடுக்குடன் கேட்டான். அதற்கு ஆம்! உடைத்திருக்கின்றேன் என்று நீதியரசர் பதிலளித்தார். அப்படியென்றால் நான் இப்போது உடைத்த இந்தத் தேங்காய்க்கும் நீங்கள் இதுவரைக்கும் உடைத்துச் சாப்பிட்ட தேங்காய்களுக்கும் என்ன வித்தியாசம் இருக்கின்றது என்று நீதிபதியை நோக்கி ஒரு போடு போட்டான். நீதிபதி இச்சிறுவனின் மிடுக்கான கேள்விக்கு பதிலளிக்க முடியாமல் பரிதாபத்துடன் தலையைப் பிய்த்துக் கொள்ள ஆரம்பித்தார்.

அதன் பின்னர் தேங்காயை வணங்கக் கூடியவர்களை நோக்கி இதற்கு என்ன பதில் கூறுவது என்பது போல் அவர்களின் பதிலை எதிர்பார்க்கிறார். அவர்களோ விட்டுக் கொடுக்காமல் அந்தத் தேங்காய்க்கு இரு கண்கள் இருக்கின்றன, வாய், மூக்கு போன்றன இருக்கின்றன எனவே

அதுவும் ஏனைய தேங்காய்களும் எவ்வாறு சமனாக முடியும் எனத்தர்க்கித்தனர். சிறுவன் மறுபடியும் அவர்களிடம் கேள்விக் கனைகளை தொடுக்கிறான், அது பேசுகிறதா அல்லது நீங்கள் கேட்பவற்றுக்கு பதிலளிக்கின்றதா? என்று கேட்டான் அதற்கு அவர்கள் இல்லையென்று பதிலளிக்கின்றனர். அப்படியானால் அதை எப்படி வணங்குவீர்கள், நீங்கள் சிந்திக்க வேண்டாமா? என்று அவர்களிடம் வினவ அதற்கு பதிலளிக்க முடியாமல் அந்த சிலை வணங்கிகள் வாயடைத்துப் போனார்கள்.

'ஆகவே நிராகரித்த அவன், (பதில் கூற இயலாது) திகைப்பில் ஆழ்த்தப்பட்டான். மேலும் அல்லாஹ், அநியாயம் செய்து கொணடிருக்கிற கூட்டத்தாருக்கு நேர்வழி காட்ட மாட்டான்'

(அல்பகரா 2:258).

அதன் பின்னர் நீதிபதி நிலமை விபரீதமாகச் சென்று அவர்கள் இச்சிறுவனுக்கு ஏதேனும் அநியாயம் செய்து விடுவார்களோ எனப் பயந்து அச்சிறுவன் மீது 150 இந்திய ரூபாய்களை அபராதமாக விதிப்பதாகத் தீர்ப்பளித்தார். சிறுவனும் இன்முகத்துடன் அத்தொகையைச் செலுத்தி விட்டு வெற்றிப் புன்னகையுடன் வெளியேறினான்.

இது போதாதென்று கப்ர் வணக்கத்தோடு தொடர்புடைய இவர்கள், அவர்களிடம் தமது தேவைகளைக் கூறி அவர்களைக் கண்ணியப்படுத்திப் பிரார்த்திப்பது ஒரு புறமிருக்க தாம் கஷ்டப்பட்டு தேடிய செல்வங்களையும், திரவியங்களையும் இக்கப்றுகளை அலங்கரித்து அழகு படுத்துவதற்கும், அதனை நிலத்திலிருந்து உயர்த்திக் கட்டுவதற்கும், அதன் மீது அழகிய கோபுரங்களை எழுப்புவதற்குமே விரயம் செய்கின்றனர்.

கப்ருகள் மீது கட்டப்படும் தர்ஹாக்கள் நினைவு மண்டபங்களை இரு வகையாகப் பிரிக்கலாம். முதலாவது வகை... முஸ்லிம்களின் பொது மையவாடிகளில் இவ்வாறான மனாராக்கள் அல்லது தர்ஹாக்களை குறிப்பிட்ட வலியின் கப்ரைச் சூழக் கட்டுதல்.

இரண்டாவது வகை... அவைகளை மஸ்ஜித்களில் கட்டுவது அல்லது மஸ்ஜித்களை அங்கு நிர்மானிப்பது அது சில வேளை மஸ்ஜிதின் கிப்லா பக்கம், அல்லது பின்னால், அல்லது ஒரு பகுதியில் அமைந்திருக்கும்.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் இச்செயல்களை வன்மையாகக் கண்டித்திருக்கிறார்கள் ‘யா அல்லாஹ் எனது கப்ரை வணங்கப்படக்கூடிய இடமாக ஆக்கிவிடாதே! நபிமார்களின் அடக்கஸ்தலங்களை வழிபாட்டுக்குரிய இடமாக மாற்றியவர்களுக்கு அல்லாஹ்வின் சாபம் உண்டாவதாக’. எனக் கூறினார்கள். அது அவர்களுடைய கப்ராகவோ அல்லது வேறு யாருடைய கப்ராகவோ இருக்கலாம். அலி (ரலி) அவர்கள், ஒரு முறை அபுல் ஹய்யாஜ் என்பவருக்கு இப்படிச் சொல்கிறார்கள், ‘அல்லாஹ்வின் தூதர் என்னை அனுப்பிய ஒரு காரியத்திற்காக இப்பொழுது நான் உன்னை அனுப்புகிறேன். எந்த ஒரு சிலையையும் உடைக்காமல் விட்டு விடாதே! பூமி மட்டத்தை விட உயர்ந்திருக்கக்கூடிய எந்த ஒரு கப்ரையும் பூமியோடு சமப்படுத்தாமல் விட்டு விடாதே’. என்று கூறினார்கள்.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கப்றுகள் மீது சாந்து பூசப்படுவதையும் அதன் மீது அமருவதையும், அதைக் கட்டுவதையும் அதன் மீது எழுதுவதையும் தடுத்தார்கள். கப்ருகளை வணக்கஸ்தலங்களாக மாற்றுபவர்களையும் அதன் மீது விளக்குகள் தொங்க விடுவபவர்களையும் தடுத்தார்கள்.

நபித்தோழர்களின் காலத்திலோ தாபிஈன்களின், தபஉத் தாபிஈன்களின் காலத்திலோ எந்த ஒரு இஸ்லாமிய நாட்டிலும் நபிமார்களின் கப்ரோ அல்லது வேறு எவர்களின் கப்ருகள் மீது தர்ஹாக்கள் கட்டப்படவில்லை.

## கவலை தரும் சில நிகழ்வுகள்!

இன்று உள்ள கவலையான நிலையை எடுத்துக் கொள்ளுங்கள், எகிப்தில், நல்லடியார்களின் கப்றுகள் எனும் போர்வையில் பிரதான நகரங்கள், கிராமங்கள் என்று எதையும் விட்டு வைக்காமல் ஆறாயிரம் தர்ஹாக்கள் அங்கு இருக்கின்றன. அங்கு மௌலிதுகளுக்கென்றும், முரீதீன்களுக்கென்றும், முஹிப்பீன்களுக்கென்றும் மையங்கள் நிறுவப்பட்டு இருக்கின்றன. எவராவது ஒரு வலியின் பெயரில் மௌலிது விழாக்கள் இல்லாத எந்த ஒரு நாளையும் வருடத்தில் தேடுவது என்பது சிரமமான காரியமாக இருக்கும். அங்கு ஏதாவது ஒரு கிராமத்தில் தர்ஹாக்கள் இல்லையானால் பரக்கத் அற்ற ஊராக அதை நினைப்பர்.

**தர்ஹாக்களை பெரியது சிறியது என்று இரு வகையாக அங்கு வகுத்திருக்கின்றார்கள். பெரிய தர்ஹாக்களில் உயர்ந்த கட்டிடங்களும் அதன் விசாலமும் அதில் அடக்கப்பட்டிருப்பவரின் பிரபல்யத்திற்கேற்ப தரிசிப்பவர்களும் அதிகமாக இருப்பார்கள்.**

**மிஸ்ரில் (எகிப்தில்) உள்ள பிரபல்யமான சில தர்ஹாக்கள்: ஹுஸைன் (ரலி) அவர்களின் கப்று, ஸைனப் (ரலி) அவர்களின் கப்று, ஆயிஷா (ரலி) அவர்களின் கப்று, ஸகீனா (ரலி) அவர்களின் தர்ஹா, நபீஸா (ரலி) அவர்களின் தர்ஹா, இமாம் ஷாபியின் (ரஹ்) பெயரில் தர்ஹா, லைஸ் இப்னு ஸஃதின் தர்ஹா, இது போக தன்தா என்று ஊரில் ஃபதவியின் தர்ஹா, தஸ்ஸுக் எனும் ஊரில் தஸ்ஸுக் என்பவரின் தர்ஹா, ஹுமைஸரா எனும் ஊரில் ஷாதுலி என்பவரின் தர்ஹா, ஹுஸைனுடையது என்று அவர்கள் நம்பக்கூடிய கப்று அதற்கு மக்கள் ஹஜ்ஜும் செய்வார்கள். நேர்ச்சை மற்றும் வழிபாடுகளைக் கொண்டு அதன் நெருக்கத்தைத் தேடுவர்கள். அதை சுற்றி வலம் வருவர் நோய்களில் இருந்து ஆரோக்கியம் தேடுவர், துன்பமான நேரங்களில் பிரச்சினைகளில் இருந்து விடுபட வேண்டிக் கொள்வர்கள். ஸைய்யிதுல் பதவியுடைய தர்காவில் வருடத்தில் கூடக்கூடிய நாட்கள் இருக்கின்றன அதை ஹஜ்ஜுல் அக்பர் - பெரிய ஹஜ் என்று அதற்கொப்பாக்கி அழைப்பர், உள்நாட்டில் இருந்தும் வெளிநாடுகளில் இருந்தும் ஷியாக்கள், ஸுன்னிகள் என்ற பேதமின்றி கூட்டம் அங்கு அலை மோதகூடிய துர்பாக்கிய நிலையை காணலாம்.**

**ஜலாலுத்தீன் ரூமி என்பவருடைய தர்ஹா... அந்த கப்ரின் மீது எழுதப்பட்டிருக்கும் வாசகங்களாவன: 'இஸ்லாம், கிறிஸ்தவம், யூத மதம் ஆகிய மூன்று மதத்தவர்களும் வந்து தரிசித்துச் செல்லும் மகான்', இச்சிலையை குதுப் மார்களில் தலை சிறந்தவர்களுடையது என அவர்கள் போற்றுகின்றனர்.**

**சிரியாவில்: சிரியாவின் தலைநகரான டமஸ்கஸிலுள்ள நம்பத்தகுந்த ஆய்வாளர்களின் கணிப்பீட்டின் படி அங்கு 194 தர்ஹாக்கள் இருப்பதாகவும், அதில் 44 பிரசித்தி பெற்றவைகள் என்றும் குறிப்பிடுகின்றனர். அதில் இருபத்தேழு கப்றுகளை ஸஹாபாக்களுடையது எனச் சொல்லிக் கொண்டு திரிகின்றார்கள். திமஷ்கில் ஸகரிய்யா (அலை) மகன் யஹ்யா (அலை) பெயரில் ஒரு தர்ஹாவை எழுப்பி இருக்கின்றனர், இது அங்கு ஆட்சி செய்த உமையாக்களின்**

காலத்தில் கட்டப்பட்டதாகும். இம்மஸ்ஜிதுக்கு பக்கத்தில் ஸலாஹுத்தீன், மற்றும் இமாதுத்தீன் ஸன்கி பெயரிலும் தர்ஹாக்கள் உள்ளன. இவை தவிர இன்னும் அங்கு பல தர்ஹாக்கள் இருக்கின்றன. அவைகளைத் தரிசிக்க வருவோர், அவைகளிடம் உதவி தேடுவர். இன்னும் ஸிரியாவில் *'புஸூஸூல் ஹிகம்'* எனும் நூலை எழுதிய வழிகேடன் முஹ்யத்தீன் பின் அரபிக்கும் ஒரு தர்ஹா உள்ளது.

துருக்கியில்: 481 க்கு மேற்பட்ட ஜும்ஆ மஸ்ஜித்கள் தர்ஹாக்களோடு அமைந்திருக்கின்றன. அதில் பிரபலமான ஒரு மஸ்ஜிதில் அபூ அய்யூபுல் அன்ஸாரி என்பவரின் பெயரில் ஒரு தர்ஹாவை அமைத்திருக்கிறார்கள் அது குஸ்தன்தீனியாவில் உள்ளது.

இந்தியாவில்: 150க்கும் மேற்பட்ட பிரபல்யமான தர்ஹாக்கள் இருக்கின்றன ஆயிரக்கனக்கான மக்கள் அங்கே கூடிய வண்ணமே இருப்பர். இன்னும் அங்கு ஷைகு 'பஹாஉத்தீன் ஸகரீயா முல்தானி' என்பவருடைய தர்ஹா மிக பிரபல்யமாக இருக்கிறது. அதனைத் தரிசிக்க வரும் பக்தர்கள் அதற்கு நேர்ச்சை, ஸுஜுத் போன்ற அனைத்து அல்லாஹ்விற்கு செய்யவேண்டிய வணக்கங்களையும் இந்த கப்ருக்கு செய்கின்றனர்.

ஈராகில்: இதன் தலைநகரான பக்தாதில் 150க்கும் மேற்பட்ட ஜும்ஆ மஸ்ஜிதுகள் இருக்கின்றன அவைகளில் தர்ஹாக்கள் இன்றி இருப்பவைகள் மிகக்குறைவானதே. 'மூஸில்' எனும் ஊரில் எழுபதத்தி ஆறுக்கும் மேற்பட்ட தர்ஹாக்கள் இருக்கின்றன இவை அனைத்தும் பெரும் பெரும் மஸ்ஜிதுகளுக்குள் அமைந்திருக்கின்றன என்பது வேதனைக்குரியதாகும். இவைகள் சிறிய மஸ்ஜித்களில், மற்றும் தனியாக உள்ள தர்ஹாக்கள் இல்லாமல் எடுக்கப்பட்ட கணக்காகும்.

பாகிஸ்தானில்: ஷைக் அலீ அல்ஹுஜூரிய் என்பவரின் தர்ஹா லாஹுரில் அமைந்திருக்கிறது. அது அவர்களிடம் அதிகமான புனிதத்துக்குரியதாகக் கருதப்படுகிறது.

இதில் ஆச்சரியம் யாதெனில், மனிதர்கள் பக்திப் பரவசத்துடன் அருள்தேடி வழிபடும் இந்த தர்ஹாக்களில் அதிகமானவை போலியானதாகும் எந்த ஒரு உண்மையான வரலாற்றுப் பின்னனியும் இன்றி வேண்டுமென்றே சில

புல்லுருவிகளால் வருமானம் தேடும் சுயநல நோக்கோடு உருவாக்கப்பட்டவைகளாகும்.

ஹுஸைன் (ரலி) அவர்களுக்கு கெய்ரோவில் ஒரு கப்று இருக்கிறது அதற்கு பல வழிபாடுகளைச் செய்வார்கள். அதனிடம் பிரார்த்தித்தல், அதற்கு அறுத்துப் பலியிடுதல், அதை வலம் வருதல் போன்ற வழிபாடுகளைச் செய்வார்கள். அதேபோல் அஸ்கலான் எனும் இடத்திலும் ஹுஸைன் (ரலி) க்கு மற்றுமொறு கப்று இருக்கிறது.

சிரியாவின் மேற்குப் பகுதியில் இருக்கும் ஹலப் எனும் நகரத்தில் ஹுஸைன் (ரலி) பெயரில் ஒரு தர்ஹா இருக்கிறது. இது அல்லாமல் நான்கு இடங்களில் ஹுஸைன் (ரலி) பெயரில் தர்ஹாக்கள் இருக்கின்றன அங்கே அவர்களின் தலை அடக்கப்பட்டிருப்பதாக மக்கள் நம்புகின்றனர். டமஸ்கஸில், ஹனானாவில் (நஜ்புக்கும் கூபாவுக்கும் மத்தியில் அமைந்துள்ள ஒரு இடம்), மதீனாவில் அவரது தாயார் பாதிமா (ரலி) அவர்களின் கப்ருக்கு அருகில், நஜ்பில் அவரது தந்தையின் கப்ருக்கு அன்மையில். கர்பலாவில் ஹுஸைன் அவர்களின் உடல் அடக்கப்பட்டதாகவும் அங்கே அவர்களது துண்டிக்கப்பட்ட தலையும் பின்னர் அதே இடத்தில் அடக்கப்பட்டதாகவும் இவர்கள் நம்புகின்றனர்.

அலி (ரலி) மகள் ஜைனப் (ரலி) அவர்கள் மதீனாவில் மரணித்து அங்குள்ள 'பகீ-பொதுமையவாடியில்' நல்லடக்கம் செய்யப்பட்டார்கள், ஷிய்யாக்கள் டமஸ்கஸிலும் அவர்களுக்கு ஒரு தர்ஹாவை நிறுவியிருக்கிறாகள்.

கைரோவில் கூட ஜைனப் (ரலி) பெயரில் பல தர்ஹாக்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன. இவ்வாறாக அமைந்திருக்கும் பல தர்ஹாக்கள் பற்றி எந்த வரலாற்றுக்குறிப்பும் இல்லை, ஜைனப் (ரலி) அவர்கள் உயிர் வாழ்ந்த காலத்தில் மிஸ்ருக்கு வருகை தந்ததாகவோ, அல்லது அவர்களின் ஜனாஸாக்கூட மிஸ்ருக்கு கொண்டுவந்ததாக எந்தவிதமான நம்பத்தகுந்த வரலாற்றுக் குறிப்பும் இல்லை என்று இருக்கும்போது அங்கு அவர்களுக்கு எவ்வாறு தர்ஹா இருக்க முடியும்?

எகிப்தில் உள்ள இஸ்கந்தர் நகரவாசிகள் அபூ தர்தா (ரலி) அங்கே அடக்கம் செய்யப்பட்டிருப்பதாக உறுதியாக நம்புகின்றனர். எனினும் மார்க்க

அறிஞர்கள், அவர் அங்கு அடக்கம் செய்யப்படவில்லை எனச் சொல்கின்றனர். நபிகளாரின் மகள் ருகையா (ரலி)யின் பெயரில் கைரோவில் ஒரு தர்ஹா இருக்கிறது. 'பாதிமிக்களுடைய' ஆட்சியாளர் ஆமிர் பின் அஹ்காமில்லாஹ் என்பவரின் மனைவி ஏற்படுத்திய ஒரு தர்ஹா, அதே போன்று ஹுஸைன் (ரலி) மகள் ஸகீனா பெயரிலும் ஒரு தர்ஹா அங்குள்ளது.

இன்னும் பிரபல்யமான தர்ஹாக்களில் ஒன்றுதான் இராக்கின் நஜ்பில் அமைந்துள்ள அலி (ரலி)அவர்களுடைய தர்ஹா. இது போலியான ஒன்றாகும், ஏனெனில் அவர் அடக்கம் செய்யப்பட்டது கூபாவில் அமைந்துள்ள அவர்களது அரச மாளிகையிலாகும்.

அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ப் (ரலி) யின் பெயரில் ஒரு கப்ரை பஸராவில் அமைத்து வைத்துள்ளார்கள், ஆனால் அவர்கள் மதீனாவில் மரணித்து 'பகீ' பொது மையவாடியில் அடக்கம் செய்யப்பட்டுள்ளார்கள்.

ஹல்ப் எனும் இடத்தில் ஜாபிர் (ரலி) அவர்களுக்கு ஒரு கப்ரை ஏற்படுத்தியிருக்கிறார்கள், ஆனால் அவர்கள் மரணித்ததோ மதீனாவில்.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் புதல்விகளான உம்மு குல்ஸூம், ருகையா இவர்கள் இருவருக்கும் ஷாமில் கப்ருகளை உருவாக்கியிருக்கிறார்கள். இவர்கள் இருவரும் உஸ்மான் (ரலி) யின் மனைவிமார்கள். இவர்கள் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் உயிருடன் இருக்கும் போதே மரணித்து விட்டார்கள், பகீயில் நல்லடக்கம் செய்யப்பட்டார்கள்.

மார்க்க அறிஞர்கள் அனைவரும் ஒருமித்து கூறிய இன்னும் போலியான ஒரு தர்ஹாதான் டமஸ்கஸில் ஒரு பெரும் மஸ்ஜிதுல் அமைந்துள்ள ஹூத் நபியின் கப்ரு. அவர்கள் ஷாமுக்குச் செல்லவே இல்லை எப்படி அங்கு அவருக்கு கப்ரு உருவாகும்? ஹல்ரமவ்த்திலும் அவருக்கு ஒரு கப்று இருக்கிறது. ஹல்ரமவ்த்தில் இருக்கும் மற்றொரு கப்ரை மக்கள் ஸாலிஹ் (அலை) யுடையது என நம்பி வருகின்றனர், ஆனால் அவர்கள் மரணித்தது ஹிஜாஸில் என்பது குறிப்பிடத்தக்கது. இன்னும் பலஸ்தீனில் யாபா எனும் ஊரிலும் அவர் பெயரில் ஒரு தர்ஹா இருக்கிறது.

அதே போன்று அய்யூப் (அலை) பெயரிலும் ஒரு தர்ஹா பலஸ்தீனத்தில் இருக்கிறது.

**<u>தர்ஹாக்கள் உருவாகும் விதம் :</u>**

ஷைத்தான் எப்படியெல்லாம் மனிதர்களின் சிந்தனையில் விளையாடுகிறான்! வானம் பூமிகளைப் படைத்த இறைவனை வணங்குவதை விட்டும் மக்களை திசை திருப்பி மரணித்தவர்களைப் புனிதப்படுத்துவது, மண்ணைப் புனிதப்படுத்துவது அவைகளுக்கு வழிபாடுகளை செலுத்துவது போன்ற ஷிர்கான விடயங்களில் நிலைபெற செய்துள்ளான். இந்த வழிகெட்ட விடயங்கள் சிலவேலைகளில் எப்படி ஆரம்பிக்கின்றன, சில விஷமிகளால் திட்டமிடப்பட்டு வேண்டுமென்றே இல்லாத கப்ருகளை இருப்பதாக மக்கள் மத்தியில் வதந்திகளைப் பரப்பி நிச்சயமாக அதை தரிசிப்பவருக்கு அது பலன் தரும், பிரார்த்திப்பவருக்கு பரிந்துரை செய்யும் என்று போலியான பிரச்சாரங்களைக் கட்டவிழ்த்து விடுகின்றனர். இதனால் மக்களுக்கு மத்தியில் அவர்கள் பெயரில் கராமத்-அற்புதங்கள் நிகழ்ந்தன என்று போலியான கதைகள் பரவுகின்றன மேலும் மக்களுக்கு அவைகள் உண்மைகளாக சித்தரிக்கப்படுகின்றன. பின்பு ஷிர்கின் வடிவங்கள் அவர்களுக்கு மத்தியில் தலை தூக்குகின்றன. அவைகளை வலம் வருவதும், அல்லாஹ் அல்லாதவர்களிடம் பிரார்த்திப்பது போன்ற மூடப்பழக்கங்கள் கடந்த கால கப்ரு வணங்கிகளிடம் காணப்பட்டது போல இந்நவீன கால கப்ரு வணங்கிகளிடமும் பரவலாக காணப்படுக்கின்றன.

## கற்பனை தர்ஹாக்கள்...

ஒரு ஷைகிடம் அருள் வேண்டிச் சென்றவர்களில் ஒருவர் என்னிடம் சொன்ன நிகழ்ச்சி இது, இது இரு வாலிபர்களுக்கு மத்தியில் ஏற்பட்ட ஒரு அனுபவமாகும். ஒருவர் ஸஊத் மற்றவர் ஆதில் அவர்கள் பல்கலைக்கழகத்தில் பயின்று பட்டம் பெற்றவர்கள் ஆவர். அவர்கள் இருவரும் பாடசாலையில் பணிபுரிவதற்காக ஒரு கிராமத்திற்கு சென்றனர். அவ்வூரில் கப்ருகளை புனிதப்படுத்துவது, அவைகளுக்கு வழிப்படுவது, அவைகளுக்கு நேர்ச்சை வைத்து ஏமாறுவது போன்ற ஷிர்க்குகள் மலிந்து காணப்பட்டன. ஆதில், ஸஊதுடன் இச்செய்திகளை

பரிமாறிக் கொள்கிறார். அவர்கள் ஆசிரியராக பணிபுரியும் பாடசாலை அப்பாதையில் தான் அமைந்திருக்கிறது, திடீரென வயது முதிர்ந்த ஒரு யாசகன் அவர்கள் பயணம் செய்த பஸ்ஸினுல் ஏறுகிறார். அழுக்கடைந்த ஆடையும், துர்நாற்றம் வீசும் உடலுடனும் காணப்பட்ட அவர் நடுநடுங்கிக் கொண்டே கைத்தடி ஒன்றை ஊன்றியவராக பஸ்ஸினுள் நுழைந்து பயணிகளை அதட்டுகிறார். தனக்குக் காணிக்கை செலுத்தாவிட்டால் இந்த பஸ் இடைவழியில் கவிழ்ந்து விடுவதற்கு தான் சாபமிட்டு விடுவதாகவும் தனது பிரார்த்தனைகள் இறைவனிடத்தில் ஏற்றுக் கொள்ளப் படும் அவ்லியாக்களில் ஒருவர் என்றும் வாதிடுகின்றார். பயணிகளோ இவருக்குப் பயந்து பணிவுடன் தமது காணிக்கைகளைச் செலுத்த ஆரம்பிக்கின்றனர்.

ஸஈதை பொறுத்தவரையில் அவன் அவ்லியாக்களின் கராமாத்களை- அற்புதங்களை நம்பக் கூடிய ஒரு குடும்பத்தில் பிறந்தவன். எனவே அவன் மேற்படி ஆசாமியின் அதட்டலுக்குப் பயந்து திடுக்கிடுகிறான். அச்சம் கொண்டவனாக ஆதிலிடம், அவனுக்கு சில திர்ஹம்கள் கொடுப்போம் எனச் சொல்கிறான். உண்மையாகவே பஸ்ஸை அந்த யாசகன் (அப்துல் கரீம் அபூ ஷத்தா) கவிழ்த்துவிடுவதற்கு பிரார்த்திப்பானோ? ஏனெனில் அருள் பெற்றவர்களில் ஒருவன் பிரார்த்தித்தால் உடனே அவனது பிரார்த்தனை ஏற்றுக்கொள்ளப்படும் என ஸஈத் கூறுகிறான். இதைக்கேட்ட ஆதில் வியப்படைந்தவனாக! உண்மையில் ஸுன்னத் வல் ஜமாஅத் என்று சொல்லக்கூடியவர்கள் அற்புதங்களை நம்பக்கூடியவர்கள் தான், ஆனால் அது உண்மையான நல்லடியார்கள், பயபக்தியுடையவர்கள், தனிமையில் அல்லாஹ்வை நினைத்து அஞ்சக்கூடியவர்களுக்கு சாத்தியமே தவிர, மார்க்கத்தை விற்று வயிறு வளர்க்கக்கூடிய இவர்களைப் போன்ற ஏமாற்று பேர்வழிகளுக்கு அல்ல என்று கூறினான்.

அதற்கு ஸஈத் அப்படிக் கூறாதே! அவர் உண்மையில் பெரியதொரு அவ்லியா என்று மக்கள் அனைவரும் (சிறியோர் முதல் பெரியோர் வரை) அப்படித்தான் பேசுகின்றார்கள் அவரிடத்தில் பல நூறு கராமத்துக்களும்- அதிசயத்தக்க சம்பவங்களும் நடந்திருக்கின்றன. நீ பொறுத்திருந்து பார், அவர் இப்போது பஸ்ஸை விட்டு இறங்கி எம்மை விட்டும் நடந்து செல்வார். ஆனால் நமது பஸ் அடுத்த ஊரை சென்றடைவதற்குள் அவர் நடந்தே சென்று அங்கே எம்மையெல்லாம் வரவேற்கக் காத்திருப்பார். இவைகள் அவ்லியாக்களுக்கு நிகழும் சாதாரண அற்புதங்கள். நீ அற்புதங்களை நிராகரிக்கின்றாயா? என்று அதட்டலுடன் கேட்டான். அதற்கு, ஆதில் நான்

**மொத்தமாக அற்புதங்களை நிராகரிக்கக்கூடியவன் அல்லன். அல்லாஹ், தான் நாடிய அடியார்களுக்கு அவைகளை வழங்க ஆற்றல் உடையவன். ஆனால் இன்று கராமத் என்பது நமது உணவிலும், குடி பானங்களிலும், நாம் செல்லக்கூடிய இடங்களிலும், ஷிர்குடைய வாயல்கள் திறக்கப்படுவதற்கு காரணமாகி விட்டன. நல்லடியார்கள், மௌத்தாக்கள் என்று அல்லாஹ்வுடன் இணைத்து படைத்தலிலும், கருமங்களை ஆற்றுவதிலும், நிலமைகள் மாறி மாறி வருவதிலும், நாம் அவர்களுக்கு பயப்படக் கூடியவர்களாகவும், அவர்களுடைய கோபத்துக்கு ஆளாகிவிடக்கூடாது என்பதிலும் சிந்திக்கக்கூடியவர்களாக இருக்கிறோம் என்பது வேதனையான விடயமாகும்.**

**உடனே ஸஊத், இடைமறித்தவனாக *' அஷ்ஷைக் அஹ்மத் அபூ சர்ருத் '* எனும் ஒரு நல்லடியார் அரபாவில் இருந்து இஸ்தான்பூல் வந்து தனது குடும்ப உறவினர்களுடன் சுட்ட கோழி சாப்பிட்டு விட்டு அதே இரவு அரபாவுக்கு திரும்பிய கதையை நீ ஏற்றுக் கொள்ளமாட்டாயா?**

**இதைக்கேட்ட ஆதில், அல்லாஹ் உனது அறிவுக்கு அருள் புரியட்டும்! நீ இவைபோன்ற கட்டுக்கதைகளைத்தானா பல்கலைகழத்தில் கற்றுக் கொண்டாய்?**

**ஸஊத்: நாம் இகழ்ச்சியான முறையில் பேச ஆரம்பித்து விட்டோம், என எண்ணுகின்றேன்.**

**அதற்கு ஆதில், அவ்வாறு நான் உன்னை இகழ வில்லை. எனினும் பாமரர்கள் போல, அவர்களது மூட நம்பிக்கைகளின் தரத்தில் இருந்து நீ பேசுவதையும், அவர்கள் பேசும் பேச்சுக்களையும், கட்டுக் கதைகளையும் ஆராயாது அவை விமர்சனத்திற்கு அப்பாற்பட்டது என நீ வாதிடுவதைத்தான் என்னால் ஜீரணிக்க முடியவில்லை என்பதனை கவலை கலந்த ஆத்திரத்துடன் கூறினான்.**

**அதற்கு ஸஊத்: இந்த அற்புதங்களை சாதாரண பாமரர்கள் மாத்திரம் சொல்லவில்லை. மாறாக நமது ஷைகுமார்கள் கூட இப்படியான**

**அற்புதக்கதைகளை, தர்ஹாக்களில் அடக்கப்பட்டவர்களுடைய செய்திகளைச் சொல்கின்றனர்.**

**ஆதில்: அப்படியானால் நான் உனக்கு நடைமுறையில் இந்த தர்ஹாக்களில், கப்ருகளில் உள்ளவர்களுடன் தொடர்புடைய கற்பனை கதைகள் அனைத்தும் எந்த அடிப்படையும் இல்லாதவைகள், பெரும்பாலான தர்ஹாக்களுக்கு எந்த உண்மையான வரலாறும் கிடையாது, அங்கு கப்ருகளே இல்லை என்பதும், அங்கு யாரும் அடக்கப்படவே இல்லை, அங்கு எந்த நல்லடியாரும் இல்லை. இவைகள் மக்களுக்கு மத்தியில் பரப்பப்பட்ட வெறும் கற்பனைக் கதைகள் தான். மக்கள் அவைகளை நம்பவைக்கப்படும் அளவுக்கு அவை பரப்பப்பட்டுள்ளன என்பதை நிரூபித்துக் காட்டுகின்றேன் என்று சவால் விட்டான்.**

**இதைகேட்ட ஸஈதிடம் ஒருவகையான பதட்டம் நிலவுகின்றது. அல்லாஹ்விடம் பாதுகாவல் தேடுகிறேன், அல்லாஹ்விடம் பாதுகாவல் தேடுகிறேன் எனப் பலமுறை கூறினான். பின்பு இருவருக்கும் மத்தியில் சிறிது நேரம் மௌனம் நிலவுகிறது. அவர்கள் பயணம் செய்த பஸ், அவர்கள் சேர வேண்டிய ஊரை அடைவதற்கு முன் ஒரு வளைவை கடக்க நேரீடுகின்றது. ஆதில் ஸஈதிடம் அந்த இடத்தைச் சுட்டிக் காட்டி இந்த இடத்திலும் ஏதாவது நல்லடியார்கள் அடக்கப்பட்ட கப்ருகள், தர்ஹாக்கள் இருக்குமா எனக் கிண்டலாகக் கேட்கின்றான்?.**

**ஸஈத்: இல்லை - பாதை ஓரங்களிலும், வளைவுகளிலும் நல்லடியார்களின் கப்ருகள் அமைக்கப்பட்டிருக்குமா? என்ன மக்களுக்கு அவ்வளவுக்கு புத்தி கிடையாதா? இவ்வூர் மக்களைப் பற்றி நீ மிக மட்டமாகக் கணக்குப் போட்டிருக்கின்றாய் என்று ஸயீத் சற்று ஆத்திரத்துடன் பதிலளிக்கின்றான்.**

**ஆதில்: இந்தச் வளைவில், கடந்த காலங்களில் ஒரு நல்லடியாரின் கப்ரு இருந்ததாக நாம் ஒரு கதையை பரப்பி அற்புதமான கராமத்கள் நடப்பதாகவும் கதைகளைப் புணைந்து, பிரார்த்தனைகள் ஏற்கப்படக்கூடிய இடமாக இருந்தது என ஒரு வதந்தியை பரப்பி விட்டால் மக்கள் நம்புவார்களா? இல்லையா? நான் உறுதியாக நம்புகிறேன் மக்கள் அந்தச் செய்திகளை ஏற்றுக் கொள்வார்கள். சில வேளை, எதிர் வரக்கூடிய வருடத்தில் இந்த ஷைகுக்கு ஒரு தர்ஹாவையும் கட்டி அல்லாஹ்வை**

விட்டு விட்டு அவரிடம் பிரார்த்திக்கவும் தயாராகி விடுவார்கள். ஆனால் அது ஒரு வெறும் மண் நிறைந்த இடமாக மாத்திரமே இருக்கும். அவர்கள் தோண்டினால் பூமியின் கீழ் பகுதிக்கு செல்லும் வரை மண்ணைத் தவிர வேறு எதையும் அவர்கள் பெற்றுக் கொள்ள மாட்டார்கள், என்று ஆதில் கூறினான்.

ஸஊத்: இதை விட்டு விடு! மனிதர்கள் இந்த அளவுக்கு மடையர்கள் என்று நீ நினைக்கின்றாயா?

ஆதில்: நல்லது நீ என்னோடு ஒத்துழைத்தால் என்ன நஷ்டம் ஏற்படும்? நீ எனது கருத்துக்களுக்கு உடன் பட்டு விட்டால் ஏதாவது விபரீதமான முடிவுகள் வருமென்று பயப்படுகிறாயா?

ஸஊத்: எனக்கு அதை பற்றியெல்லாம் பயம் கிடையாது எனினும் இவைகளை நான் ஏற்றுக் கொள்ளக்கூடியவனாக இல்லை.

ஆதில்: நீ வர்ணித்த 'ஷைக் பரகாதின்' கப்ரின் பக்கம் செல்வோம். உனது கருத்து என்ன?

ஸஊத்: உனது விருப்படியே செய்! ?

ஆதிலும் ஸஊதும் ஒரு மென்னைமயான போக்கைக் கையாண்டு இவர்கள் கற்பனையில் உருவாக்கிக் கொண்ட இந்த 'பரகாத் அவ்லியா' பற்றிய செய்தியை பாடசாலையிலுள்ள சக ஆசிரியர்களிடம் தோழர்களிடம் கொண்டு சென்று அவிழ்த்து விட ஆரம்பித்தார்கள். முடி திருத்தும் (சலூன்) கடைகள் இன்றைய காலகட்டத்தில் செய்திப் பரிவர்த்தனைக்கும், உடனுக்குடன் அன்றாட நிகழ்வுகளைப் பரப்புவதற்கும் ஒரு முக்கிய ஊடகமாக இருப்பதால் விஷேடமாக அங்கேயும் இந்த கற்பனை அவ்லியாவின் கராமத்துகள் சிலதை கட்டவிழ்த்து விட்டனர்.

பின்னர் அடுத்த நாள், அவர்கள் இருவரும் அவ்வூரை அடைந்தனர். பஸ்ஸில் இருந்து இரங்கி ஸலிம் எனும் பெயருடைய ஒரு கிராமவாசி நடத்தி வரும் சலூனுக்குச் சென்றனர், அவரிடம் அவ்லியாக்களின் அற்புதங்களைப் பற்றிக் கொஞ்சம் பேசினர். மேலும் இந்த ஊரிலும் ஒரு அவ்லியா அடங்கப்பட்டிருப்பதாகவும் அவர்கள் பல வருடங்களுக்கு முன் இங்கு

அடக்கப்பட்டவர் தான். அவர்களுக்கு அல்லாஹ்விடத்தில் உயரிய அந்தஸ்து இருக்கிறது, அவர்களைக் கொண்டு உதவி தேடுபவர்கள் இப்போது மிகவும் குறைவு என்றும் கூறினர்.

உடனே அந்தத் சலூன் கடைக்காரன் ஆவல் மேலீட்டுடன் அவர்களின் கப்ரு இருக்கும் இடம் உங்களுக்குத் தெரியுமா? என்று கேட்டான். ஊருக்குள் நுழையும் போது இருக்கக்கூடிய வளைவில் தான் இருக்கிறது எனச் சொன்னார்கள். உடனே அவன் மகிழ்ச்சிப் பெருக்குடன் நம் ஊரை ஒரு நல்லடியாரைக் கொண்டு அருள் பெறச் செய்த அல்லாஹ்வுக்கே எல்லாப்புகழும். நீண்ட நாட்களாக நான் இவ்வாறான ஒரு நல்லடியாரின் கப்ரொன்று நமது ஊரிலும் இருக்க வேண்டுமென்று ஆசைப்பட்டுக் கொண்டிருந்தேன். என்ன நியாயம் ... பக்கத்தில் இருக்கும் 'உம்மு கூசா' எனும் ஊரில் பத்துப் பனிரெண்டு அவ்லியாக்களின் தர்ஹாக்கள் இருக்கின்றன. நமது ஊரில் ஒரு அவ்லியாவின் தர்ஹா கூட இருக்கக் கூடாதா? என்று அவன் ஆதங்கத்துடன் கூறினான்!

ஆதில்: 'ஷைக் பரகாத்' என்பவர் பெரும் நல்லடியார்களில் ஒருவர் அவருக்கு அல்லாஹ்விடத்தில் மிக உயர்வு இருக்கிறது என்று கூறினான். அதற்கு அந்த சவரத்தொழிலாளி அல்லாஹ் அவர்களைத் தூய்மைப்படுத்தட்டும்! அந்த நல்லடியாரைப் பற்றி அறிந்து வைத்துக் கொண்டு நீர் ஏன் மௌனமாக இருக்கிறீர்!!! அனைத்து மக்களுக்கும் இந்த நற்செய்தியைப் பரப்ப வேண்டாமா? என்று தனது கவலையை வெளிப்படுத்தினார். பிறகு இந்த செய்தி ஊர் முழுக்க காட்டுத்தீ போல் பரவியது. மக்கள் மத்தியில் அவரைப் பற்றிய செய்திகள் அதிகமாக பேசப்பட்டது. சிலர் கனவில் கூட தங்களுக்கு அந்த மகான் காட்சி தந்ததாகக் கூறத்தொடங்கினர். சிலர் அவர்களுடைய ஓய்வு நேரங்களிலும், சபைகளிலும் அவரது அற்புதங்களாக, அவருடைய உயர்வு, அவரது தலைப்பாகையின் நீளம், அவர் நிகழ்த்திக் காட்டிய கணக்கிட முடியாத அற்புதங்கள், பாங்கு சொல்வதற்குரிய நேரம் வந்து விட்டால் பாங்குமேடையே அவரை நோக்கி நகர்ந்து வந்த பேரதிசயம் இப்படி இதைப் பற்றியே பேசிக்கொண்டிருந்தனர்.

பள்ளிக்கூடத்தில் ஆசிரியர்களுக்கு மத்தியிலும் இதே பேச்சாக இருந்தது. விடயம் அளவு கடந்து சென்ற போது 'ஸஈதால்' பொறுமையாக இருக்க

**முடியவில்லை, அவன் உரத்தக்குரலில் ஏ புத்தியுடையவர்களே! இந்த மூடக்கதைகளை விட்டு விடுங்கள் என்று சத்தமிட்டான். அதை கேட்ட அவர்கள் ஒரே குரலில் இது மௌட்டீகமா? 'ஷைக் பரகாத்' அங்கு இல்லையா? என்று விழி பிதுங்கக் கேட்டனர்.**

**ஸஊத்: ஆம்! அங்கு அப்படியொருவர் இல்லை மேலும் அப்படியொரு உண்மையான கப்ரும் இல்லை, அது ஒரு கட்டுக் கதை, அந்த வளைவில் மண்ணுக்குள் மண் தான் இருக்கிறது. அங்கு ஒரு ஷைகும் இல்லை வலியும் இல்லை அப்படி ஒரு இடமும் இல்லை. நாங்கள் தான் இப்படி கற்பனையில் ஒரு 'வலியை' உருவாக்கி அதன் கதையை மக்கள் மத்தியில் பரப்பி விட்டோம் என்று கூறினான். ஆசிரியர்கள் வியப்புற்று பார்க்கின்றனர் நீ என்ன சொல்கிறாய்! 'ஷைக் பரகாத்'தைப் பற்றி எப்படி நீ அபாண்டமாகச் சொல்லத் துணிந்தாய்? 'ஷைக் பரகாத்' தான் இந்த ஊரின் மேற்கு பகுதியில் தண்ணீர் ஊற்றுக் கண்களை பீறிட்டு வரச் செய்தார், அவர்தான் அதைச் செய்தார், இதைச் செய்தார் என்று அடுக்கிக் கொண்டே சென்றனர். அவர்களின் வார்த்தைகளால் ஸஊத் வாயடைத்துப் போய் விட்டான். எனினும் ஸஊத் சொன்னான்: உங்கள் புத்திகளை பிறரிடம் அடகு வைத்து விடாதீர்கள். எதையும் கண் மூடித்தனமாக ஏற்று பின்பற்றாதீர்கள்! நீங்கள் அறிவுஜீவிகள், ஆசிரியர்கள், நீங்கள் புகழக் கூடிய அப்படியொரு கப்ரோ தர்ஹாவோ அங்கு இல்லை. நீங்கள் உறக்கத்தில் இருக்கும் போது ஷைத்தான் உங்கள் சிந்தனைகளில் விளையாடி விட்டான், நீங்கள் இப்போது அதை உண்மைப் படுத்திக் கொண்டு இருக்கிறீர்கள் என்று கூறினான்.**

**அப்போது பாடசாலையின் முதல்வர் அங்கு வந்து அவர்களுக்கு மத்தியில் நடந்த உரையாடலில் கலந்து கொள்கிறார். அப்படியொரு 'ஷைகு' இருப்பது பற்றிய அந்த செய்திகள் அனைத்தும் உறுதியாகி விட்டது, நேற்று இரவு வெளியான பத்திரிகையை நீங்கள் படிக்கவில்லையா? என்று ஒரு போடு போடுகின்றார். ஸஊத் வியப்படைகிறான் பத்திரிகைகளும் இச் செய்தியை விட்டு வைக்கவில்லையா? என்று ஆச்சரியப் பட்டபோது அதிபர் சொல்கிறார்: பத்திரிகையில் 'ஷைக் பரகாத்' அவருடைய அடக்கஸ்தலம் அண்மையில் கண்டு பிடிக்கப்பட்டுள்ளது எனும் தலைப்பிட்டு செய்தி வெளியாகி உள்ளது, அதில் உள்ளதை முதல்வர் உரத்து வாசிக்க ஆரம்பித்தார், 'ஷைக் பரகாத்', அல்லாஹ் அவரை பரிசுத்தமாக்கட்டும்! ஹிஜ்ரி 1100ம் வருடம் பிறந்தார்கள். இவர்கள் 'ஹாலித் இப்னு வலீத்' (ரலி)**

என்ற ஸஹாபியின் வழித்தோன்றலில் உதித்தவர். இவர் பல தலை சிறந்த அறிஞர்களிடம் அறிவுஞானத்தைக் கற்றார், கிறிஸ்தவர்களுக்கும் துருக்கிப் படையினருக்கும் மத்தியில் நடந்த ஒரு போரில் கிறிஸ்தவர்களுக்கு எதிராக போராடினார். போர் உக்கிரமம் அடைந்த போது 'ஷைகின் கராமத்' வெளிப்படத் துவங்கியது அவர்கள் தனது திரு வாயினால் கோபத்துடன் எதிரிப்படையை நோக்கி ஊதினார்கள். என்ன ஆச்சரியம்! வாயில் இருந்து ஒரு புயற்காற்று வெளியானது, அது ஏற்படுத்திய தாக்கத்தால் எதிரிப்படையினர் ஒட்டுமொத்தமாகத் தூக்கி வீசப்பட்டு, நூறு மீட்டர் தூரத்துக்கு அப்பால் காற்றில் பறந்து பிணங்களாக, இரத்தம் பீறிட்ட நிலையில் விழுந்தனர்.' என்று அதில் எழுதப்பட்டிருந்தது.

ஸஊத் வியப்படைந்தவனாக மாஷாஅல்லாஹ்! பத்திரிகையாளர் 'ஷைக் பரகாத்' பற்றி இப்படி துல்லியமான செய்திகளை எங்கிருந்து பெற்றார்கள்? என்று வினவினார், அதற்கு முதல்வர், இவை அனைத்தும் உண்மைகளே, அந்நிருபர் தனது வாப்பா வீட்டில் இருந்து இத்தகவல்களைக் கொண்டு வந்தார் என்று நீர் எண்ணுகின்றீரா? இது உண்மையான வரலாறு என்று வாதிட்டார்.

ஸஊத், எனினும் முன்வைக்கப்படும் தகவல்களுக்கு உறுதியான ஆதாரங்கள் தேவை. அதைச் சொல்பவர்களிடம் தெளிவான ஆதாரங்கள் இருக்க வேண்டும், நானாக இருந்தாலும் நீங்களாக இருந்தாலும் சொல்லப்படும் செய்திகளில் ஆதாரங்கள் இருக்கும் போது தான் ஏற்றுக் கொள்வோம். அப்படியில்லை என்கின்ற போது ஒவ்வொருவனும் அவனுக்கு விருப்பமானதைச் சொல்ல ஆரம்பித்து விடுவான் என்று கூறினார். கப்றுகள் என்றும் அவ்லியாக்கள் என்றும் அற்புதங்கள் என்றும் ஒவ்வொருவரும் தாம் விரும்பியதைச் சொல்ல ஆரம்பித்து விடுவார்கள் என்று கூறினார்...

பின்பு ஸஊத் உரத்தக்குரலில் அனைவரையும் அழைத்து, 'ஷைக் பரகாத்'துடைய இடம் அங்கு அமைந்திருப்பதென்பது ஒரு பொய்யான செய்தியாகும். தவறான போலிப்பிரச்சாரமாகும். இது நானும் ஆசிரியர் ஆதிலும் சேர்ந்து புனைந்த ஒரு பொய்யான கட்டுக் கதையாகும். மக்களின் அறியாமையையும் ஏமாறும் தன்மையையும் உறுதிப் படுத்துவதற்காக நாங்கள் இருவரும் போட்ட திட்டமாகும். மக்கள் எந்தத் தகவலையும் உறுதி செய்து ஏற்றுக் கொள்வதில்லை என்பதனைப் பரிசோதிப்பதற்காக நாங்கள் செய்ததாகும். 'ஆதில்' உங்களுக்கு முன்னால் தான் இருக்கிறார்,

நீங்கள் விரும்பினால் அவரிடம் கேளுங்கள் என்று ஸஈத் கூறினார். 'ஆதிலின்' பக்கம் அனைவரும் திரும்பினர், எனினும் அவர்கள் 'ஆசிரியர் ஆதிலும்' உம்மைப் போன்று தர்க்கிப்பதை விரும்பக்கூடியவரும் ஒவ்வொன்றுக்கும் ஆதாரங்களைக் கேட்கக்கூடியவரும், அவ்லியாக்களை-நல்லடியார்களை மதிக்காதவர் தான். நீரும், 'ஆதிலும்' என்ன கூறினாலும் சரி 'ஷைக் பரகாத்' என்று ஒருவர் நமது மூதாதையர் காலத்தில் வாழ்ந்துள்ளார். அல்லாஹ் அவரைப் பரிசுத்தப்படுத்தட்டும்! உலகம் என்பது அவ்லியாக்கள்-நல்லடியார்கள் அடக்கப்பட்ட இடங்களை விட்டும் ஒரு போதும் காலியானதாக இருந்ததில்லை. நீங்கள் கூறும் வழி கேட்டை விட்டும் நாங்கள் அல்லாஹ்விடம் பாதுகாப்பு தேடுகிறோம் என்று அவர்கள் ஒருமித்த குரலில் கூறினார்கள்.

ஆதிலும், ஸஈதும் மௌனமானார்கள். அவர்களால் படித்தும் மூடர்களாக இருக்கும் இவர்களிடம் இதற்கு மேல் புரிய வைக்க முடிய வில்லை. மணி அடித்ததும் வகுப்புக்கள் ஆரம்பமாகியது, ஆசிரியர்கள் களைப்புடன் வெளியேறிச் சென்றனர். ஆசிரியர் ஸஈதுக்கும் இந்த படித்த மூடர் கூட்டத்தின் பேச்சுக்களால் ஒரு வித தடுமாற்றம் ஏற்பட்டது. உண்மையில் 'அஷ்ஷைக் பரகாத்' என்று ஒருவர் உள்ளாரோ? பேசப்படும் அற்புதங்கள் ஒருவேளை உண்மையானதோ? 'ஆதில்' ஏற்கெனவே இந்த 'வலீ' சம்பந்தமாக அறிந்து வைத்துக்கொண்டு எம்மை ஏமாற்றி எம்மிடத்தில் அவ்லியாக்களை நம்பும் கொள்கையை அகற்றி வழிகெடுக்க வேண்டும் எனும் நோக்கத்தில் கூட இப்படிச் செய்திருப்பாரோ? என்று பல கேள்விகளை தன்னுள்ளே கேட்க ஆரம்பித்து விட்டார். இவர்கள் அனைவரும் ஒருமித்துத் தவறாகச் சொல்வார்களா? பத்திரிகை நிருபர் எழுதியது பொய்யா? இப்படி அவனுள்ளே பல கேள்விகள்.

நேற்று ஷைக்மார்கள் அனைவரும் ஒன்றுகூடி 'பரகாத்து' அவ்லியாவுக்காக அந்த வளைவு அமைந்திருக்கும் இடத்தில் 'ஹல்ரா' நடத்தி விழா எடுத்தனர். எனினும் 'ஷைக் பரகாத்' என்பவர் ஆதிலின் கற்பனையில் உருவானவர், அப்படியானால் அனைவரும் எப்படி இக் கருத்துக்கு பலியானார்கள் இது முடியாத காரியம் இது ஆதிலின் கற்பனை அல்ல. ஸஈதுடைய சிந்தனையில் ஒரு புதிய கருத்து உதித்தது, ஒரு வேளை 'ஷைக் பரகாத்' என்பவர் உண்மையில் இருந்திருக்கலாம் ஆதில் இதை முன்பே அறிந்து வைத்திருக்கலாம். அதனால் தான் அவர் 'ஷைக் பரகாத்' என்று ஒருவர் இருப்பதாக சந்தேகத்தை

ஏற்படுத்தியிருப்பார். ஆசிரியர் ஸஈத் இதைப் பற்றி சிந்தித்த வண்ணமாகவே இருந்தார். ஷைத்தானியத்தான இந்த சிந்தனைகளில் இருந்து விடுபடுவதற்கு பாதுகாப்பு தேடிக்கொண்டார், எனினும் இது வெற்றியளிக்கவில்லை. இரண்டாவது நாளும் இந்த விடயம் தொடர்பாகவே பள்ளிக்கூடத்தில் கதைகள் ஆரம்பித்தன. அந்த வருடத்தின் பாடங்கள் இறுதிக் கட்டத்தை அடைந்து விட்டதால் கோடைக்கால விடுமுறையில் அனைத்து ஆசிரியர்களும் தமது ஊர்களுக்குச் சென்றதால் அதைப் பற்றிய கதையும் நின்று விட்டது.

அதைத் தொடர்ந்து புதிய கல்வியாண்டு ஆரம்பமாகி விட்டது. ஆதிலும் ஸஈதும் பஸ் ஏறி தாம் பணிபுரியும் பாடசாலை அமைந்திருக்கக்கூடிய ஊருக்கு வருகின்றனர். ஆசிரயர் ஆதில் 'ஷைக் பரகாத்'துடைய விடயத்தை முழுமையாக மறந்துவிட்டார். எனினும் அந்த பொய்யான கதையை முழு கிராமத்திலும் பரவுவதற்குக் காரணமாக இருந்தவர். எனினும் ஸஈத் இந்த விடயத்தில் நிதானமாக இருந்தார். அந்த ஊருடைய வளைவு நெருங்கி வர வர, அவர் தனது வாயினுல் ஏதோ பிரார்த்தனைகளையும், திக்ருகளையும் முனு முனுக்க ஆரம்பித்து விட்டார். இந்த வளைவை நெருங்கியவுடன் ஆச்சரியமான ஒரு விடயம் காத்திருந்தது. 'ஷைக் பரகாத்'தின் பெயரில் அழகான ஒரு (தர்ஹாவை) கட்டிடத்தை எழுப்பப்பட்டிருந்தது. அது வளைவுக்கு மேல் உயர்ந்து விளங்கியது. அதற்குப் பக்கத்தில் ஆடம்பரமான தோற்றத்தில் ஒரு மஸ்ஜித் துருக்கியின் கட்டிடக் கலையின் அனைத்து வேலைப்பாடுகளுடனும் அவ்விடத்தில் இலங்கிக் கொண்டிருந்தது. அதைப் பார்த்து, 'ஆசிரியர் ஆதில்' ஆச்சரியத்துடன் சிரித்துக் கொள்கிறார், பாமர மக்களின் அறியாமையை புரிந்துக் கொள்கிறார் நிச்சயமாக ஷைத்தான் அவர்களுக்கு மத்தியில் ஷிர்க்கை பரப்புவதில் வெற்றிகொண்டு விட்டான். ஸஈதுடன் சேர்ந்து சிரிக்கலாம் என ஸஈதை பார்க்கிறார் ஸஈத் பிறார்த்தனைகளில் ஈடுபடுவதைக் கண்டு வியப்பில் ஆழ்ந்து விட்டார், ஸஈத் உரத்த குரலில் பஸ் ஓட்டுனருக்கு பஸ்ஸை சிறிது நேரத்திற்கு நிறுத்துமாறு சொல்கிறார் பின்பு கைகளை உயர்த்தி ஷைகு 'பரகாத்து'க்காக பாதிஹா ஓதுகிறார். ஷைத்தான் எப்படி மனித மூளைகளில் விளையாடுகிறான் பார்த்தீர்களா? (அல்-பயான் சஞ்சிகையில் இருந்து).

## அங்கு என்ன நடைபெறுகிறது?

சமாதி வழிப்பாட்டில் ஈடுபடக்கூடியவர்கள், அவர்களுடன் ஆடு, மாடு, கோழி, உப்பு, சீனி, தேயிலை என பல வகையான உணவுகள், பணம் போன்றவைகளை கொண்டு போய் அவருடைய நெருக்கத்தை பெறவேண்டும் என்பதற்காக அங்கு அடங்கப்பட்டிருப்பவருக்கு பூஜிக்கின்றனர். ஆடு, மாடு, கோழி போன்றவைகளை அடங்கப்பட்டிருப்பவர்களுக்காக அறுத்து அவர்களின் நெருக்கத்தைத் தேட முயல்கின்றனர். அக் கப்றுகளை வலம் வருகின்றனர், அந்த மண்ணில் விழுந்து புரளுகின்றனர், அதை தேய்த்துக் கொள்கின்றனர், அதை தங்களோடு எடுத்து வருகின்றனர், தங்களது தேவைகளை நிறைவேற்றித் தறுமாரும், துன்பங்களை நீக்குமாறும் வேண்டுகின்றனர்.

இன்னும் இப்படியான வழி தவறியவர்கள் 'மௌத்தாக்கள்' மீதும் அடக்கப்பட்டவர்கள் மீதும் சத்தியம் செய்வதையும் காணலாம். ஏதாவது ஒரு விடயத்துக்காக சத்தியம் செய்யும் போது அல்லாஹ்வின பெயரில் சத்தியம் செய்யும் போது அதை ஏற்றுக்கொள்ளாத, உண்மைபடுத்தாத ஒரு நிலையும், அவர்களின் வலியின் பெயரில் அவ்லியாக்களின் பெயரில் செய்யும் போது அதை ஏற்றுக்கொள்வதையும் உண்மைப்படுத்துவதையும் காணலாம்.

சில இடங்களில் இவ்விடயம் எல்லை மீறிச் சென்று அக்கப்ருகளில், தர்ஹாக்களை ஹஜ்ஜுச் செய்தல் எனும் ஒரு வணக்கத்தையும் அறிமுகம் செய்து வைத்திருக்கின்றனர், அதற்கென சில குறிப்பிட்ட வணக்க வழிபாடுகளையும் ஏற்படுத்தியிருக்கின்றனர். இன்னும் அதற்கென தனி நூல்களையும் இவ்வரம்பு மீறியவர்கள் வெளியிட்டுள்ளனர் இந்த வழிகேட்டின் புத்தகத்திற்கு 'தர்ஹாக்களை ஹஜ் செய்யும் வழி முறைகள்' என பெயரும் இட்டுள்ளனர். அக்கப்ருகளை புனித ஆலயமான கஃபாவுக்கு ஒப்பாக்கியுமுள்ளனர் (அல்லாஹ் பாதுகாப்பானாக!).

ஷிர்கிலும், நூதன வழிபாடுகளிலும் வரம்பு மீறிய இவர்கள் தர்ஹாக்களைத் தரிசிப்பதற்கு சில வழி முறைகளை ஏற்படுத்தியிருக்கிறார்கள், தர்ஹாக்களை தரிசிக்கும் போது அங்கு அடங்கப்பட்டிருப்பவருக்கு மரியாதை செலுத்தும் விதமாக பாதணிகளைக் கழட்ட வேண்டும்,

வாயிற்காவலாளியின் அனுமதியைப் பெற்றே குப்பாவுக்குள் நுழைய வேண்டும். இவ்வாறான தர்ஹாகளில் நியமிக்கப்பட்டிருக்கும் பணியாளார்கள், தர்ஹாவிற்கு வருகைதரும் முஸ்லிம்களை, மக்காவிலுள்ள 'புனித கஃபாவை வலம் வருவது போல' இவர்கள் இக் கப்ருகளை வலம் வருவதற்கு வழிகாட்டி அழைத்துச் செல்வார்கள். தரிசிக்கக்கூடிய பக்தர்கள் அந்த தர்ஹாவில் இருந்து பரக்கத் பெறுவதற்கு, பல வழிகளைக் கடைப்பிடிப்பர்கள். அவர்களிற் சிலர் கப்ரின் மண்ணை எடுத்து வைத்துக் கொண்டு அதன் மூலம் பரக்கத் தேடுவர். வேறு சிலர் கப்ரில் உள்ள 'வலீ'யின் பெயர் பொறிக்கப்பட்ட உலோகத் தகட்டை முத்தமிட்டு கைகளால் தடவி அதனைத் தனது உடையிலும் உடலிலும் பூசிக் கொள்வர். தர்ஹாவுக்குள் நுழைந்த ஒருவருக்கு அந்த கப்ரிடம் பிரார்த்திப்பது மனஒருமையோடு அதனிடம் உதவி தேடுவது, மேலும் இதைப்போன்று அங்கு அல்லாஹ் அல்லாதவர்களுக்கு செலுத்தப்படக்கூடிய ஆச்சரியமான பல்வேறு விதமான வினோத வழிபாடுளையும் காணமுடியும்.

இதைவிட ஒரு படி மேலாக பெண்கள் தங்கள் குழந்தைகளை தூக்கி குலுக்கியவர்களாக கப்ரிலே போட்டு உறுட்டி ஷைகிடம் குழந்தையின் பரக்கத்துக்காக பிரார்த்திப்பதையும் காணலாம். இதே போல் கப்ருகளை முன்னோக்கி சுஜூதில் விழுபவர்கள் எத்தனை எத்தனையோ.. இவைகளுக்காக வைக்கப்படக்கூடிய நேர்ச்சைகள் கணக்கில் அடங்கா! இன்னும் எத்தனையோ பேர் தங்களது நோய்கள் குணமடைவதற்கும், தேவைகள் நிறைவேறுவதற்கும் பல மாதங்களாக, நாட்களாக அங்கு தவம் இருக்கக்கூடிய பரிதாப காட்சிகள் எத்தனை எத்தனையோ. சில தர்ஹாக்களோடு இணைத்து யாத்திரிகர்கள் தங்குவதற்கு வசதியாக அறைகளையும் கட்டி வாடகைக்கு விட்டுள்ளனர். அங்கு தரிசிக்க வருவோர் தங்களின் உள்ளச்சத்தையும், அமைதியான போக்கையும் ஒரு விதமான மாற்றத்தையும் அழுகையின் மூலம் வெளிப்படுத்துவர். இவர்கள் அல்லாஹ்வை விட்டு விட்டு சமாதிகளை, கடவுளாக்கி விட்டனர். அல்லாஹ்வின் மீது ஆணையாக அவனுடன் ஒரு நபியையோ, மலக்கையோ இணைத்து வணங்குவதையே பொருந்திக் கொள்ளாத, அதை மாபெரும் குற்றமாக கருதக்கூடிய நாயன், வேறு யாரையாவது இணையாக்கி வணங்கினால் எப்படிப் பொருந்திக் கொள்வான்? என்பதனை நாம் சிந்திக்க கடமைப்பட்டுள்ளோம்.

## குழம்பிவிட்ட உள்ளங்கள்!

சமாதிகளில் அடக்கப்பட்டவர்கள் தங்களுக்கே எந்த ஒரு நன்மையும் செய்து கொள்ள இயலாதவர்களாக, சக்தியற்றவர்களாக இருக்கும்போது, பிறருக்கு எப்படி உதவி புரிய முடியும்? சமாதிகளை, சிலைகளை புனிதப்படுத்துபவர்கள், அதற்கு பயந்து வாழக்கூடியவர்களின் நிலமையைப் பார்க்கும் போது, 'ஸகீப்' கோத்திரத்தார் இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டபோது அவர்களிடம் இருந்த சிலைக்கு பயப்படும் நிலமையை ஒத்துள்ளதை அறிய முடியும். அது எந்த ஒரு நன்மையோ தீமையோ செய்வதற்கு சக்தியற்றது என்பது உள்ளங்கை நெல்லிக்கனி போல் தெளிவான விடயம்.

**<u>ஓர் உண்மைச் சம்பவம் :</u>**

மூஸா பின் உக்பா கூறுகிறார், மனிதர்களுக்கு மத்தியில் இஸ்லாத்தின் ஒளி பரவிய பொழுது பல்வேறு கோத்திரத்தினர் தாம் இஸ்லாத்தை ஏற்றுக்கொண்டதை அறிவிப்பதற்காக தங்களது கூட்டங்களை நபியிடம் அனுப்பினார்கள். இவ்வாறே ஸகீப் கோத்திரத்தாரைச் சேர்ந்த பத்துப்பேர் கொண்ட ஒருஜமாஅத் நபியவர்களிடம் வந்தனர். நபியவர்கள்- குர்ஆனை செவிமடுப்பதற்காக அவர்களை மஸ்ஜிதுக்குள் சென்று அமருமாறு கூறினார்கள். அவர்கள் தாங்கள் இஸ்லாத்தை ஏற்றதை பகிரங்கப் படுத்த நாடிய போது அவர்களின் சிலர் சிலரை பார்க்க ஆரம்பிக்கின்றனர் அவர்கள் வணங்கி வந்த சிலையை நினைவு கூறுகின்றனர் அவர்களின் கடவுளுக்கு 'றப்பா' எனும் பெயர் கூறி அழைத்தனர். நபி (ஸல்) அவர்களிடம் வட்டி, விபச்சாரம், மது போன்ற பெரும் பாவங்களைப் பற்றி கேட்டு அவைகள் அனைத்தையும் தவிர்ந்து கொள்வதாக உறுதியளித்தனர். பின் அவர்களின் சிலையான 'றப்பா' வின் விடயம் பற்றி-அதன் விடயத்தில் எவ்வாறு நடந்து கொள்வது என்பது பற்றிக் கேட்டார்கள், அதை உடைத்தெறியுங்கள் என நபியவர்கள் கூறினார்கள் அதற்கவர்கள் ஐயய்யோ.. அது ஒருபோதும் நடக்காது நீங்கள் 'றிப்பாவை' உடைக்கச் சொன்னதை அது அறியுமானால் அதனை உடைக்க வந்தவர்களையும் அதைச்சுற்றி வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தவர்களையும் அது அழித்து விடும் என்று கூறினர். இதனைக் கேட்டுக்கொண்டிருந்த உமர் (ரலி)அவர்கள் 'உங்களுக்குக் கேடு உண்டாகட்டும்' ஏன் இந்தளவுக்கு மூளையை

அடகு வைத்த மூடர்களாயிருக்கின்றீர்கள்? அது என்ன கடவுளா? வெறும் கல் தானே? என்று சற்று ஆத்திரத்துடன் கூறினார்கள், இதைக் கேட்ட அவர்களும் சற்று ஆத்திரமுற்றவர்களாக உமரே! நாம் உம்மிடம் எதுவும் கேட்டு வரவில்லை எனக் கூறினார்கள். சொல்லிவிட்டு அல்லாஹ்வின் தூதரே! அதனை உடைக்கும் பொறுப்பை நீங்களே ஏற்றுக் கொள்ளுங்கள் நாம் அதை உடைக்க மாட்டோம் என்று ஒரே முடிவுடன் கூறினார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள் நான் உங்களிடம் அதனை உடைக்கக்கூடியவர்களை அனுப்பி வைக்கிறேன் எனக் கூறினார்கள். அவர்கள் அங்கிருந்து விடைபெறுவதற்கு நபியிடம் அனுமதி கோரி அங்கிருந்து புறப்பட்டுச் சென்று தங்கள் கூட்டத்தினரை இஸ்லாத்தின்பால் அழைத்தார்கள். அவர்களும் இஸ்லாத்தை ஏற்றார்கள். இவ்வாறே நாட்கள் சில நகர்ந்தன. என்றாலும் அவர்களின் உள்ளத்தில் சிலைபற்றி அது ஏதும் செய்து விடுமோ என ஒருவித அச்சம் குடிகொண்டிருந்தது.

பின்னர் நபியவர்கள் சிலையை உடைத்தெறிவதற்காக ஹாலித் இப்னு வலீத் (ரலி), முயீரதுப்னு ஷுஃபா (ரலி) ஆகியோருடன் சில நபிதோழர்களையும் அனுப்பி வைத்தார்கள். உடனே இதனைப் பார்ப்பதற்காக அங்குள்ள ஆண்கள், பெண்கள், சிறுவர்கள் அனைவரும் ஒன்றுகூடுகின்றனர். அவர்களிடத்தில் ஒரு வகையான பீதி, இவர்களால் இச்சிலையை உடைக்கமுடியாது அதை தொட்டவர்கள் அழிந்து போவார்கள் என உறுதியாக நம்பிக் கொண்டிருந்தனர். முயீரா இப்னு ஷுஃபா (ரலி) அவர்கள் சிலையின் பக்கம் நெருங்கிக் கோடரியை எடுக்கிறார். அல்லாஹ்வின் மீது ஆணையாக உங்களை நான் சிரிக்க வைக்கிறேன் எனச் சொல்லி ஆயுதத்தால் அடிக்கிறார். என்ன ஆச்சரியம்!! அவரது காலை மேலே தூக்கியடித்தவராக கீழே விழுந்து விடுகின்றார். இதனைக் கண்ட மக்கள் கூச்சலிட்டனர் அச்சிலை அவரை கொன்று விட்டது என எண்ணி விட்டார்கள் பின்பு காலித் இப்னு வலீதுக்கும் அவருடன் வந்தவர்களுக்கும் நீங்கள் முடியுமானால் சிலையை நெருங்குங்கள், பார்க்கலாம் என்று சவால் விட்டு உங்களால் ஒரு போதும் அதனை உடைக்க முடியாது எனச் சூழுரைத்தனர். அவர்களது சிலை தம்மைப் பழிவாங்கி விட்டதாக நினைத்து அவர்கள் மகிழ்ச்சியில் இருப்பதை முயீரா பார்க்கிறார், எழுந்து சொன்னார், ஸகீப் கூட்டத்தாரே! நிச்சயமாக அது வெறும் கல்லாகும், அல்லாஹ்வின் மன்னிப்பின் பால் நெருங்குங்கள், அவனை மாத்திரம் வணங்குங்கள், நான் இதைக் கல் என்று நிரூப்பதற்காகவே வேண்டுமென்று இவ்வாறு கீழே விழுந்தேன் என்று

கூறினார்கள். பின்பு கோடரியை எடுத்து சிலை மீது ஓங்கி அடித்தார்கள் சிலை உடைந்து விட்டது. பின்பு ஸஹாபாக்கள் அதன் மேல் இருந்து கொண்டே ஒவ்வொரு கல்லாக உடைத்தெறிந்து அதனைத் தரை மட்டமாக்கினார்கள். தற்காலத்தில் கூட கட்டப்பட்டுள்ள அனைத்து தர்ஹாக்களையும், தவ்ஹீத்வாதிகள் முயற்சிசெய்து இடித்து தரைமட்டமாக்க வேண்டும். அவ்வாறு செய்பவர்களை அங்கு அடங்கப்பட்டவர்களால் ஒருபோதும் ஒன்றுமே செய்ய முடியாது.

## ஷிர்க் (இணைவைத்தல்) பரவியது எப்படி?

பூமியில் எப்படி ஷிர்க் பரவியது என நீங்கள் சிந்தித்தால், நல்லடியார்கள் மீது கொண்ட அளவு கடந்த மரியாதையும், பக்தியும் அவர்களது அந்தஸ்துகளை பெரியளவிற்கு உயர்த்தியதுதான் இதற்குக் காரணம் என்பதை தெளிவாக உணர முடியும். நூஹ் (அலை)யின் சமுதாயத்தினர் அனைவரும் ஏகத்துவ வாதிகளாக இருந்தனர், அல்லாஹ்வுக்கு எந்த ஒன்றையும் இணையாக்காமல் அவனை மாத்திரம் வணங்கி வழிப்பட்டனர். பூமியில் எங்கும் அப்போது ஷிர்க் நிலைகொண்டு இருக்கவில்லை. அவர்களிடையே ஐந்து நல்லடியார்கள் காணப்பட்டனர். அவர்கள், 'வுத், ஸுவாஉ, யஊஸ், யஊக், நஸ்ர்' அவர்கள் அல்லாஹ்வுக்கு கட்டுப்பட்டு வாழ்ந்தார்கள், மக்களுக்கு மார்க்கத்தை போதித்தார்கள். அவர்கள் இறந்து விட்ட பொழுது மக்கள் கவலை அடைந்தனர். வணக்க வழிபாடுகளை நமக்கு நினைவூட்டக்கூடியவர்கள் அல்லாஹ்வுக்கு வழிப்படுமாறு நமக்கு ஏவக்கூடியவர்கள் நம்மை விட்டும் பிரிந்து சென்று விட்டனர் எனக் கவலையோடு கூறினர்.

அவ்வேளை ஷைத்தான் அச்சமுதாயத்தவர்களின் உள்ளங்களில் ஊசலாட்டங்களை ஏற்படுத்த ஆரம்பித்தான். அவர்களின் உருவங்களை சிலை வடிவில் அமைத்து உங்களது மஸ்ஜித்களுக்கு அருகில் நிறுத்தினால் அவர்களைக் காணும்போது வணக்க வழிபாடுகள் செய்வதற்கு ஓர் புத்துணர்வு ஏற்படும் எனச் சொன்னான். அவர்கள் ஷைத்தானுக்கு வழிப்பட்டார்கள், சிலைகளைச் அடையாளச்சின்னங்களாக, வணக்க வழிபாடுகளுக்கும் நல்ல காரியங்களுக்கும் எடுத்தார்கள். உண்மையிலே அவர்கள் அதை பார்க்கும் போது வணக்க வழிபாடுகள் செலுத்துவதற்குரிய ஞாபகம் அவர்களுக்கு ஏற்பட்டது. பல வருடங்கள் கழிந்தன, அந்தத்

தலைமுறையினர் உலகத்தை விட்டுச் சென்று விட்டனர். அதற்கு பின் அவர்களது சந்ததிகள் உருவானார்கள், அவர்களது மூதாதையர்கள் அச்சிலைகளைப் புகழ்வதை அவர்கள் கேட்டிருக்கிறார்கள். எனவே அவர்களும் அதை கண்ணியப்படுத்தினார்கள், பெருமைப்படுத்தினார்கள் அவர்களுக்கு, அச்சிலைகள் நல்லடியார்கள் எனச் சொல்லப்பட்டிருந்தது. அதன் பின் அவர்களது சந்ததிகள் உருவானார்கள் அவர்களுக்கு இப்லீஸ் கூறினான், ‘உங்களுக்கு முன் சென்றவர்கள் இதை வணங்கி வந்தனர். உங்களுக்கு ஏதாவது இன்னல்கள் சோதனைகள் வரும்போதும், தேவைகள் ஏற்படும் போதும் அவைகளை நாடுங்கள் அவைகளிடம் உதவி தேடுங்கள் அவைகளை வணங்குங்கள் என்று கூறினான். நூஹ் (அலை) அவர்களை அவர்களுக்கு இறைத் தூதராக அனுப்பப்படும் வரை அச்சிலைகளை வணங்கினர் அவர்கள் 950 வருடங்கள், அவர்களை ஏகத்துவத்தின் பால் அழைத்தார்கள். எனினும் சொற்பனமானவர்களேயன்றி ஏனையோர் நம்பிக்கை கொள்ளவில்லை. அல்லாஹ்வின் சாபமும் கோபமும் இறை நிராகரிப்பாளர்கள் மீது இறங்கியது. அவர்களை ‘தூபான்’ எனும் பெரும் வெள்ளத்தைக் கொண்டு அல்லாஹ் அழித்தான். இது நூஹ் நபியின் சமூகத்துக் ஏற்பட்ட பரிதாபத்திற்குரிய நிலையாகும்.

**<u>இப்றாஹீம் நபியின் சமுதாயத்தில் எவ்வாறு ஷிர்க் பரவியது?</u>**

அவர்கள் நட்சத்திரங்களையும், தாரகைகளையும் வணங்கி வழிப்பட்டார்கள். உலகை அவைகள் ஆட்சி செய்கின்றன என்றும், கஷ்டங்களை போக்கக்கூடியன எனவும், பிரார்த்தனைகளுக்கு பதில் அளிக்கக்கூடியன எனவும், தேவைகளை நிறைவேற்றக்கூடியது எனவும் நம்பிவந்தனர். அல்லாஹ்வுக்கும் அடியார்களுக்கும் மத்தியில் உள்ள இடைத்தரகர்களாக நட்சத்திரங்களை அவர்கள் எண்ணி வந்தனர். நிச்சயமாக உலகத்தின் ஆட்சி அனைத்தும் அவைகளிடம் ஒப்படைக்கப்பட்டுள்ளது என நினைத்தனர். பின் அவர்கள் நட்சத்திரங்கள் மற்றும் வானவர்கள் வடிவில் சிலைகளை அமைத்தனர். இப்றாஹீம் நபியின் தந்தை சிலைகளை செய்து தனது பிள்ளைகளிடம் விற்று வருவதற்காகக் கொடுப்பார். இப்றாஹீமும் சிலைகளை விற்பதற்கு செல்லக்கூடியவராக இருந்தார், இப்றாஹீம் நபி அதை விற்கும் போது ‘உங்களுக்கு எந்தத்தீங்கோ நன்மையோ செய்ய முடியாத இச்சிலைகளை வாங்குபவர் யார்? என்று கூறி விற்பனைசெய்தார்கள். மேலும் ‘இதை வாங்குபவருக்கு இது எந்தத்தீங்கும் பயனும் அளிக்காது’ என்றும்

சொல்வார். அவரது ஏனைய சகோதரர்கள் அனைத்து சிலைகளையும் விற்று விட்டு வருவார்கள். இப்றாஹீமோ கொண்டு சென்ற சிலைகளோடு மீண்டும் வருவார். பின் அவரது தந்தையையும், சமுதாயத்தையும், சத்தியத்தின் பால் அழைத்தார்கள். இந்தச் சிலைகள் உங்கள் பிரார்த்தனைக்கு பதிலளிப்பதில்லை என்று எடுத்துக் கூறி ஏகத்துவத்தை நிலைநாட்டினார்கள். ஆனால் அவர்கள் அதற்கு செவிசாய்க்கவில்லை. பின்னர் சிலைகளை உடைக்கிறார்கள், அதன் காரணமாக அவரை நெருப்பில் இட்டு எறிக்க முனைந்தனர், ஆனால் அல்லாஹ் அந்த சோதனையிலிருந்து அவரைப் பாதுகாத்தான்.

## ஷிர்கின் வாரிசுகள் .........?

இது நூஹ் மற்றும் இப்றாஹீம் நபியின் சமுதாயத்தின் நிலைகளாகும்...............

இன்று கப்று வணங்கிகளிடம் எப்படி கப்றுகள் தர்ஹாக்களோடு தொடர்புகள் ஆரம்பித்தன? எப்படி அவைகள் ஷிர்கில் போய் முடிவடைகின்றன என்று பார்ப்போமானால் அவர்கள் சொல்வது அவர்களிடம் குடிகொண்ட பண்புகள், இறையச்சம் ஆகியவற்றின் ஈர்ப்பினால் அவர்களை பரிசுத்தப்படுத்தி புனிதப்படுத்தினார்கள். பின் அவர் அடக்கப்பட்ட இடத்தை தரிசிக்க ஆரம்பித்தார்கள். மரணத்தையோ, மறுமையையோ நினைவுகூர்வதற்காக தரிசிப்பதை விட்டு விட்டு அடக்கப்பட்ட ஷைகை நினைவு கூர்வதற்கும் அவரது புகழை நினைவு படுத்துவதற்கும் தரிசித்தார்கள். பின் அந்த இடத்தில் இருந்து அல்லாஹ்விடம் பிரார்த்தித்தால் அந்த இடத்தின் அருளால்-பரக்கத்தால் ஏற்றுக் கொள்ளப்படும் எனும் நோக்கில், பின் கப்றை தொடுவது, அதை முத்தமிடுவது, அதை பரக்கத்துக்காக தடவுவது. பின் அதை இடைத்தரகராக ஆக்குவது அல்லாஹுவிடத்தில் பரிந்துரைக்ககூடிய சாதனமாக ஆக்குவது, அங்கு அடக்கப்பட்டவரை தூய்மையானவர், சங்கையானவர், இறைவனின் நெருக்கத்தை பெற்றுத் தரக்கூடியவர், தம்மை பரிசுத்தப்படுத்தி வைக்கக்கூடியவர், அல்லாஹ்விடத்தில் பெருமதிப்புள்ளவர் என்று தமக்குத்தாமே கற்பனை செய்து கொண்டு தமது தேவைகளை முன் வைக்கின்றனர். இவர்கள் தங்களை பாவங்களில் மூழ்கியவராக இருப்பதால், அல்லாஹ்விடத்தில் நேரடியாக

கேட்க முடியாது என்று எண்ணிக்கொண்டு, இங்கு அடக்கப்பட்டவர் எமக்கும் அல்லாஹ்வுக்கும் மத்தியில் இடைத்தரகராக இருந்து நமக்கு தேவையானவைகளை அல்லாஹ்விடம் பெற்றுத்தர வேண்டும் என்ற நோக்கில் அந்த கப்ருகளில் அடக்கப்பட்டிருப்பவர்களிடத்தில் தமது தேவைகளை முறையிட்டு அந்த எண்ணத்தில் செயற்படவும் ஆரம்பித்தார்கள்.

பின்பு ஷைத்தான் அங்கு வரக்கூடியவர்களிடம் சில சிந்தனைகளை ஏற்படுத்துவான். இங்கு அடங்கப்பட்டிருப்பவர் அல்லாஹ்விடத்தில் உயர்வானவராக இருக்கின்றார் என்றும், அல்லாஹ் பல ஆற்றல்களை இவருக்க வழங்கி இருக்கிறான் என்பன போன்ற சில ஷிர்கை ஏற்படுத்தும் சிந்தனைகளை உள்ளத்தில் தூவுகின்றான். மேலும் அவருடைய உள்ளத்தில் அதன் மீது இன்னும் பய பக்தி அதிகரிக்கும் படியும், அதன் மகத்துவம், உயர்வு அவரது உள்ளத்தினுள் அதிகரிக்கும் படியும் செய்கின்றான். பின்பு அதனிடம் நேரடியாக பிரார்த்திக்கவும் உதவிதேடவும் ஆரம்பிப்பார்கள், பின் அதன் மீது ஒரு மஸ்ஜித் கட்டப்படும், அதன் மீது ஒரு குப்பா கட்டப்பட்டு நவீன முறையில் அந்தக் கட்டிடம் வடிவமைக்கப்படும். பின்னர் அங்கு திரைகளை தொங்கவிடப்படும். எண்ணெய் விளக்குகள் ஏற்றப்படும் மக்கள் அதற்கு ஸுஜுத் செய்வார்கள், அதை வலம் வருவார்கள், அதை தொட்டு முத்தமிடுவார்கள், அங்கு ஹஜ்ஜை நிறைவேற்றுவார்கள், அதற்கு அறுத்துப் பலியிடுவார்கள், அங்கு பல கராமாத்துகள்-அற்புதங்கள் நடந்ததாக கட்டுக் கதைகள் புனைவார்கள். ஒரு பெண் நல்லதொரு வாழ்க்கைத் துணைக்கிடைக்கவேண்டும் எனப் பிரார்த்தித்தால், சில வேளை அது அவளுக்குக் கிடைத்துவிடுகின்றது. இன்னொரு பெண் தனக்குக் குழந்தைப் பாக்கியத்தைக் கேட்டால் அதுவும் அவருக்குக் கிடைக்கின்றது (இதெல்லாம் இறைவனின் நாட்டப்படிதான் நடக்கும் என்பதனை அறியாமல் இருக்கின்றனர்). பின் அனைவரும் ஒருமித்த குரலில் யார் இங்கு அடக்கப்பட்டவரை தரிசிப்பாரோ அவர் நஷ்டம் அடைய மாட்டார், அதை சந்திப்பவர்களின் விருப்பங்கள் நிறைவு செய்யப்படுகின்றன, அவர்களது நாட்டங்கள் நிறைவேறுகின்றன போன்ற விளம்பரங்களைத் திரும்பத் திரும்ப சொல்வார்கள். ஒரு வியாபாரியிடம் நீங்கள் அல்லாஹ்வின் மீது சத்தியம் செய்யாமல் இங்கு அடங்கப்பட்டிருக்கும் ஷைகின் பேரில் சத்தியம் செய்கிறீர்களே? ஏன் எனக் கேட்கப்பட்டது. அவர் அதற்கு இங்கு அல்லாஹ்வின் மீது செய்யப்படும்

சத்தியங்கள் ஏற்றுக் கொள்ளப்படமாட்டாது இங்கு அடங்கப்பட்டிருக்கும் பெரியாரின் பெயரில் என்று சத்தியம் செய்யும் போது தான் மக்கள் அதனை ஏற்றுக் கொள்கிறார்கள், உண்மைப்படுத்துகின்றார்கள் என்று அவர் கூறினார். என்ன ஆச்சரியம் பாருங்கள் இவர்கள், இந்தக்கப்ர் வாசிகளை, அல்லாஹ்வை விட எவ்வளவு உயர்வுபடுத்தியுள்ளார்கள். விடயம் இந்தளவுக்குச் சென்றதன் பின்னர் இவர்கள் கல் மண்ணால் செய்யப்பட்ட மாற்று மதத்தவர்கள் வணங்கும் சிலைகளை வணங்குவதற்கும், இந்தக் கப்ர்களை வணங்குவதற்குமிடையில் என்ன வேறுபாடு இருக்கின்றது. ஒரு வேறுபாடும் இல்லை (அவர்கள் நிற்கவைத்து வணங்குகின்றனர், இவர்கள் படுக்க வைத்து வணங்குகின்றனர்).

இவர்களின் உண்மையான நிலை பற்றி அபூ ரஜாஉல் அதாரிதி (ரலி) அவர்கள் அறிவிக்கக்கூடிய ஜாஹிலிய்யாக் காலத்தில் நிகழ்ந்த சில நிகழ்வுகளை இங்கு குறிப்பிடுவது பொருத்தமாக இருக்கும் என நினைக்கின்றேன்.

அவர்கள் கூறுகின்றார்கள், 'நாம் அறியாமைக் காலத்தில் சிலைகளையும் கற்களையும் மரங்களையும் வணங்கக்கூடியவர்களாக இருந்தோம், நாம் வணங்கக்கூடிய கல்லை விட அழகான ஒரு கல்லைப் பெற்றுக்கொள்ளும் போது நம்மிடமுள்ளதை எறிந்து விட்டு அதை எடுத்துக் கொள்வோம். (அதை வணங்குவோம்). நாம் ஒரு கல்லையும் பெற்றுக் கொள்ளாத போது மண்ணால் ஒரு உருவத்தை அமைத்து, ஆட்டின் பாலை அதன் மீது கறக்கச்செய்து அம்மண்ணைக் குழைத்து வடிவமாக்கி பின் அதை வலம் வருவோம். நாம் ஒரு தடவை பிரயாணத்தில் இருக்கும் போது நாம் வணங்கக்கூடிய கடவுள் நம்முடன் இருந்தது, அக் கல்லை நாம் வெளியில் எடுத்து வைத்தோம், நாம் உணவு தயாரிப்பதற்காக நெருப்பை எரித்தோம். உணவுப் பாத்திரத்தை வைப்பதற்கு மூன்றாவது ஒரு கல் கிடைக்காத போது நமது கடவுளை அந்த இடத்தில் வைத்தோம், நெருப்பின் சூட்டை அது தணித்து மிதமாக்கி நாம் நெருப்பை நெருங்கும் போது நம்மைத் தாக்காது அது காக்கும் என்று நாம் கூறிக் கொள்வோம்.

ஒரு நாள் ஒரு இடத்துக்குச் சென்றோம், நம்முடன் கல்லையும் எடுத்துக் கொண்டோம் நாம் பிரயாணித்துக் கொண்டிருக்கும் போது நமது கூட்டத்தில் ஒருவர் உரத்தக்குரலில் உமது இறைவனைக் காண வில்லை எங்கோ விழுந்து விட்டது அதைத் தேடுங்கள் என்று சத்தமிட்டார்.

உடனே நாங்கள் அனைவரும் எமது வாகனங்களை மறுபக்கம் திருப்பி சிரமத்துக்கும், கஷ்டத்துக்கும் மத்தியில் எமது கடவுளைத் தேட ஆரம்பித்தோம். நாம் அதைத் தேடிக் கொண்டிருக்கும் போது நமது கூட்டத்தில் மற்றொருவரின் குரல் கேட்கிறது நான் உங்களது கடவுளைப் போன்ற மற்றொரு கடவுளைக் கண்டுபிடித்து விட்டேன் என உரக்கக் கூவினார். உடனே நான் எனது பயணக்கூட்டத்தினர் தங்கியிருந்த இடத்திற்கு வந்தேன், அங்கு எனது கூட்டத்தினர் அவ்விடத்தில் கிடந்த மற்றொரு கல்லைப் பொறுக்கி வைத்துக் கொண்டு அச்சிலைக்கு முன்னால் சிரம் பணிந்து ஸஜ்தாச் செய்வதைப் பார்த்தேன், பின்னர் அதன் முன்னிலையில் ஒரு ஒட்டகத்தை அறுத்துப் பலியிட்டோம்.

இஸ்லாத்திற்கு முன் காணப்பட்ட அறியாமைக் கால நிகழ்வுகளைக் காணும்போது ஆச்சிரயமாக இல்லை! ஆனால் அதை விட இன்று காணப்படும் அறியாமையைக் கண்டு ஆச்சரியப்பட வேண்டியிருக்கிறது. அல்லாஹ்வின் மீது ஆணையாகக் கேட்கிறேன். கல்லை வணங்குவதற்கும் கப்ரை வணங்குவதற்கும் என்ன வித்தியாசம் இருக்கிறது? சிலைகளுக்கு முன்னால் தேவைகளைக் கேட்பதற்கும், உக்கி மண்ணோடு மண்ணாகிப்போன எலும்புகளிடம் தேவைகளைக் கேட்பதற்கும் என்ன வித்தியாசம் இருக்கிறது? அடங்கப்பட்ட அவ்லியாக்களை வணங்குவதற்கும் தண்ணீர் மண் கலந்து செய்யப்பட்ட சிலை (அல்லது கல் சிலை) ஒன்றுக்கு வணக்க வழிபாடுகள் செலுத்துவதற்கும் மத்தியில் என்ன வேறுபாடு இருக்கிறது. ஆம்! அவர்கள் அனைவரும் கற்பிக்கும் நியாயம் 'நாம் அவர்களை வணங்கவில்லை அவர்கள் நமக்கும் அல்லாஹ்வுக்கும் மத்தியில் உள்ள இடைத்தரகர் மாத்திரமே'. கப்று வணங்கிகள் நிச்சயமாக தெளிவான சிலை வணக்கத்திலேயே இருக்கிறார்கள் என்பதில் எந்தச் சந்தேகமும் இல்லை.

## நான்கு எதிர்வாதங்கள்!

முதலாவது: கப்று வணங்கிகள் சிலர் கூறுவது, நீங்கள் எங்களுக்கெதிராகக் கடுமையான ஒரு போக்கைக் கையாளுகிறீர்கள். நாம் இறந்தவர்களை வணங்கவில்லை, எனினும் அங்கு அடக்கப்பட்டுள்ளவர்கள் நல்லடியார்கள், அவர்களுக்கு அல்லாஹ்விடத்தில் ஓர் உயர்ந்த அந்தஸ்து இருக்கிறது அவர்கள் நமக்குப் பரிந்துரை செய்து நமது தேவைகனை அல்லாஹ்விடம் கேட்டுப் பெற்றுத் தருகின்றார்கள் என்று கூறி தமது செயலை நியாயப் படுத்துகின்றனர்.

நாம் சொல்கிறோம், சிலைகளை வணங்கிய மக்கா குறைஷிகள் சொன்னதும் இதைத்தான், அவர்கள் செய்த ஷிர்க்கும் இதுதான். அரபுத் தீப கற்பத்தில் வாழ்ந்த இணைவைப்பாளர்கள் தௌஹீதுர் 'ருபூபிய்யா' எனும் படைத்தல் காத்தல், பரிபாலித்தல் உணவளித்தல் போன்றவற்றை அல்லாஹ் ஒருவன் மாத்திரம் நிறைவேற்றிக் கொண்டு இருக்கிறான் இவ்விடயத்தில் அவனுக்கு நிகராக எவனும் இல்லை என்பதை உறுதியாக நம்பினார்கள்.

அல்லாஹ் தனது திருமறையில் கூறுவதைப் போன்று, 'நபியே நீர் அவர்களிடம் (காபிர்களிடம்) வானத்தில் இருந்தும், பூமியில் இருந்தும் உங்களுக்கு உணவளிப்பவன் யார்? உங்களுக்குப் பார்வையையும் செவிப் புலன்களையும் தந்தது யார்? மரணித்தவர்களை உயிர்ப்பிப்பவனும், உயிரோடு உள்ளவர்களை மரணிக்கச் செய்பவனும் யார்? உலக பரிபாலனங்களை நடத்துபவன் யார்? என அவர்களிடம் நீர் கேட்டால் அவர்கள் 'அல்லாஹ்தான்' எனக் கூறுவார்கள்... அப்படியானால் அல்லாஹ்வுக்கு நீங்கள் அஞ்ச வேண்டாமா?' (யூனுஸ் 10: 31).

இப்படி இவைகளை ஏற்றுக் கொண்ட அந்த மக்களோடுதான் அல்லாஹ்வின் தூதர் போர் புரிந்தார்கள், அவர்களது இரத்தத்தையும் சொத்துக்களையும் சுவீகரித்தார்கள். ஏனெனில் அவர்கள் தமது வணக்க வழிபாடுகளின் மூலம் அல்லாஹ்வின் தனித்துவத்தை உறுதி செய்யவில்லை. மாறாக வேறு பொருட்களையும் அவனுக்கு இணையாக ஆக்கினார்கள். அல்லாஹ்வின் இறை வேதமும், நபியின் பொன் மொழிகளும், அல்லாஹ்

அல்லாதவர்களுக்கு வணக்க வழிபாடுகளை செலுத்தப்படுவதை வன்மையாக எச்சரித்துக்கொண்டிருக்கிறன.

அல்லாஹ்வுக்கு இணைகற்பித்தல் என்றால் என்ன? என்பது நன்கு தெளிவுபடுத்தப்பட்டு விட்டது. அடியான் அல்லாஹ்வுக்கு இணையாக ஒன்றை வணக்க வழிபாடுகளில் ஆக்குகிறான் அது சிலையாக அல்லது கல்லாக, அல்லது நபியாக, அல்லது கப்ராக எதுவேண்டுமானாலும் இருக்கலாம். அல்லாஹ்வுக்கு மாத்திரம் செலுத்தப்படவேண்டிய வணக்க வழிபாடுகளை வேறு எதற்கும் செலுத்தும் போது அது ஷிர்காக மாறுகிறது பொதுவாக அது மற்றவர்களுக்கு செய்யப்படும் போது அறியாமைக் காலத்தில் அவர்கள் சிலைகளை நாடியது போல், இவர்கள் நல்லடியார், கப்று, தர்ஹா போன்றவற்றை நாடிச் செல்வதாகவே கருதப்படும். அதுதான் உண்மையும் கூட.

இன்றைய காலத்தில் புதிதாக ஒரு பிரிவினர் தோன்றிவிட்டார்கள், அவர்கள் அல்லாஹ்வுக்கு மனைவியையும் பிள்ளைகளையும் கற்பிக்கின்றனர் (இவர்களைவிட்டும் அல்லாஹ் நம்மை பாதுகாப்பானாக). அவர்களது சட்டம் கிறிஸ்துவர்களுக்கு வழங்கப்பட்ட சட்டமேயாகும், கிறிஸ்தவ கொள்கைக்கு எதிராக என்ன வசனங்கள் அருளப்பட்டனவோ அதே வசனங்கள் தான் அவர்களுடைய விடயத்திலும் நடைமுறைபடுத்தப்படும். அவர்கள் தங்களை கிறிஸ்தவர்கள் என அழைக்காவிட்டாலும் சரியே! இன்று கப்றுகளை வழிப்படுபவர்களும் அவ்வாறு தான்.

இரண்டாவது: கப்றுகளை வழிப்படக்கூடியவர்கள் வைக்கும் மற்றொரு வாதம், இங்கு அடங்கப்பட்டிருக்கும் நல்லடியார்கள் நமக்கு பரிந்துரை செய்யவேண்டும் என்பதற்காக அவர்களின் நெருக்கத்தைப் பெறத்தானே நாம் முயற்ச்சிக்கிறோம், அங்கு அடக்கப்பட்டிருப்பவர்கள் உயர்ந்த நல்லடியார்கள் அவர்கள் உயிருடன் இருக்கும் பொழுது பகல் காலங்களில் நோன்பிருந்தார்கள், இரவு காலங்களில் கண்ணீர் வடிக்கக்கூடியவர்களாக இருந்தார்கள், அல்லாஹ்விடத்தில் அவர்களுக்கு பெருமதிப்பும் உயர்வும் இருக்கிறது. நாம் அவர்களிடத்தில் வேண்டிக் கொள்வது நமக்கு அல்லாஹ்விடத்தில் பரிந்துரை செய்யுங்கள் என்று தானே, என அங்கலாய்க்கின்றனர்.

**நாம் சமாதிகளை வழிபடக்கூடியவர்களுக்கு சொல்வது, உங்களுக்குக் கேடு! அல்லாஹ் உங்களின் பிரார்த்தனையை ஏற்றுக்கொள்ளக்கூடியவனாக இருக்கிறான், அவனை மாத்திரம் விசுவாசியுங்கள், பரிந்துரைக்கக்கூடிய இடைத்தரகர்களை நீங்கள் ஆக்கிக் கொள்வதைத்தான் அல்லாஹ் ஷிர்க் எனும் கொடிய பாவம் எனச் சொல்கிறான்.**

**இதனை அல்லாஹ் தனது வேதத்தில் கூறுகின்றான், 'மேலும் அல்லாஹ்வையன்றி, தங்களுக்கு தீமையோ, நன்மையோ அளிக்காதவற்றை அவர்கள் வணங்குகிறார்கள். இவர்கள் அல்லாஹ்விடத்தில் எங்களுக்கு பரிந்துரையாளர்கள் என்றும் அவர்கள் கூறுகின்றனர், (ஆகவே நபியே! நீர் அவர்களிடம்) வானங்களிலோ, பூமியிலோ அல்லாஹ்வுக்குத் தெரியாதவைகளை நீங்கள் அவனுக்கு அறிவிக்கின்றீர்களா? (அவனோ யாவற்றையும் நன்கறிந்தவன்) அவன் மிகப் பரிசுத்தமானவன் அவர்கள் இணைவைப்பவர்களை விட்டும அல்லாஹ் உயர்வடைந்து விட்டான் என்று கூறுவீராக.' (யூனுஸ் 10: 18).**

**நாம் இன்னும் அவர்களிடம் சொல்லிக் கொள்வது, அல்லாஹ் நபிமார்களுக்கும் நல்லடியார்களுக்கும் பரிந்துரைக்கும் அதிகாரத்தைக் கொடுத்திருக்கின்றான் என்பதை நாமும் உங்களுடன் இணைந்து ஏற்றுக் கொளகிறோம், ஆம் அவர்கள் அல்லாஹ்வுக்கு நெருக்கமானவர்கள் தான் (நல்லடியார்கள் என எவரையும் நாம் அடையாளம் காட்ட இயலாது!) எனினும் அதே நாயன் அவர்களிடம் பிரார்திப்பதையும் இறைஞ்சுவதையும் தடுத்திருக்கிறான். ஆம் நபிமார்களுக்கும், நல்லடியார்களுக்கும் பரிந்துரைக்கமுடியும், எனினும் அவர்கள் நாடியவர்களை பரிந்துரைப்பதற்கும், அவர்கள் நாடியவர்களை விடுவதற்குமான அதிகாரம் அவர்கள் கைகளில் கிடையாது. அல்லாஹ்வின் அனுமதியின்றி எவரையும் நாளை மறுமையில் அவர்களால் பரிந்துரைக்க முடியாது. இன்னும் பரிந்துரைக்கப்படுபவர் அவனால் பொருந்திக்கொள்ளப் பட்டவராகவும் இருத்தல் மிக அவசியமாகும்.**

**மூன்றாவது: சமாதிகளை வழிபடக்கூடியவர்கள் முன்வைக்கும் மற்றொரு வாதம், முஸ்லிம்களில் பெரும்பாலானவர்கள் கடந்த கால வரலாற்றிலும் சரி, தற்பொழுதும் சரி கப்றுகள் மீது கட்டிடம் எழுப்பியிருக்கிறார்கள். அவைகளை தர்ஹாக்களாக தரிசிக்கும் இடங்களாக ஆக்கியிருக்கிறார்கள்,**

அங்கு பிரார்த்தனைகள் செய்திருக்கிறார்கள். அப்படியானால் ஒட்டுமொத்த சமுதாயமும் வழிகேட்டில் இருக்கிறார்களா? நீங்கள் மாத்திரம்தான் சத்தியத்தில் இருக்கின்றீர்களா? என்று எதிர் வினாத் தொடுக்கின்றனர். நாம் அவர்களுக்கு சொல்லிக் கொள்வது, இந்தக் கப்றுகள் சமாதிகளில் பெரும்பாலானவைகள் போலியானவைகள், எந்த அடிப்படையுமின்றி அவைகளை சிலருடன் தொடர்பு படுத்தப்படுகிறது. அவைகள் முன்னால் விரிவாக பேசப்பட்டுள்ளன. சமாதிகளைக் கட்டுவதும் அவைகளிடம் பிரார்த்திப்பதும் அல்லாஹ்வுடைய சொல்லுக்கும், நபியுடைய வழிமுறைக்கும் மாற்றமானது, நிராகரிக்கப்படவேண்டிய நூதனங்கள்-அனாச்சாரங்கள், ஷிர்க்கின் வாயல்களை திறக்கும் காரியங்கள் ஆகும். நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள் 'யூதர்களுக்கும், கிறிஸ்தவர்களுக்கும் அல்லாஹ்வின் சாபம் உண்டாவதாக அவர்கள் நபிமார்களின் கப்றுகளை மஸ்ஜித்களாக ஆக்கிக்கொண்டார்கள் என அவர்கள் செய்ததை எச்சரிக்கை செய்தார்கள்'. (முத்தபகுன் அலைஹி).

நான்காவது:

அவர்களின் சிலரது உள்ளத்தில் ஷைத்தான் ஏற்படுத்திய ஒரு சந்தேகம் யாதெனில் நபியுடைய கப்று மஸ்ஜிதுந் நபவியில் எந்தத்தடையுமின்றி அமைக்கப்டிருக்கின்றது. பள்ளியில் கப்ர் அமைத்தல் தடையாக இருந்திருந்தால் அங்கு அவர்கள் அடக்கம் செய்யப்பட்டிருக்க மாட்டார்களே! நபியுடைய கப்ரின் மீது குப்பாவும் அல்லவா எழுப்பப்பட்டுள்ளது என்று அவர்கள் தமது ஐயத்தை வெளிப்படுத்துகின்றனர்.

இவர்களுக்கான பதில்: நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் உயிர் எந்த இடத்தில் கைப்பற்றப்பட்டதோ அதே இடத்தில் தான் அவர்கள் நல்லடக்கம் செய்யப்பட்டார்கள். நபிமார்கள் எந்த இடத்தில மரணிப்பார்களோ, அதே இடத்தில் அடக்கம் செய்யப்படுவார்கள் என்பது நபிமொழி, அவ்வாறே நபி (ஸல்) அவர்கள் ஆயிஷா (ரலி) வீட்டில் மரணித்தார்கள் அங்கேயே நல்லடக்கம் செய்யப்பட்டார்கள். மஸ்ஜிதில் அவர்கள் அடக்கம் செய்யப்படவில்லை அவர்கள் அடக்கப்பட்டது வீட்டில் (அறையில்) இது முதலில் கவனிக்கப்பட வேண்டிய விடயம்.

நபித்தோழர்களான அபூபக்கர் ஸித்திக் (ரலி) மற்றும் உமர் (ரலி) ஆகியவர்கள்- ஆயிஷா (ரலி) வீட்டில் அடக்கம் செய்யப்பட்டதற்குக் காரணமே பின்னாளில் அவ்விடத்தில் மஸ்ஜிதாக ஆக்கப்படக் கூடாது என்பதற்காகத்தான் என்பதனையும் கவனத்தில் கொள்ளவேண்டும். ஆயிஷா (ரலி) அறிவிக்கக்கூடிய ஒரு ஹதீஸில், நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் எந்த நோயால் பீடித்து மரணித்தார்களோ அந்த நோயில் இருக்கும் போது சொன்னார்கள்: 'யூதர்களுக்கும், கிறிஸ்தவர்களுக்கும் அல்லாஹ்வின் சாபம் உண்டாவதாக அவர்கள் நபிமார்களின் கப்றுகளை மஸ்ஜித்களாக ஆக்கிக்கொண்டார்கள்'

ஆயிஷா (ரலி) கூறுகிறார்கள், 'நபியுடைய கப்றும் ஒரு மஸ்ஜிதாக ஆக்கப்பட்டு விடுமோ என்பதைப் பயந்து தான் அவர்கள்' இப்படிச் சொன்னார்கள். (புஹாரி, முஸ்லிம்).

கிழக்குப் பகுதியால் மஸ்ஜிதுன் நபவியுடன் தொடர்பு பட்டிருந்த ஆயிஷா (ரலி) வீட்டில் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் நல்லடக்கம் செய்யப்பட்டார்கள். வருடங்கள் உருண்டோடின மனிதர்கள் இஸ்லாத்தில் பிரவேசிப்பதும் அதிகரித்துக் கொண்டே சென்றது. எனவே காலத்தின் தேவையை உணர்ந்து அன்றைய முஸ்லிம் ஆட்சியாளர்கள் மஸ்ஜிதை கப்றுள்ள பகுதியைத்தவிர அனைத்துப் பகுதியிலும் விரிவு படுத்தினார்கள். மேற்கு, தெற்கு, வடக்கு என அனைத்துப் பகுதியும் விரிவுபடுத்தப்பட்டது. கிழக்குப் பகுதியை விரிவு படுத்தாததற்குக் காரணம் அந்தப் பக்கம் அவர்களின் கப்ர் அமைந்திருந்ததே. இதன் பின்னர் ஹிஜ்ரி 88-வது வருடத்தில் அதாவது நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் மரணித்து 77 வருடங்களுக்குப் பிறகு மதீனாவில் வாழ்ந்த அனைத்து ஸஹாபாக்களும் மரணித்து விட்டதன் பின், வலீத் இப்னு அப்துல் மலிக் எனும் ஆட்சியாளர் மஸ்ஜிதுன் நபவியை விரிவு படுத்துவதற்காக அதை இடிக்குமாறு பணித்தார், அனைத்துப் பகுதியையும் விரிவுபடுத்துமாறு கட்டளையிட்டார். நபி (ஸல்) அவர்களின், அனைத்து மனைவிமார்களின் வீடுகள் அமைந்திருந்த பகுதிகளும் அந்த எல்லைக்குள் வந்தன, கிழக்குத் திசையால் விரிவுபடுத்தப்படும் போது ஆயிஷா (ரலி) அவர்களது வீடும் பள்ளிவாசலின் எல்லைக்குள் வந்துவிட்டது. இதனால் கப்று மஸ்ஜிதுக்குள் வந்து விட்டது. இது நபியவர்களின் மஸ்ஜித்தினுள் கப்ரு வந்த வரலாறாகும்.

ஸஹாபாக்களின் காலத்துக்குப் பின் நிகழ்ந்த இவ் விடயத்தை எவரும் ஆதாரமாகக் கொள்ள முடியாது இது ஆதாரப்பூர்வமான ஹதீஸ்களுக்கும் முன்னோர்களின் விளக்கத்துக்கும் மாற்றமானதாகும். வலீத் இப்னு அப்துல் மலிக் தவறிழைத்துவிட்டார். அல்லாஹ் அவரை மன்னிப்பானாக, நபிகளாரின் அறை மஸ்ஜிதுக்குள் நுழைத்த காரணத்தால் இத் தவறு நிகழ்ந்தது. ஏனெனில் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கப்றுகள் மீது மஸ்ஜித்கள் எழுப்பப்படுவதை முற்றாகத் தடுத்திருக்கிறார்கள். அப் பகுதியை விட்டுவிட்டு ஏனைய மூன்று திசைகளிலும் மஸ்ஜிதை விரிவு படுத்தியிருக்கலாம் அது அவரால் நிகழ்ந்த தவறு.

அவ்வாறே நபியின் கப்று மீது இருக்கும் குப்பா, அது நபியோ, ஸஹாபாக்களோ தாபிஈன்களோ, தபஉத் தாபிஈன்களோ மற்றும் சமுதாயத்தின் அறிஞர்களோ இமாம்களோ கட்டியதல்ல. மாறாக அது மிஸ்ருடைய பிந்திய ஆட்சியாளர்களின் புதல்வர்களால் கட்டப்பட்டது. அதாவது மலிக் மன்ஸுர் எனப்படும் கலாவுனுஸ் ஸாலிஹி என்பவர்தான் இதனை ஹிஜ்ரி 678 ல் கட்டினார்.

## அழைப்பு பகிரங்க அழைப்பு!

சமாதிகளை வழிப்படுபவர்களுக்குச் சொல்கிறேன், பிரார்த்தனைகளை ஏற்றுக் கொள்ளக்கூடிய அல்லாஹ்விடம் பிரார்த்தியுங்கள். அவனை விசுவாசியுங்கள்.

முன் சென்ற நல்லவர்கள்-ஸஹாபாக்கள் தாபியீன்கள் எல்லாம் கப்றுகளைக் கட்டினார்களா? அல்லது அதன் மீது வெள்ளை(சந்தனம்)பூசினார்களா? மனிதர்களிடம் பிரார்த்தித்தார்களா? அல்லது தர்ஹாவிடம், சமாதியிடம் தேவைகள் நிறைவேற இறைஞ்சினார்களா? சகலவற்றையும் அறிந்து இறைவனை மறந்திருந்தார்களா? அவர்களில் எவராவது ஒருவர் நபியின் கப்ருக்கு முன்னால் இருந்தோ, அல்லது ஒரு நபித்தோழரின் கப்றுக்கு முன்னால் இருந்தோ, அல்லது நபியின் குடும்பத்தின் எவருடைய கப்றுக்கு முன்னால் இருந்தோ தங்களது தேவைகளை நிறைவேற்றும் படியோ, அல்லது துன்பங்களைப் போக்கும் படியோ கேட்பதை நீர் அறிந்திருக்கின்றீரா? செவியுற்றிருக்கின்றீரா? உம்மால் நிரூபித்துக் காட்ட

முடியுமா? ரிபாயி, தஸ்ஸுகி, ஜீலானி, பஃதவி போன்றவர்கள் நபிமார்கள்-இறைத்தூதர்கள், ஸஹாபாக்கள் மற்றும் தாபிஈன்களைவிட அல்லாஹ்விடத்தில் நெருக்கத்திற்குரியவர்களா?

பாருங்கள்! உமர் (ரலி) யின் ஆட்சி காலத்தில் மழை பெய்யாமல் மதீனாவின் பூமி வரண்டு காணப்பட்டபோது, ஸஹாபாக்கள் உமர் (ரலி) அவர்களிடம் முறையிட்டார்கள. உடனே அவர்கள் மக்களுடன் வெளியேறி மழைவேண்டித் தொழுதார்கள் 'யா அல்லாஹ் இவ்வாறான வறட்சிகள் காணப்பட்டபோது நபியவர்கள் உயிருடன் இருக்கும் போது நபியின் பிரார்த்தனையால் உன்னிடம் கேட்டோம், நீ மழையைப் பொழிவிக்கச் செய்தாய். நாயனே! இப்பொழுது நபியின் சிறிய தந்தையின் மூலம் பிரார்த்திக்கிறோம், எனச் சொல்லிவிட்டு அப்பாஸ் (ரலி) பக்கம் திரும்பிப் பார்த்து, அப்பாஸ் (ரலி)அவர்களிடம், அல்லாஹ்விடம் நமக்கு மழை பொழிவிக்குமாறு பிரார்த்தியுங்கள் என வேண்டினார்கள், அப்பாஸ் (ரலி) எழுந்து பிரார்த்திக்க மக்கள் அதற்கு ஆமீன் கூறினார்கள். உடனே அவர்களுக்கு மேலால் மேகம் ஒன்றுசேர்ந்தது, பின் மழை பொழியும் வரை அழுது அல்லாஹ்விடத்தில் பிரார்த்தித்தார்கள். அதற்குப் பின் மழை பொழிந்தது, உயரிய நபித்தோழர்களைப் பாருங்கள், நம்மை விட எவ்வளவோ மார்க்க ஞானிகள், நபியின் மீது எந்தளவு நேசம் கொண்டவர்கள், அவர்களுக்குத் தேவைகள் துன்பங்கள் ஏற்பட்ட போது அவர்கள் நபியின் கப்ருக்குச் செல்லவில்லை, அல்லாஹ்வின் தூதரே! நமக்கு அல்லாஹ்விடத்தில் பரிந்துரை செய்யுங்கள் என்று சொல்லவில்லை! மரித்தோரிடம் பிரார்த்திப்பது எந்தப்பலனையும் தராது அது அல்லாஹ்வின் தூதரிடமாக இருந்தாலும் சரியே. அல்லாஹ்வுக்கு நெருக்கமான நல்லடியாரிடமாக இருந்தாலும் சரியே! என்பதை அவர்கள் விளங்கி வைத்திருந்தார்கள்.

அவர்களுக்குத் தேவைகள் வரும்போது, துன்பங்கள் ஏற்படும் போது அவைகள் நீங்குவதற்கு அல்லாஹ்விடம் பிரார்த்தித்தார்கள். ஆனால் இன்றுள்ள அறியாதவர்கள் தங்களுடைய தேவைகளை, கோரிக்கைகளை, பாவ மன்னிப்பை, மண்ணோடு உக்கிப்போன எழும்புகளிடம் முன் வைப்பதைக் காணலாம்.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் உருவங்களையும் சிலைகளையும் அமைப்பதைத் தடை செய்தது வீணுக்கும் விளையாட்டிற்கும் என

எண்ணிக் கொண்டிருக்கிறீர்களா? ஆரம்ப அறியாமைக் காலத்தின் சிலை, உருவ வழிபாடு மீண்டும் நிகழ்ந்து விடக்கூடாது என்பதைப் பயந்துதான் அதைத் தடைசெய்தார்கள்.

எனவே அன்றைய ஜாஹிலிய்யாக் காலத்தில் விக்ரஹங்களையும், உருவச் சிலைகளையும் வழிபட்டவர்களுக்கும் இன்று கப்றுகளையும் தர்ஹாக்களையும் நோக்கிப் படையெடுப்பவர்களுக்கும் மத்தியில் என்ன வேறுபாடு இருக்கின்றது . இரண்டுமே மக்களைக் கொடிய ஷிர்க்கின் பக்கம் இழுத்துச் சென்று அவர்களிடம் இருக்கும் தவ்ஹீத்-ஓரிறைக் கொள்கையைக் குழிதோண்டிப் புதைத்து விடுகின்றது.

## அல்லாஹ் அல்லாதவர் மீது சத்தியம் செய்வதும் ஷிர்க்கில் உள்ளதே!

க..பாவின் மீது, அமானிதத்தின் மீது, சிறப்பான பரகத்தான இம்மனிதர் மீது, இம் மனிதரின் வாழ்க்கை மீது, நபியின் மீது, நல்லடியார் மீது, தாய் தந்தை மீது சத்தியம் செய்வது அனைத்தும் தடைசெய்யப்பட்டதாகும். சத்தியம் என்பது அவர்களை மகத்துவப்படுத்துவதாகும். அல்லாஹ்வைத் தவிர வேறு எவரையும் மகத்துவப்படுத்த முடியாது.

இப்னு உமர் (ரலி) அறிவிக்கின்றார்கள், ‘எவர் அல்லாஹ் அல்லாதவர் மீது சத்தியம் செய்வாரோ அவர் அல்லாஹ்வுக்கு இணை கற்பித்து விட்டார்’ என நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள். (ஆதாரம்: அஹ்மத்).

‘எவர் சத்தியம் செய்கிறாரோ அவர் அல்லாஹ்வின் மீது சத்தியம் செய்யட்டும் அல்லது மௌனமாக இருக்கட்டும்’ என நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள். அல்லாஹ் அல்லாதவர் மீது சத்தியம் செய்யும் ஒருவர் எதன் மீது சத்தியம் செய்கிறாரோ அதை அல்லாஹ்வின் மகத்துவத்திற்குச் சமமாகக் கருதினால், அது மிகப்பெரிய ஷிர்காகும், அல்லாஹ்வை விடக் குறைந்ததாக மதிப்பிட்டால் அது சிறிய பாவமாகும். ஒருவரின் வாயிலிருந்து தவறுதலாக எந்த நோக்கமுமின்றி இது போன்ற வார்த்தைகள் வெளியாகி விட்டால் அதற்குரிய பரிகாரம் அவர் ‘லா இலாஹ இல்லல்லாஹ்’ என்று சொல்வதே.

நபியவர்கள் கூறினார்கள், 'எவர் லாத், உஸ்ஸா போன்றவைகள் மீது சத்தியம் செய்து விடுகிறாரோ அவர் லா இலாஹ இல்லல்லாஹ் என்று சொல்லட்டும்' என நபிகளார் (ஸல்) அவர்கள் கூறினார்கள். (ஆதாரம்: புகாரி).

ஒருவனிடம் அல்லாஹ் அல்லாதவைகள் மீது சத்தியம் செய்யும் பழக்கம் இருந்தால் அவர் அதை விடுவதற்கு முயற்சிப்பது கட்டாயமாகும். இன்னும் சிலர் அல்லாஹ் மீது துணிந்து பொய்யான சத்தியம் செய்கின்றனர், அதேநேரத்தில் அவர் நம்பியிருக்கும் அவ்லியாக்கள் மீது பொய்யாகக்கூட சத்தியம் செய்ய மாட்டார்கள். மக்களின் பேச்சு வழக்கில் இது போன்ற சில ஷிர்க்கான வார்த்தைகள் தாராளமாகவே உபயோகப் படுத்தப்படுகின்றன. 'அல்லாஹ்வும் நீங்களும் நாடினால்.., அல்லாஹ்வும் அவரும் இல்லையென்றால், அல்லாஹ்வையும் உங்களையும் தவிர வேறுயாரும் எனக்கு இல்லை, இது அல்லாஹ்வினதும் உங்களினதும் அருளால்' போன்ற வார்த்தைகள் அல்லாஹ்வின் அந்தஸ்த்தில் பிறருக்கும் கூட்டேற்படுத்தும் வார்த்தைகளாகும். இவற்றின் சரியான முறை, அல்லாஹ்வின் நாட்டத்தின் படியும் பின் அவரது நாட்டத்தின் படியும், அல்லாஹ் இல்லையென்றால் பின்பு அவர் இல்லையென்றால் என்று கூறுவதாகும்.

## தாயத்தும் ஷிர்கின் பால் இட்டுச் செல்லக் கூடியதே!

தாயத்துக்களையோ, கயிறுகளையோ, நூல்களையோ, வளையங்களையோ, கண்னேறுக்கோ அல்லது வேறு ஏதாவது ஒன்றிற்குப்பயந்து யாரேனும் தன் கழுத்தில் தொங்கவிட்டு இவைகள் நோய்களை, துன்பங்களை நீக்கக் காரணமாகும் என ஒருவன் நம்புவானாயின் அது சிறிய ஷிர்காகும். இவைகள் தொங்கவிடப்படுவதன் மூலம் தான் நோய்கள், துன்பங்கள் நீங்குகின்றன, இவைகள் நோய்களை துன்பங்களை தனித்து நின்றே நீக்கும் ஆற்றலுடையவை என நம்பினால் அது பெரிய ஷிர்க்காகும். ஏனெனில் அதற்கு ஆற்றல் இருப்பதாகவும் இந்த உலகத்தில் அல்லாஹ் அல்லாதவைகளுக்கும் நோய்களை, துன்பங்களை நீக்கும் ஆற்றல் இருக்கின்றன என நம்புவதாக ஆகிவிடும்.

தாயத்து, இஸ்ம், அஸ்மாக்கள் அணிவதை இரு வகைப்படுத்தலாம்:

1. முதலாவது வகை: குர்ஆனுடைய வசனங்களைத் தோலில், துணியில், தங்க-செப்புத் தகடுகளில், தாள்களில் எழுதி குப்பிகளில் அடைத்து கழுத்திலோ, இடுப்பிலோ அல்லது கையிலோ தொங்கவிட்டுக் கொள்வது. இதற்கு இஸ்லாத்தில் அனுமதி இல்லை. ஏனெனில் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் இப்படிச் செய்ததாக எந்த ஆதாரமும் இல்லை. சிலவேளை இது அந்நபரை ஷிர்க்கின் பால் இட்டுச் செல்லலாம்.(எனினும் இச்செயலால் அந்த நபர் ஷிர்க்கில் ஈடுபட்டவராகக் கருதப்பட மாட்டார்.).

2. இரண்டாவது வகை: குர்ஆன் வசனங்கள் அல்லாத ஏதேனும் மந்திரங்களையோ ஜின்களின், ஷைத்தான்களின் பெயர்களையோ, சூனியத்திற்கென உள்ள சில குறிப்பிடப்பட்ட குறியீடுகள் அடங்கிய தாயத்துக்களையோ தொங்கவிட்டுக் கொண்டால், அது கலப்பற்ற ஷிர்க்காகும். அல்லாஹ் இவைகளை விட்டு பாதுகாப்பானாக!
இப்னு மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறினார்கள், ‘ஒருவன் அணிந்திருக்கும் தாயத்தை யாரேனும் துண்டித்தால் அவன் ஒரு அடிமையை விடுதலை செய்தவனைப் போலாவான்.

   தனது கையில் இரும்பினாலான ஒரு வளையலைத் தொங்கவிட்டுக் கொண்டிருக்கும் ஒரு மனிதனை ஹுதைபா (ரலி) அவர்கள் காண்கிறார்கள், அவனிடத்தில் இது என்ன? என கேட்கிறார்கள். அதற்கு அவன் இதனை நோய் நிவாரணிக்காக அணிந்திருக்கின்றேன் எனக்கூறினான். அதை கழற்றி எறிந்து விடு, ஏனெனில் இது நோயை அதிகரிக்கச் செய்யுமே தவிர குறைக்காது இது உனது கையில் இருக்கும் நிலையில் மரணித்தால் நீ ஒரு போதும் வெற்றி பெற மாட்டாய் என்று கூறினார்கள்.

   அதே போன்றுசில குறிப்பிட்ட வசனங்கள், வாக்கியங்களை உபயோகித்து ஊதிப் பார்த்து மந்திரித்தல், ஒரு நோயாளிக்கு அல்குர்ஆன் வசனங்கள், ஹதீஸில் காணப்படும் திக்ர்-அவ்ராதுகளை அல்லது அல்லாஹ்வின் திருநாமங்களை உபயோகித்து ஓதிப்பார்த்தல் இஸ்லாத்தில் அனுமதிக்கப்பட்டதாகும். உதாரணமாக பாதிஹா அத்தியாயம், முஅவ்விதாத (குல்-ஸூராக்கள்) அத்தியாயங்கள் நபிமொழிகளில்

வந்திருக்கும் பிரார்த்தனைகளை ஓதுவதற்கு அனுமதி இருக்கிறது. உதாரணமாக நோயாளியின் மீது இவைகளை ஓதி ஊதுதல், அவற்றை ஓதி நீரில் ஊதி அதனை நோயாளிக்குக் குடிக்கக் கொடுத்தல் போன்றவை இஸ்லாத்தில் அனுமதிக்கப்பட்டவைகளாகும். இவை தவிர ஜின்களின் பெயர்கள் அல்லது வானவர்கள், நபிமார்கள், நல்லடியார்களின் பெயர்களை அழைத்து ஊதி(ஓதி)ப்பார்த்தல் இஸ்லாத்தில் தடை செய்யப்பட்டதாகும். ஏனெனில் இது அல்லாஹ் அல்லாதவர்களிடத்தில் பிரார்த்திப்பதாகும் இது பெரும் ஷிர்காகும்.

## மறைவான ஞானம் இருப்பதாக வாதிடுவதும் ஷிர்க்கே...

வானம், பூமியிலுள்ள மறைவானவற்றை அல்லாஹ்வைத் தவிர வேறுயாரும் அறிய முடியாது. அல்லாஹ் கூறுகிறான், ‘(நபியே) சொல்வீராக! அல்லாஹ்வைத்தவிர வானம், பூமியிலுள்ள எவருமே மறைவானவற்றை அறிய மாட்டார்கள் அல்லாஹ்வைத்தவிர, வேறு யாருக்கும் ஒரு காலமும் மறைவானவற்றை அறிய முடியாது. அல்லாஹ்வுக்கு நெருக்கமான மலக்காகவோ, அவனால் அனுப்பட்ட நபியாகவோ, அவனது உண்மையான ஒரு அடியானாகவோ, பின்பற்றத்தக்க ஒரு பெரும் அறிஞராகவோ இருந்தாலும் சரியே! இன்னும் யார் யாராக இருந்தாலும் அவர்களுக்கு மறைவானவற்றை அறிய முடியாது. அல்லாஹ் தனது இறைத்தூதர்களுக்கு வஹியின் மூலம் அறிவித்த ஒரு சில விடயங்களைத்தவிர, காபிர்களின் சூழ்ச்சிகள், மறுமை நாளின் அடையாளங்கள் இது போன்ற சிலவற்றைக் குறிப்பிடலாம்.

ஏதோ ஒரு வழியின் மூலம் தமக்கு மறைவான ஞானம் இருப்பதாக வாதிடுவோர், மணிக்கட்டில் தாயத்துக் கட்டி அல்லது தட்டில் ஓதுவதன் மூலம், அல்லது நட்சத்திரங்களை வைத்துக்குறி பார்த்துக்கொண்டிருப்பதன் மூலம், அல்லது சூனியம், ஜோஷியம் போன்றவைகள் மூலம் பலாபலன்கள் சொல்லக்கூடியவர்கள் அனைவருமே நிராகரிப்பாளர்களான பெரும் பொய்யர்களே. குறிகாரர்கள், சூனியம் செய்வோர் போன்றோர்கள் சிலவேளை காணாமற்போன பொருட்கள், மக்கள் முன்வைக்கும் கோரிக்கைகளைச் சரியாகக் கணித்துச் சொல்லி விடுகின்றார்களே என்று சிலர் கேட்கலாம். ஆனால் இவையெல்லாம் தீய ஷைத்தான்களுக்கு இவர்கள் வழிபடுவதன் மூலம் அவை கற்றுக்

கொடுக்கும் தகவல்களே இவையாகும். (இவற்றில் 99 வீத பொய்யுடன் அரிதாக சில விடயங்கள் உண்மையாகவிருக்கலாம். ஆனால் இதை உண்மைப்படுத்தினால் நமது ஈமான் பறிபோய்விடும் என்பதை ஒவ்வொருவரும் கவனத்தில் கொள்ள வேண்டும்.)

ஈமானில் பலவீனமான சிலர் நட்சத்திர சாஸ்திர காரர்களிடம் போய் அவருக்கு நடக்க விருக்கும் திருமணம் மற்றும் எதிர் காலத்தைப் பற்றியெல்லாம் கேட்கின்றனர், இது ஹராமாகும். எவன் தனக்கு மறைவான ஞானம் இருப்பதாக வாதிடுகிறானோ! அல்லது அவ்வாறு வாதிடுபவனை உண்மைப்படுத்துகிறானோ! அவன் இணைவைத்த காபிராவான். சிலர் பத்திரிகை, சஞ்சிகை, தொலை பேசி மூலம் மறைவான ஞானம் இருப்பதாக சொல்வோரிடம் தொடர்பை ஏற்படுத்திக் கொண்டு தங்கள் கேள்விகளைக் கேட்கின்றனர் இதுவும் ஹராமாகும்.

## சூனியம், ஜோஷியம், சாஸ்திரம் அனைத்தும் ஷிர்க்கே ..

சூனியம் என்பது, சில பொருட்கள், புகைகள், வார்த்தை ஜாலங்கள் போன்றவற்றை உபயோகித்து தீய ஷைத்தான்களின் உதவியுடன் சில காரியங்களைச் சாதித்துக் காட்டுவதைக் குறிக்கும். அதற்கு ஒரு உண்மை நிலை-யதார்த்தம் உண்டு. அது மனிதர்களின் உள்ளங்களிலும், உடம்பிலும் ஒரு வகையான தாக்கத்தை ஏற்படுத்தும். நோய்கள், மரணம், கணவன் மனைவிக்கு மத்தியில் பிளவு இப்படியான விளைவுகளை சூனியம் ஏற்படுத்தும். நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் பெரும் பாவங்களைக் குறிப்பிடும் போது: 'ஏழு பெரும் பாவங்களை விட்டு விலகிக் கொள்ளுங்கள் என்று கூற, ஸஹாபாக்கள் அவை என்ன என்று கேட்டனர், அவற்றில் நபியவர்கள்... ... ... ... ... அல்லாஹ்விற்கு இணைகற்பித்தலும், சூனியமும் உள்ளதாகக் கூறினார்கள்.

சூனியத்தில் ஷைத்தான்கள் பயன்படுத்தப்படுகின்றனர், அவற்றின் தொடர்பை ஏற்படுத்திக் கொண்டு அவனின் தீய விருப்பங்களை நிறைவேற்றி, அவற்றின் நெருக்கத்தைப் பெற்று அதன் மூலமே சூனியக்காரன் தனது காரியங்களை நிறைவேற்றிக் கொள்கின்றான். இன்னும் சூனியக்காரர்கள் தமக்கு மறைவான

ஞானம் இருப்பதாக வாதிடுகின்றனர். இது இறை நிராகரிப்பும், வழிகேடும் ஒருங்கே இணைந்ததாகும்.

அல்லாஹ் தனது திருமறையில் கூறுகிறான், 'அவர்கள் செய்ததெல்லாம் சூனியக்காரனின் சூழ்ச்சியே ஆகும். சூனியக்காரன் எங்கு வந்த போதிலும் வெற்றி பெறமாட்டான்'.

(தாஹா 20:69).

சூனியக்காரனுக்குரிய தண்டனை, அவனுக்கு மரண தண்டனை விதிப்பதாகும். ஸஹாபாக்களின் காலத்தில் இத்தண்டனை சிலருக்கு நிறைவேற்றப்பட்டுள்ளது. ஆனால் ஆச்சரியம! தற்காலத்தில் சூனியத்தை ஒரு குற்றமாகவே கருதாத நிலைக்கு மனிதர்கள் மாறி விட்டனர், இன்னும் அது பல்கலைகழகங்களில் ஒரு கலையாகச் சொல்லி போதித்து பெருமைப்படக்கூடிய நிலையைக்காணமுடிகிறது. அதை செய்யக்கூடியவர்களுக்கு அதில் கை தேர்ந்தவர்களுக்கு பரிசில்கள் வழங்கி கௌரவிக்கப்படுகின்றன. சூனியக்காரர்களுக்கென விழாக்கள் போட்டிகள் என்று நடத்தப்படுகின்றன. அவர்களை ஆர்வப்படுத்துவதற்கும், ஊக்குவிப்பதற்கும் ஆயிரக்ககணக்கான மக்கள் அதில் கலந்துகொள்கின்றனர். இது கொள்கையில் காணப்படும் அலட்சியமே.

சூனியக்காரன் மீது அபூதர் ஜுன்துப் (ரலி) எடுத்த நடவடிக்கை வரவேற்கத்தக்கது, அவர் ஒரு தலைவருடைய அவைக்குள் நுழைகிறார், அங்கு ஒரு சூனியக்காரன் தனது வாளினால் ஒரு மனிதனின் கழுத்தை வெட்டுவதும் மீண்டும் அதை ஒட்டுவதுமாக மக்களுக்கு மாயாஜாலம் நிகழ்த்திக் கொண்டிருந்தான். மறு நாள் அபூதர் (ரலி) தனது ஆடையை அணிந்துக் கொள்கிறார். அதற்குக் கீழ் தம் வாளைப் பத்திரப்படுத்திக் கொள்கிறார் பின் அரசரின் அவைக்குள் நுழைகிறார் அங்கு சூனியக்காரன் தனது விளையாட்டுக்களைக் காட்டியவண்னம் இருக்கிறான் மனிதர்களுக்கு முன்னால் சூனியத்தை அரங்கேற்றிய வண்ணம் இருக்கிறான். மக்களோ ஆச்சரியத்தில் மூழ்கியுள்ளனர், அவர் பக்கம் அபூதர் நெருங்கினார் தனது வாளை திடீரென வெளியில் எடுத்தார் அந்த சூனியக்காரனின் கழுத்துப் பக்கம் கொண்டு சென்றார் அவனது கழுத்து பறந்தது சூனியக்காரன் கீழே சாய்ந்தான். அபூதர் (ரலி) கூறினார்கள், நான் நபி (ஸல்) அவர்கள் கூறக் கேட்டிருக்கிறேன் சூனியக்காரனுக்குரிய தண்டனை அவன் வாளால் வெட்டப்படுவதாகும். என்று கூறினார்கள், பின்னர் அவன் பக்கம் ஜுன்துப்

(ரலி) திரும்பிப்பார்த்து உன்னால் முடிந்தால் உனக்கு உயிர் கொடுத்துக் கொள்! உனக்கு உயிர் கொடுத்துக் கொள்! என்று கூறினார்கள்.

'எவர் எதிர் காலத்தைக் கணித்துச் சொல்லக்கூடிய ஜோசியக்காரனிடம் போய் அவன் சொல்வதை உண்மைப்படுத்தினால், அவன் முஹம்மத் (ஸல்) அவர்கள் மீது அருளப்பட்ட வேதத்தை நிராகரித்தவனாவான். இவ்விடயத்தில் எச்சரிக்கையாக இருப்பது கடமையாகும். நிச்சயமாக சூனியக்காரன், ஜோசியக்காரன், சாஸ்திரக்காரன் மனிதர்களின் இறைநம்பிக்கையில் விளையாடுகின்றான். மக்களின் நோய்களுக்கு சிகிச்சையளிக்கும் வைத்தியர்களாகவோ, அல்லது வலி-ஷெய்கு என்ற போர்வையிலோ மக்கள் முன் அறிமுகமாகி தமது கைவரிசையைக் காட்டுகின்றனர். சிகிச்சை அளிப்பதாகக் கூறி பல வழிகளைக் கையாளுகின்றனர். நோயாளியை அல்லாஹ் அல்லாதவருக்கு அறுத்துப்பலியிடுமாறு ஏவுகின்றனர். ஒரு ஆட்டை அறுக்கவேண்டும் அது இவ்வாறு இவ்வாறெல்லாம் இருக்கவேண்டும் அல்லது ஒரு கோழி அது இவ்வாறு இருக்க வேண்டும் என்றெல்லாம் கூறுகின்றனர். இன்னும் சில நேரங்களில் ஷிர்க்குடைய வாசகங்களையும், ஷைத்தானியத்தான பாதுகாப்பு முறைகளையும் தட்டுக்களில் எழுதுகின்றனர். அதைக் கழுத்தில் தொங்கவிட்டுக் கொள்ளுமாறோ அல்லது பெட்டிகளில் போட்டுப் பூட்டி வைக்குமாறோ, அல்லது வீடுகளில் தொங்க விடுமாரோ பணிக்கின்றனர்.

இன்னும் அவர்களில் சிலர் நல்லடியார்கள் என சொல்லிக்கொண்டு தாம் அற்புதங்களை வெளிப்படுத்துவதாகப் பாசாங்கு பண்ணுகின்றனர். ஆயுதங்களால் தங்களுக்குத் தாங்களே தாக்கிக் கொள்வதைப் போல தங்களுக்கு மேலால் வாகனத்தை ஓடச்செய்து அதில் எந்தவொரு பாதிப்பும் ஏற்படவில்லை என சொல்வது போல, சில மாயாஜால வித்தைகளைப் பயன்படுத்தி மக்களை மெய்மறக்கச் செய்து ஆச்சரியத்தில் விழி பிதுங்க வைக்கின்றனர். அல்லது அது அல்லாத பல மந்திரங்களைப் பயன்படுத்தி கெட்ட ஷைத்தான்களை வரவழைத்து உண்மையில் சில சூனியங்களைச் செய்கின்றனர். இவ்வாறான நிகழ்வுகளை அவர்கள் அல்லாஹ்வுக்கு இணைவைத்து ஷைத்தானுக்குப் பலியிட்டதன் பின்புதான் அவர்களால் நிகழ்த்திக் காட்ட முடியும்.

ஒரு இளைஞன் பிற நாடொன்றுக்குப் பயணம் மேற்கொண்ட வேளையில் நடந்த ஒரு நிகழ்ச்சியைக் குறிப்பிடுவது பொருத்தம் என நினைக்கின்றேன்.

அவன் கூறுகின்றான், நான் சர்க்கஸ், மெஜிக் நிகழ்ச்சி நடைபெற்ற ஒரு இடத்துக்குச் சென்றேன், பல வகையான விளையாட்டுக்களை பார்த்துக் கொண்டிருந்தேன். அப்போது ஒரு பெண் கயிற்றின் மீது அபாரமான முறையில் நடக்கக்கூடிய ஒரு காட்சியைப் பார்த்தேன் ஒரு சுவரின் மீது கொசு செல்வது போல் ஊர்ந்து சென்று வித்தை காட்டிக் கொண்டிருந்தாள். அவள் செய்யக்கூடிய காரியங்களை மக்கள் வியப்புற்றவர்களாக பார்த்துக்கொண்டிருந்தனர். நான் எனக்குள் இவள் செய்யக்கூடிய ஆச்சரியமான செயல்களை அவள் பெற்ற பயிற்சிகளின் மூலம் ஒருபோதும் செய்ய முடியாது எனவே இவள் கற்ற சூனியத்தின் மூலம், கெட்ட ஷைத்தான்களை வசப்படுத்தியே இந்த வித்தையைச் செய்கின்றாள் என நான் முடிவு செய்து கொண்டேன். நான் இது போன்ற சூனிய மாயா, ஜாலங்களையெல்லாம் நம்புபவன் அல்லன். நான் ஒரு தௌஹீத்-வாதி அல்லாஹ்வை முழுமையாக நம்பி ஷைத்தானுக்கு மாறு செய்பவன். நான் என்ன செய்வது என்ற தடுமாற்றத்தில் இருந்தேன்.

நான் ஒரு தடவை சூனியத்தைப் பற்றி ஆற்றப்பட்ட ஜும்ஆ உரைக்கு சென்றிருந்தேன் அந்த உரையை நிகழ்த்திய அறிஞர் ஷைத்தான்கள் தான் சூனியத்துக்கு பயன்படுத்தப்படுகின்றனர் நிச்சயமாக ஷைத்தானுடைய சூழ்ச்சி வீனானது. அல்லாஹ்வுடைய வார்த்தைகளுக்கு முன்னால் அவைகள் அழிந்து போகும் என்று அவர் சொல்லக் கேட்டிருக்கின்றேன். எனவே நான் எனது நாற்காலியிலிருந்து எழுந்து அவளை நோக்கி நடந்தேன், மக்களோ வைத்த கண் வாங்காது அவளது மாய வித்தையில் மயங்கி லயித்துக் கிடந்தனர். இடையிடையே கூச்சல் போட்டு ஆரவாரம் செய்து கொண்டிருந்தனர், வியப்புற்றவர்களாகக் கைகளை தட்டினர், நான் எழுந்து அவள் பக்கம் சென்றதும் ஆச்சரிய மேலீட்டால்தான் நான் அவளை நெருங்கி செல்கின்றேன் என்று அவர்கள் எண்ணிவிட்டார்கள் போலும், சூனியக்காரியை நெருங்கினேன், அவளது முகத்தைப் பார்த்து ஆயத்துல் குர்ஸியை ஓத ஆரம்பித்தேன். என்ன ஆச்சரியம் உடனே அப் பெண் நிலைதடுமாற ஆரம்பித்தாள் நான் வசனங்களை ஓதி முடிப்பதற்குள் அவள் முகங்குப்புறக் கீழே வீழ்ந்து மூர்ச்சையாகி விட்டாள். மக்களோ திடுக்கத்துடன் எழுந்து பார்த்துக் கொண்டிருக்கின்றார்கள். மற்றும் சிலர்

அவளை வைத்தியசாலைக்கு எடுத்துச் சென்றனர். அல்லாஹ்வின் வார்த்தைகள் உண்மையாகி விட்டது: 'நிச்சயமாக ஷைத்தானின் சூழ்ச்சி பலவீனமானது' (அந்நிஸா 4: 76).

'அவர்கள் (அல்லாஹ்வுக்குச்) சதி செய்தார்கள் அல்லாஹ்வும் (அவர்களுக்குச்) சதி செய்து விட்டான். இன்னும் அல்லாஹ், சதிசெய்பவர்களி(ன் சதியை முறியடித்துக் கூலிகொடுப்பதி)ல் மிகச் சிறந்தவன்'. (ஆலுஇம்ரான் 3:54).

## சிலைகளைப் புனிதப்படுத்துவதும், அவற்றை ஞாபகார்த்தமாக வைப்பதும் ஷிர்கே!

சிலைகள் எனப்படுவது மனிதனின் அல்லது விலங்குகளின் உருவத்தில் செதுக்கப்பட்ட முப்பரிமான உடலமைப்பைக் கொண்ட உருவங்களைக் குறிக்கும். அது மனிதனின் அல்லது மிருகத்தின் உருவத்தில் வடிவமைக்கப்பட்டிருக்கலாம். ஞாபகார்த்தச் சிலைகள் எனப்படுவது பொது இடங்களிலோ, பூந்தோட்டம், மைதானம் போன்ற மக்கள் அதிகமாகக் கூடும் இடங்களிலோ வைக்கப்படும் சமூகத்தில் மதிக்கப்படுபவர், நல்லவர்களின் உருவச் சிலைகளைக் குறிக்கும். இவ்வாறான சிலைகளாலேயே பூமியில் சிலை வணக்கம் எனும் கொடிய ஷிர்க் பரவியது. நூஹ் நபியின் சமுதாயம் நல்லவர்களின் நினைவாக செய்த சிலைகள் ஒரு சில காலம் செல்வதற்கு முன்பே வணங்கப்படக்கூடிய விக்ரஹங்களாகவும் கடவுள்களாகவும் மாறி விட்டன. இதன் காரணமாகத்தான் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் சிலைகள் வடிவமைக்கப்படுவதையும் உருவங்கள் தொங்கவிடப்படுவதையும் தடுத்தார்கள். ஏனென்றால் அவைகள் ஷிர்கின் வாயல்களைத்திறக்கும். நபி (ஸல்) அவர்கள் உருவங்கள் வரைபவர்களைச் சபித்ததும் இதனால்தான். மறுமை நாளில் அவர்கள் கடுமையாக வேதனைச் செய்யப்படுவார்கள் உருவங்களை அழிப்பதற்கு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் ஏவினார்கள். இன்னும் எவர் வீட்டில் உருவங்கள் இருக்குமோ அவ்வீட்டுக்கு வானவர்கள் நுழைய மாட்டார்கள் எனக் கூறினார்கள்.

## நூதன முறையில் வஸீலாத் தேடுவதும் ஷிர்க்கே...

நபி (ஸல்) அவர்களின் பொருட்டாலோ படைப்பினங்களின் பொருட்டாலோ பிரார்த்தித்தல் அல்லது மரணித்தவர்களிடம் பிரார்த்தித்தல் பரிந்துரைக்குமாறு கோரல் ஆகிய அனைத்தும் ஷிர்க்கின் பால் இட்டுச்செல்லும் மார்க்க விரோத செயல்களாகும். ஒருவன் தனது பிரார்த்தனையில் யாஅல்லாஹ் உனது நபியின் பொருட்டால், இந்த மனிதனின் பொருட்டால், மரணித்த இம்மனிதனின் பொருட்டால் என்று கூறிப் பிரார்த்திப்பது அனுமதிக்கப்பட மாட்டாது.

இஸ்லாத்தில் அனுமதிக்கப்பட்ட வஸீலா என்பது: அல்லாஹ்வுடைய பெயர்கள் பண்புகளைக் கொண்டு பிரார்த்திப்பதாகும் அருளாளனே! எனக்கு அருள் புரிவாயாக! பாவங்களை மன்னிக்கக்கூடியவனே! எனது பாவங்களை மன்னிப்பாயாக! என்பது போன்ற துஆக்களாகும். இன்னும் (ஈமான்) இறைவிசுவாசத்தைக் கொண்டு நல்லமல்களைக் கொண்டு ஒருவன் யா அல்லாஹ் நான் உன்மீது வைத்திருக்கும் நம்பிக்கையைக் கொண்டு, உனது இறைத்தூதரை உண்மைப்படுத்தியதைக் கொண்டு, என்னை சுவர்க்கத்தில் நுழைவிக்கச் செய்வாயாக! என்றும் கேட்கலாம். அதேபோல் உயிருடன் இருக்கும் ஒரு நல்லடியாரிடம் தனக்காகப் பிரார்த்திக்குமாறு கோரிவிட்டு அவர் தனக்காகக் கேட்ட துஆவின் பொருட்டால் பிரார்த்திப்தும் நபிவழியில் உள்ளதாகும். அதேபோல் ஒரு முஸ்லிம் தனது சகோதரனுக்காக மறைவில்(அவனுக்குத் தெரியாமல்) கேட்கும் பிரார்த்தனையும் ஏற்றுக்கொள்ளப்படும் என்பது ஹதீஸாகும். கப்ரில் அடக்கப்பட்ட ஒருவரிடம் பிரார்த்திக்க கோருவது முற்றிலும் தடைசெய்யப்பட்டதாகும். இதுவரை சுட்டிக்காட்டப்பட்ட அனைத்தும் ஒரு அடியான் அல்லாஹ்வுக்கு செய்ய வேண்டிய கடமைகளாகும். இவைகளை அல்லாஹ் அல்லாது வேறுயாருக்கும் செலுத்துவது கூடாததாகும்- தடைசெய்யப்பட்டவையாகும்.

## ஈமான் (நம்பிக்கை) கொள்ளவேண்டியவைகள் ..

ஈமான் (நம்பிக்கை) கொள்ள வேண்டிய முதல் அம்சம் அல்லாஹ்வைக் கொண்டு நம்பிக்கை கொள்வதாகும். அல்லாஹ் அனைவரினதும் இறைவன். வணங்கப்படுவதற்குத் தகுதியானவன் அவன் மாத்திரமே! என உறுதியாக நம்புவதுடன் அல்லாஹ்வுக்கு உயர்ந்த பண்புகளும் பெயர்களும் இருக்கின்றன. 'அவனுக்கு ஒப்பாக எந்த ஒன்றும் இல்லை அவன் கேட்கக்கூடியவன் பார்க்கக்கூடியவன்'. (அஷ்ஷூரா 42: 11).
அல்லாஹ் எப்பொழுதும் எப்படியும் எதாலும் கதைக்க ஆற்றல் உடையவன் என நம்பவேண்டும்.

'இன்னும் அல்லாஹ் மூஸாவுடன் உறுதியாக பேசியுமிருக்கின்றான்'. (அந்நிஸா 4:164).

புனித குர்ஆனும் அதற்கு முன் அருளப்பட்ட ஏனைய அனைத்து வேதங்களும் அல்லாஹ்வின் வார்த்தைகள் என்றும் நம்ப வேண்டும்... அல்லாஹ் தன் வடிவமைப்பாலும், பண்புகளாலும் மேலே இருக்கின்றான் என நம்பவேண்டும்.

அவன் வானங்கள் பூமியை ஆறு நாட்களில் படைத்தான். பின் அவன் அர்ஷின் மீது நிலைகொண்டிருக்கின்றான். அவன் அர்ஷில் நிலைகொண்டிருப்பதானது அவனுக்கே உரிய முறையில் அவனுக்கே உரிய அந்தஸ்திலாகும். அவனைத்தவிர வேறு எவரும் அவன் எப்படி இருக்கிறான் என்பதன் யதார்த்த நிலையை அறிய மாட்டார்கள். அவன் அர்ஷின் மீது உயர்ந்து நிலைகொண்டிருந்த போதிலும் படைப்பினங்களின் அனைத்து நிலைகளையும் அறிந்தவனாக, அவர்கள் பேசுவதை கேட்கக்கூடியவனாக அவர்கள் செய்வதை பார்க்கக்கூடியவனாக அவர்களது கருமங்களை திட்டமிடக்கூடியவனாகவே இருக்கிறான். மறுமை நாளில் முஃமின்கள் அல்லாஹ்வை தமது புறக்கண்களால் பார்ப்பார்கள் என நம்ப வேண்டும்.

அல்லாஹ் சொல்கிறான்: 'அந்நாளில் சில (ருடைய) முகங்கள் (மகிழ்ச்சியால்) மலர்ச்சியானவையாக இருக்கும். (அவை) தங்கள் இரட்சகனை நோக்கிக்கொண்டிருக்கும்' (அல்கியாமா 75:22,23).

அல்லாஹ் தனது வேதத்திலும் அறிவித்த, நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் நபிமொழிகளிலும் இடம்பெற்ற அவனது பண்புகளை நாம் நம்பவேண்டும் அதன் உண்மையான யதார்த்தத்தை நாம் அறியாவிடிலும் அது எவ்வாறு சொல்லப்பட்டதோ அவ்வாறே உண்மைப்படுத்த வேண்டும். அவனுக்கே உரிய அந்தஸ்தில் அவை அமைந்திருக்கும் என ஏற்றுக் கொள்ளவேண்டும்.

## வானவர்களை நம்புதல்

அல்லாஹ் வானவர்களை ஒளியால் படைத்தான், அவர்களுக்கு இடப்பட்ட பணிகளை அவர்கள் செய்து கொண்டிருக்கின்றனர். அவர்கள் அல்லாஹ்வின் கட்டளைக்கு மாறு செய்யாத அவனது கட்டளைகளை முழுக்க முழுக்க நடைமுறைப் படுத்தக்கூடிய அடியார்களாவர். அவர்கள் எண்ணிக்கையில் நம்மைவிட பல மடங்காகும் அல்லாஹ்வுக்கு அஞ்சி அவனுக்கு அதிகமாக வணக்க வழிபாடுகள் செலுத்தக்கூடியவர்கள். 'வானத்தில் ஒரு வீடு இருக்கிறது அதற்கு பைதுல் மஃமூர் என பெயர் சொல்லப்படும். ஒவ்வொரு நாளும் எழுபதாயிரம் மலக்குகள் அதனுள் நுழைந்து தொழுகின்றனர் பின் வெளியேறுகின்றனர். மறுமை நாள் வரை அவர்கள் மறுபடியும் அதனுள் நுழையமாட்டார்கள்' என நபிகளார் (ஸல்) அவர்கள் கூறினார்கள். (புஹாரி, முஸ்லிம்).

'அல்லாஹ்வின் அர்ஷைச் சுமந்திருக்கும் வானவர்களில் ஒருவரைப்பற்றிப் பேசுவதற்கு எனக்கு அனுமதியளிக்கப்பட்டது. அவரது காதுச்சோனைக்கும் தோற்புஜத்துக்கும் மத்தியில் உள்ள தூரம் எழுநூறு வருடம் நடக்கும் தொலைவாகும்' என நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள். (தப்ரானி).

ஒரு சில வானவர்கள் குறிப்பிட்ட சில பணிகளில் நியமிக்கப்பட்டிருக்கின்றார்கள்.
ஜிப்ரீல் (அலை)யிடம் இறைத்தூதர்களுக்கு இறைச்செய்தியை கொண்டு வரும் பணி ஒப்படைக்கப்பட்டிருந்தது, மீகாயில் என்பவருக்கு மழை பொழிவித்தல் தாவரங்களை முளைக்கச் செய்தல் போன்ற பணிகள் ஒப்படைக்கப்பட்டிருக்கின்றன. இஸ்ராபீல் மறுமை நாள் சம்பவிக்கும்

போது ஸூர் எனும்(குழலை) ஊதுவார், மலகுல் மௌத் எனும் வானவர்கள் ஒவ்வொரு உயிரையும் கைப்பற்றுவதற்குப் பொறுப்பாக்கப்பட்டவர்கள், மாலிக் என்பவர் நரகத்துக்குப் பொறுப்பானவர்.

இன்னும் மலக்குகளில் ஒரு சாரார் பெண்களின் கர்ப்பத்திலுள்ள சிசுக்களின் விடயங்களைக் கவனிப்பதற்கும், வேறுசிலர் ஆதமுடைய மக்களாகிய எம்மை ஆபத்துக்களை விட்டும் பாதுகாப்பதற்கும் பொறுப்பாக்கப்பட்டிருக்கின்றனர். வேறு சிலர் ஆதமுடைய பிள்ளைகள் செய்யும் தவறுகளைப் பதிவு செய்வதற்காகப் பொறுப்பானவர்கள். மற்றும் சிலர் மரணித்தவர்கள் கப்ரில் வைக்கப்பட்டதன் பின் அவர்களிடம் கேள்விகள் கேட்பதற்குப் பொறுப்பானவர்கள். இவர்களல்லாத இன்னும் ஏராளமான மலக்குகளும் அல்லாஹ்வின் கட்டளைகளை எதிர்பார்த்த வண்ணம் இருக்கின்றனர்.

வானவர்கள் நமது கண்களுக்கு தெரியாத ஒரு படைப்பினம் அவர்களை நாம் காணாவிட்டாலும் அவர்கள் இருப்பதை உறுதியாக நம்பவேண்டும். அது அல்லாமல் கண்களுக்குப் புலப்படாத இன்னுமொரு படைப்பினம் இருக்கிறது அவர்கள் ஜின்கள் நெருப்பால் படைக்கப்பட்டவர்கள், மனிதன் படைக்கப்படுவதற்கு முன் அல்லாஹ்வால் படைக்கப்பட்டவர்கள் ஆவார்.

அல்லாஹ் கூறுகிறான்: ‘இன்னும் (தட்டினால்) சப்தம் வரக்கூடிய, மாற்றமடைந்த கறுப்பான களிமண்ணிலிருந்து மனிதனை (ஆதமை) திட்டமாக நாம் படைத்தோம். மேலும் ஜின்னை (அதற்கு) முன்னதாக கொடிய உஷ்னமுள்ள நெருப்பிலிருந்து நாம் படைத்தோம்’ (அல்ஹிஜ்ர் 15:26,27).

ஜின்கள் இறைவனின் கட்டளைக்குக் கட்டுப்பட்டு வாழ்வதற்குப் பணிக்கப்பட்டவர்கள்அவர்களில் இறைவிசுவாசிகளும்(முஃமின்களும்) இருக் கின்றனர் இறை நிராகரிப்பாளர்களும் (காபிர்களும்) இருக்கின்றனர், அவர்களில் அல்லாஹ்வுக்கு வழிப்படக் கூடியவர்களும் இருக்கின்றனர் மாறு செய்யக்கூடியவர்களும் இருக்கின்றனர். மனிதர்கள் அவர்கள் மீது வரம்பு மீறுவதைப் போல சில வேளைகளில் அவர்கள் மனிதர்கள் மீது வரம்பு மீறுகின்றனர். மனிதர்கள் மல சலம் கழித்ததன் பின் பிராணிகளின் எலும்புகளைக் கொண்டு சுத்தப்படுத்துகின்றனர். இது மனிதர்கள் அவர்கள்

மீது செய்யும் எல்லை மீறலாகும். ஏனெனில் நபியவர்கள் இவ்வாறு செய்யக் கூடாதெனத் தடுத்திருக்கின்றார்கள்.

'எலும்புகளையும், பிராணிகளின் மலங்களையும் (விட்டைகளையும்) உபயோகித்து கழிவறைக்குச் சென்றதன் பின் சுத்தப்படுத்த வேண்டாம் ஏனெனில் அது உங்களது சகோதரர்களாகிய ஜின்களின் உணவாகும்' என நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள். (முஸ்லிம்).

மனிதர்களுக்கெதிராகக் காணப்படும் ஜின்களின் செயல்கள் அவர்களை பயப்படச் செய்வதும் மனதில் ஊசலாட்டங்களை 'வஸ்வாஸ்' எனும் தேவையற்ற சந்தேகங்களைக் உறுவாக்கி விடுவதும், சிலசமயம் மனிதனின் உடலில் ஊடுருவிக் கொண்டு சில அட்டகாசங்களைப் புரிவதுமாகும்... ஒரு முஸ்லிமுக்கு இஸ்லாம் கற்றுத்தந்த திக்ருகள், ஆயதுல் குர்ஸி, முஅவ்விதாத் அத்தியாயங்கள், ஆதாரப்பூர்வமான நபிமொழிகளில் இடம்பெறும் பிரார்த்தனைகள் இவைகளைக் கொண்டு இந்த கெட்ட ஜின்களின் தீங்குகளிலிருந்து பாதுகாப்புப் பெறமுடியும்.

ஆனால் அவர்களின் நெருக்கத்தைப் பெற அவர்களுக்காக அறுத்துப்பலியிடுவது, அவர்களின் தீங்குகளை அஞ்சி அவர்களிடம் பிரார்த்திப்பது அனைத்தும் ஷிர்காகும். ஜின்கள்-ஷைத்தான்கள் பலவீனமானவர்கள் என்பதில் எவ்விதச் சந்தேகமும் இல்லை. அவர்களது சூழ்ச்சிகளும் பலவீனமானவையே, எனினும் மனிதன் பாவங்களில் அதிகமாக மூழ்கி விடும்போது தடுக்கப்பட்டவைகளைப் பார்க்கும் போது, இசையைக் கேட்கும் போது அவனது ஈமான் பலவீனம் அடைந்து விடுகிறது, இறைவனுடனான தொடர்பு குறைந்து விடுகிறது அல்லாஹ்வை நினைவு கூறுவதை விட்டும் தூரமாகி விடுகிறான். இந்த சந்தர்ப்பத்தைப் பயன்படுத்தி அந்த ஷைத்தான்கள் இவன் மீது ஆதிக்கம் செலுத்த ஆரம்பித்து விடுகின்றன. மார்க்கம் பாதுகாப்பை பெற கற்றுத்தந்த திக்ருகள் அவர்களுக்கெதிராக ஆதிக்கம் செலுத்தப்பட சக்தி வாய்ந்தவையாகும்.

ஷைத்தானையும் அவர்களது கூட்டத்தைப் பற்றியும் அல்லாஹ் தனது திருமறையில் கூறுகிறான்: 'அல்லாஹ்வின் மீது நம்பிக்கை வைத்து அவனையே சார்ந்து இருக்கக்கூடியவர்கள் மீது (ஷைத்தானாகிய) அவனுக்கு எந்த அதிகாரமும் இல்லை, அவனுடைய அதிகாரமெல்லாம், அவனை நண்பராக எடுத்துக் கொள்கிறார்களே அத்தகையவர்கள் மீதும்,

அவனுக்கு இணை வைக்க கூடியவர்களாக இருக்கிறார்களே அத்தகையவர்களின் மீதும் தான்'. (அந்நஹ்ல் 16: 99, 100).

## வேதங்களை நம்புதல்

வேதங்கள் எனப்படுவது அல்லாஹ் தனது நபிமார்களுக்கு அருளிய இறைவாக்கிய நூல்களாகும். மனிதர்களுக்கு நேர்வழி காட்டுவதற்காகவே அல்லாஹ் அவைகளை அருளினான், இவ்வாறு அதிகமான வேதங்கள் அருளப்பட்டன. அவைகள் அனைத்தையும் நம்பிக்கைக்கொள்வது நம்மீது கடமையாகும். அதில் நான்கு வேதங்களைப் பற்றி அல்லாஹ் நமக்கு அறிவித்துத் தந்துள்ளான்: புனித அல்குர்ஆனை முஹம்மத் (ஸல்) அவர்கள் மீது அல்லாஹ் அருளினான், தௌராத் மூஸா நபிக்கும், இன்ஜீல் ஈஸா நபி மீதும், ஸபூர் தாவூத் நபிக்கும் அருளப்பட்டன. அவைகள் அனைத்தும் அல்லாஹ்வின் வேதங்களாகும். அல்குர்ஆன் இறுதியானதும் உயர்ந்ததும் பாதுகாக்கப்பட்டதுமாகும். அதற்கு முன்னுள்ள வேதங்களின் செய்திகளையும் உள்ளடக்கியதாகும்.

அல்லாஹ் கூறுகிறான்: 'மேலும் (நபியே! முற்றிலும்) உண்மை யைக் கொண்டுள்ள இவ்வேதத்தை நாம் உம்மீது இற க்கிவைத்துள்ளோம். இது தனக்கு முன்னுள்ள வேதங்களை உண்மையாக்கி வைக்கக்கூடியதாகவும், அவற்றைப் பாதுகாப்ப தாகவுமிருக்கின்றது'. (அல்மாயிதா 5:48).

## நபிமார்கள், ரஸூல்மார்கள் மீது நம்பிக்கை கொள்ளுதல்

அல்லாஹ், ஒவ்வொரு சமுதாயத்தினருக்கும் அவனுக்கு எந்தவொரு இணையும் கற்பிக்காமல் அவனை மாத்திரம் வணங்க வேண்டும் என்பதற்காக இறை செய்தியைக் கொடுத்து இறைத்தூதர்களை அனுப்பி வைத்தான். ரஸூல்-மார்களில் ஆரம்பமானவர், நூஹ் (அலை), இறுதியானவர் முஹம்மத் (ஸல்) அவர்கள். இறைத்தூதர்களின் எண்ணிக்கை அதிகமானதாகும், அதில் சிலரின் பெயர்களை மட்டுமே அல்லாஹ் அல்குர்ஆனில் அறிவித்துள்ளான். அவர்களுடைய வரலாற்றுச்

செய்திகளை நமக்குக் கூறியுள்ளான். நமக்கு அல்லாஹ்வால் கூறப்படாத இறைத்தூதர்களும் இருக்கின்றனர் அனைவரையும் நம்பிக்கைக் கொள்வது நம் மீது கடமையாகும்.

அல்லாஹ் தனது திருமறையில் '(நபியே) திட்டமாக நாம் உமக்கு முன்னர் பல இறைத்தூதர்களை அனுப்பியிருக்கிறோம். அவர்களில் சிலருடைய வரலாற்றை உமக்குக் கூறியிருக்கிறோம். இன்னும் அவர்களில் சிலருடைய வரலாற்றை உமக்கு நாம் கூறவில்லை' (ஆபிர் 40: 78).

இறைதூதர்களும் மனிதர்களே. சாதாரன மனிதர்களுக்கும், அவர்களுக்கும் மத்தியில் இறைச்செய்தி வருவது தவிர வேறு எந்த வேறுபாடும் இல்லை. 'நபியே நீர் கூறும் நானும் உங்களைப் போன்ற மனிதனே எனக்கு இறைவனிடமிருந்து இறைச் செய்தி வருகிறது'. (அல்கஹ்ப் 18:110).

ஆம் அவர்கள் சாப்பிடக்கூடியவர்களாக, பருகக்கூடியவர்களாக, நோய் வாய்ப்படக் கூடியவர்களாக, மரணிக்கக்கூடியவர்களாக இருந்தனர். இது அனைத்தும் அவர்களுக்கு இருப்பதாக நம்புவது கடமையாகும். அவர்களில் ஒரு இறைத்தூதரை நிராகரித்தாலும் அனைத்து இறைத்தூதர்களையும் நிராகரித்ததைப் போல் ஆகிவிடும்.

நூஹ் நபியின் சமுதாயத்தைப் பற்றி அல்லாஹ் கூறும் போது: 'நூஹுடைய சமூகத்தார் (நம்மால் அனுப்பப்பட்ட) தூதர்களைப் பொய்யாக்கினார்கள்' என்றும் (அஷ்ஷுஅரா 26:105).

ஹூத் நபியின் சமுதாயத்தை பற்றி கூறும் போது: 'ஆத் சமூகத்தினர் இறைத்தூதர்களை பொய்பித்தனர்'. (அஷ்ஷுஅரா 26:123) என்றும் கூறுகின்றான்.

ஒவ்வொரு நபிமாருக்கும் வழங்கப்பட்ட சட்டதிட்டங்களில் சிலவேறுபாடுகள் இருப்பினும் அனைத்து நபிமார்களும் கொண்டு வந்த அடிப்படைச்செய்தி ஒன்றேயாகும். அதில் ஒருவரைப் பொய்பித்தாலும் அனைவரையும் பொய்பித்தவராகக் கருதப்படுவார். கிறிஸ்தவர்கள் முஹம்மத் நபியின் தூதுத்துவத்தைப் பொய்பித்தனர். நபி (ஸல்) அவர்களைப் பின்பற்றவில்லை, அதனால் அவர்கள் மர்யமின் மகன் ஈஸா

(அலை) வின் தூதுத்துவத்தையும் பொய்பித்து விட்டனர். அவர் முஹம்மத் எனும் ஓர் இறைத்தூதரைப் பற்றி தனக்குப்பின் அவர் நபியாக வரவிருப்பதாக நன்மாராயம் கூறியிருந்தார். அவரை பின்பற்றுமாறும் ஏவி இருந்தார். ஆனால் அவர்கள் அதற்குச் செவிசாய்க்கவில்லை. யூதர்களும் அவர்களைப் போன்ற மற்றவர்களும் அவ்வாறே முஹம்மத் அவர்களின் நபித்துவத்தைப் பொய்ப்பித்ததன் காரணமாக மூஸா நபி அவர்களையும் நிராகரித்தவர்களாகவே கருதப்படுகின்றனர்.

## இறுதி நாளை நம்புதல்

அல்லாஹ்வின் வேதத்திலும் நபியுடைய வாக்கிலும் மரணத்திற்குப்பின் உள்ள நிலமைகளைப் பற்றி எவ்வாறு கூறப்பட்டுள்ளதோ அவைகளை முழுமையாக நம்ப வேண்டும். முதலாவதாக கப்றுடைய வாழ்க்கை அதன் தண்டனைகள் அல்லது அதன் அருள்களைப் பற்றி நம்பவேண்டும்.

அல்லாஹ் தனது திருமறையில்: மேலும் பிர்அவ்னைச் சார்ந்தோரைத் தீயவேதனை சூழ்ந்து கொண்டது. அந் (நரக) நெருப்பின் மீது காலையிலும், மாலையிலும் அவர்கள் எடுத்துக் காட்டப்படுகிறார்கள் மேலும் மறுமை நாள் நிலைபெற்று விடும் நாளில் பிர்அவ்னைச் சார்ந்தோரைக் கடினமான வேதனையில் புகுத்துங்கள் (என மலக்குகளுக்குக் கூறப்படும்).(ஆபிர் 40: 46).

அல்லாஹ் நயவஞ்சகர்களைப் பற்றிக் கூறும் போது: 'அவர்களை இரு முறை நாம் வேதனை செய்வோம் முடிவில் கடுமையான வேதனையின் பால் அவர்கள் திருப்பப்படுவார்கள்' எனறு கூறுகின்றான்' (தௌபா 9:101).

இப்னு மஸ்ஊத் (ரலி) அவர்கள் இவ்வசனத்தை விளக்கும் போது: முதல் தண்டனை உலகத்தில், இரண்டாவது கப்ரில், பிறகு அவர்கள் நரகத்தில். கடுமையான வேதனையின் பால் திருப்பப்படுவார்கள்.

கப்ரின் தண்டனைகள், அருள்கள் பற்றி இடம்பெற்றுள்ள ஹதீஸ்கள் ஏராளமாகும். இமாம் இப்னுல் கைய்யூம் (ரஹ்) மற்றும் ஏனைய அறிஞர்கள் அவைகளை முதவாதிரானது பல்வேறு நபித்தோழர்களால்

அறிவிக்கப்பட்டுள்ளது எனக்கூறியுள்ளனர். நபிமொழிகளில் ஐம்பதுக்கும் மேற்பட்ட ஹதீஸ்கள் இது சம்பந்தமாக இடம்பெற்றுள்ளன.

புஹாரி, முஸ்லிம் போன்ற கிரந்தங்களில் இடம்பெற்றுள்ள ஒரு ஹதீஸ், நபி (ஸல்) அவர்கள் இரு கப்றுகளுக்கு அருகாமையில் நடந்து சென்ற போது இந்த இரு கப்றுகளில் அடக்கப்பட்டவர்கள் வேதனை செய்யப்படுகிறார்கள். அவர்கள் ஒரு பெரும் குற்றத்துக்காக தண்டிக்கப்படவில்லை, அதில் ஒருவர் சிறு நீர் கழிக்கும் போது மறைத்துக்கொள்ளாதவர், மற்றவர் கோள் சொல்லித்திரிபவர் என நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தனது பிரார்த்தனைகளில் 'அல்லாஹும்ம இன்னி அஊதுபிக மின் அதாபில் கப்ரி' யா அல்லாஹ் உன்னிடம் மண்ணறையின் வேதனையை விட்டும் பாதுகாப்புத் தேடுகிறேன் என கூறக்கூடியவர்களாக இருந்தார்கள். கப்றுடைய வாழ்கையில் இடம்பெறும் இன்பமும் துன்பமும் நமது புறக்கண்களுக்குப் புலப்படாத மறைவான விடயங்களாகும். அவற்றை நமது பகுத்தறிவைக் கொண்டு அறிய முடியாது.

<u>இறுதி நாளை நம்புதல்</u>:

ஸூர் ஊதப்படும் பொழுது மரணித்தோர் அனைவரும் அல்லாஹ்வால் மீண்டும் உயிர் கொடுத்து எழுப்பப்படுவதை நம்பிக்கை கொள்ள வேண்டும். பாதணி அணியாதவர்களாக, நிர்வாணமாக கத்னா (விருத்தசேதனம்) செய்யப்படாதவர்களாக மக்கள் அனைவரும் எழுப்பப்படுவார்கள்.

அல்லாஹ் தனது திருமறையில்: (மனிதர்களே!) பின்னர், நிச்சயமாக நீங்கள் இறப்பெய்தக்கூடியவர்கள். பின்னர் மறுமை நாளின் போது நிச்சயமாக நீங்கள் (உயிர் கொடுத்து) எழுப்பப்படுவீர்கள். (அல்முஃமினூன் 23:16,17).

அவ்வாறே அவர்களுக்கிடையே கேள்வி கணக்கு கேட்கப்பட்டு அவர்கள் புரிந்த நன்மை, தீமைகளுக்கேற்ப கூலி வழங்கப்படும் என்பதையும் நம்பவேண்டும்.

அல்லாஹ் கூறுகிறான், 'நிச்சயமாக அவர்கள் நம் பக்கமே மீண்டுவர வேண்டும். பின்னர், நிச்சயமாக அவர்களைக் கேள்வி கணக்கு கேட்பதும் நம் மீதேயாகும்' (அல்காஷியா 88:25,26).

சுவர்க்கம் நரகத்தை நம்புவதும், இறுதி நாளை நம்புவதிலேயே உள்ளடக்கப்படுள்ளது. சுவர்க்கம் இறையச்சமுடையோரின் வீடு எந்தக் கண்ணும் கண்டிராத, எந்தக் காதும் கேட்டிராத, எந்த மனித உள்ளத்தாலும் கற்பனை செய்ய முடியாத பாக்கியங்கள் அங்கே நிறைந்துள்ளன. நரகம் தண்டனைக்குரிய இடம் இதில் சிந்திக்க முடியாத அளவு தண்டனைகள் பாவிகளுக்காகச் சித்தப் படுத்தி வைக்கப்பட்டுள்ளன.

அவ்வாறே மறுமை நிகழ்வதற்கு முன் அறிகுறியாக சம்பவித்த, சம்பவிக்கவிருக்கும் சிறிய பெரிய அடையாளங்கள் அனைத்தையும் நம்பிக்கை கொள்ள வேண்டும். தஜ்ஜால் வெளிப்படுவது, ஈஸா (அலை) வானத்தில் இருந்து இறங்குதல், சூரியன் மேற்கில் இருந்து உதித்தல், பூமியில் ஒரு பெரும் மிருகம் வெளிப்படல் போன்றன அவற்றில் முக்கியமானதாகும்.

மறுமையில் நபியவர்களின் பரிந்துரையைப் பற்றி, ஹவ்ல் எனும் தடாகம், நன்மை தீமை நிறுக்கப்படும் தராசு, அல்லாஹ்வைக் காணுதல் இது போன்ற மறுமை தொடர்பான விடயங்களையும் நாம் நம்ப வேண்டும்.

## கழா-கத்ர் விதியை நம்புதல்!

அதாவது நன்மை தீமை அனைத்தும் அவனது ஏற்பாட்டின் படி நடக்கின்றன என நம்புதல். அல்லாஹ்வின் அறிவு மிக விசாலமானது. காரியங்கள் நடப்பதற்கு முன் அவை பற்றி அறிந்து வைத்திருப்பவன். ஒவ்வொன்றையும் சுருக்கமாகவும் விரிவாகவும் அறியக்கூடியவன். அவன் அனைத்தையும் லவ்ஹுல் மஹ்பூல்-என்னும்பதிவேட்டில்

பதிவுசெய்துள்ளான். மேலும் இவ்வுலகத்தில் உள்ள அனைத்தையும் அவனே சிருஷ்டித்தான்.

அல்லாஹ் கூறுகின்றான்...'அல்லாஹ் அனைத்தையும் படைத்தவன் அவன் அனைத்தின் மீதும் பொறுப்பாளன்' (ஸுமர் 39:62).

இப் பிரபஞ்சத்தில் அவனை அறியாமல் அவனது அனுமதியின்றி எந்த ஒன்றும் நிகழ்வதே இல்லை. அல்லாஹ் தனது திருமறையில், 'நிச்சயமாக நாம் ஒவ்வொரு பொருளையும், (நிர்ணயிக்கப்பட்ட) அளவின்படியே படைத்திருக்கின்றோம்'. (அல்கமர் 54:49) என்று கூறுகின்றான்.

ஒவ்வொரு மனிதனுக்கும் நாட்டம், சுயவிருப்பம் என அல்லாஹ் வழங்கியிருக்கின்றான். எனவே அல்லாஹ் உலகில் நடக்கும் அனைத்தையும் முன்னமே எழுதி விட்டாலும், ஒன்றைச் செய்வதையும் விடுவதையும் அவனது சுய விருப்பத்தின் பேரிலேயே விட்டு விட்டான். ஒருவன் விரும்பினால் வுழூச் செய்து தொழுகையை நிறைவேற்றி நேர்வழியடையலாம். அவன் விரும்பினால் விபச்சாரம் செய்து வழிகெட்டும் போகலாம். எனவே அவனது ஒவ்வொரு செயலுக்கும் அவனே பொறுப்பாளியாவான். அல்லாஹ்வால் அதற்காக அவன் விசாரிக்கப்பட்டு அதன்படி வெகுமதியளிக்கப்படுவான். எனவே கழாக்கத்ரைக் காரணமாகக் கூறிக் கொண்டு எந்தத் தீமையைச் செய்வதற்கோ, கடமைகளைச் செய்யாமலிருப்பதற்கோ அவனுக்கு எவ்வித அதிகாரமுமில்லை.

## இறை நம்பிக்கைக்கு ஊறு விளைவிப்பவை!

இதில் மார்க்கத்தைப் பரிகசித்தல் மிக அபாயகரமானதாகும். இது ஒருவனை இஸ்லாத்தை விட்டு வெளியேற்றும்.

அல்லாஹ் தனது திருமறையில், 'அல்லாஹ்வையும் அவனது வசனங்களையும், அவனது தூதரையுமா நீங்கள் பரிகசித்துக் கொண்டிருந்தீர்கள்? (என்று நபியே கேட்பீராக!) நீங்கள் (செய்யும் பரிகாசத்திற்கு வீண்) சாக்குப் போக்கு கூறவேண்டாம், உங்களின் விசுவாசத்திற்கு பின்னர், திட்டமாக (அதனை) நீங்கள் நிராகரித்தே விட்டீர்கள்' (அத்தவ்பா 9:65,66).

சிலர் இஸ்லாம் பழமையான ஒரு மார்க்கம் நமது காலத்துக்குப் பொருந்தாது அல்லது அது பிற்போக்கானது மீளாய்வு செய்யப்பட வேண்டியது அல்லது மனிதக் கரங்களால் உருவாக்கப்பட்டுள்ள சட்டங்கள் இஸ்லாத்தின் சட்ட திட்டங்களை விடச் சிறந்தது என்ற சிந்தனையைக் கொண்டிருப்பதோ, அல்லது ஏகத்துவத்தின் பால் அழைப்பவர்களை (கப்று வணக்கத்தை தர்கா வழிப்பாட்டை நிராகரித்து அதிலிருந்து மக்களைக் காக்க முயல்பவர்களை) மாற்றுக் கொள்கைக்காரர்களின் அடிவருடிகளென்றோ, வஹ்ஹாபிகள், முஸ்லிம் கூட்டமைப்பை பிரிக்கக்கூடியவர் என்று சொல்வதோ, அவர்களது ஈமானுக்கே ஊறுவிளைவிக்கும் காரியங்களாகும்.

## அல்லாஹ்வால் அருளப்படாததைக் கொண்டு தீர்ப்பு வழங்குவதும் ஈமானில் பெரியளவில் குறையை ஏற்படுத்தும்.

அல்லாஹ்வின் மீது நம்பிக்கைக் கொள்ளுதல் என்பது, வேண்டி நிற்பது அவனது மார்க்கத்தின் சட்டங்களை சொல்லில், செயலில் தீர்ப்புகளில் சொத்து செல்வம் சம்பந்தமான பிரச்சனைகளில் முன்னிலைப் படுத்தி அதன் வழிகாட்டலுக்கேற்ப தீர்ப்பு வழங்குவதாகும். அனைத்து உரிமைகளிலும் ஆட்சியாளர்கள் அவன் இறக்கியருளியதன் படி தீர்ப்புச் சொல்வது கட்டாயமாகும்.

மக்கள் பொறுப்பில் உள்ளவர்கள் அல்லாஹ் அருளியதற்கேற்ப தமது பிரஜைகளை நடத்த வேண்டும். அல்லாஹ் இறக்கியருளியதைக் கொண்டு தீர்ப்பளிக்காது தான் ஒரு முஃமின் -இறை விசுவாசி என்று வாதிடுவது போலித்தனமானதாகும். அதுவும் ஈமானும் ஒன்றுசேர முடியாது.

அல்லாஹ் தனது திருமறையில் கூறுகின்றான், 'ஆனால் உமதிரட்சகன் மீது சத்தியமாக, அவர்கள் தங்களுக்கு ஏற்பட்ட சச்சரவில் உம்மை நீதிபதியாக ஆக்கி, நீர் செய்யும் தீர்ப்பைத் தங்கள் மனங்களில் எத்தகைய அதிருப்தியையும் அடையாமல் முற்றிலும் ஏற்றுக் கொள்ளாத வரையில், அவர்கள் விசுவாசிகளாக மாட்டார்கள்' (அன்னிஸா 4:65)

‘இன்னும் அவன் சொல்கிறான், எவர் அல்லாஹ் இறக்கிவைத்ததைக் கொண்டு தீர்ப்பளிக்கவில்லையோ அத்தகையோர் தாம் நிராகரிப்பாளர்கள் (அல்மாயிதா 5:44).

வியாபாரம், கொடுக்கல், வாங்கல், குற்றவியல் சட்டங்கள், களவு, விபச்சாரம் ஏனையவை அனைத்திலும் அல்லாஹ் அருளியதைக் கொண்டு தீர்ப்புகள் பெறுவது-வழங்குவது கட்டாயமாகும். ஒரு சிலர் நினைப்பது போல திருமணம், விவாகரத்து விடயங்கள், தனியார் சட்டங்களில் மாத்திரம் இஸ்லாமிய முறைப்படி நடப்பதால் மாத்திரம் இறைசட்டத்தின் படி தீர்ப்பளித்ததாக ஆகாது. ஒருவன் மக்களுக்கென சில சட்டங்களை இயற்றி விட்டு அது இறை சட்டத்தை விட சிறந்ததென்றோ அல்லது அதற்குச் சமமானதென்றோ, அதுதான் இக்காலத்திற்க்கு மிகப் பொருத்தம் என்றோ கருதினால் அவர் காபிராக -இறை மறுப்பாளராக ஆகி விடுகின்றார். ஆம் அல்லாஹ் கூறுகின்றான்........

‘மார்க்கத்தில் அல்லாஹ் எதற்கு அனுமதியளிக்க வில்லையோ அதை அவர்களுக்கு மார்க்கமாக்கி வைக்கக்கூடிய இணையாளர்கள் அவர்களுக்கு இருக்கின்றார்களா?’ (அஷ்ஷூரா 42:21).

மற்றுமோர் இடத்தில்: ‘அறியாமைக் காலத்துத் தீர்ப்பினையா அவர்கள் விரும்புகின்றனர்? உறுதியாக நம்பிக்கைக் கொண்ட சமூகத்தார்க்குத் தீர்ப்பளிப்பதில் அல்லாஹ்வைவிடவும் மிக்க அழகானவன் யார்?’ (அல்மாயிதா 5:50).

‘அவர்கள் தங்களது பாதிரிமார்களையும், சன்னியாசிகளையும் அல்லாஹ்வை விட்டு கடவுளர்களாக எடுத்துக் கொண்டனர்! என்ற வசனம் அருளப்பெற்ற பொழுது அதிய் இப்னு ஹாதிம் எனும் நபித்தோழர் அல்லாஹ்வின் தூதரே நாம் அவர்களை வணங்கவில்லையே? என்று வினவினார். அல்லாஹ் உங்களுக்குத் தடுத்ததை அவர்கள் உங்களுக்கு ஆகுமாக்கினர். அதை அப்படியே நீங்களும் எடுத்து நடக்கின்றீர்கள். அல்லாஹ் ஆகுமாக்கிய சிலதை உங்களுக்கு அவர்கள் தடை செய்தார்கள் உடனே நீங்களும் அதை தடையாக எடுத்துக் கொண்டீர்களா இல்லையா? என வினவ அந்த நபித்தோழர் ஆம் என்று கூறினார். உடனே நபி (ஸல்) அவர்கள், அதுதான் அவர்களை வணங்குவதென்பது என நபிகள் நாயகம் மறுமொழி பகர்ந்தார்கள்.

## காபிர்களுடன் நேசக்கரம் நீட்டி முஃமின்களை எதிரிகளாகக் கருதுதல். இதுவும் இறை நம்பிக்கைக்கு ஊறு விளைவிக்கும் விடயமாகும்.

ஒரு முஸ்லிமானவன் காபிர்களையும், யூதர்களையும், கிறிஸ்துவர்களையும் ஏனைய முஷ்ரிகீன்களையும் விரோதிகளாகக் கணிப்பது கட்டாயமாகும் அவர்களுடனான தோழமை எச்சரிக்கையோடு மேற்கொள்ளப்பட வேண்டும்.

அல்லாஹ் கூறுகின்றான், 'விசுவாசங்கொண்டோரே! என்னுடைய விரோதியையும், உங்களுடைய விரோதியையும்-அவர்கள் பால் (உங்கள்) நேசத்தைச் சேர்த்துவைக்கின்ற நண்பர்களாக எடுத்துக்கொள்ள வேண்டாம், (ஏனென்றால்) சத்தியத்திலிருந்து உங்களிடம் வந்த வேதத்தை திட்டமாக அவர்கள் நிராகரித்தும் விட்டனர்' (அல்மும்தஹினா 60:1).

இதை விட ஒரு படி மேலாக பெற்றோர்கள், சகோதரர்கள் கூட காபிர்களாக-இறை நிராகரிப்பாளர்களாக இருந்தால் அவர்களுடன் நேசம் பாராட்டுவதைக் கூட அல்லாஹ் தடுத்துள்ளான்.

அல்லாஹ் கூறுகின்றான், 'அல்லாஹ்வையும் இறுதிநாளையும் விசுவாசங் கொண்ட சமூகத்தினரை, அல்லாஹ்வையும் அவனது தூதரையும் பகைத்துக் கொண்டிருக்கிறார்களே அவர்களை நேசிப்பவர்களாக (நபியே) நீர் காண மாட்டீர், அவர்கள் தங்களின் பெற்றோர்களாயினும், அல்லது தங்களின் ஆண் மக்களாயினும், அல்லது தங்களின் சகோதரர்களாயினும் அல்லது தங்களின் குடும்பத்தினராயினும் சரியே' (அல்முஜாதலா 58:22).

இந்தக் கருத்தை வலியுறுத்தி பல வசனங்கள் குர்ஆனில் இடம்பெற்றுள்ளன. அனைத்து வசனங்களும் காபிர்களை வெறுப்பதையும் அவர்களை எதிர்ப்பதையும் தெளிவாகச் சொல்லித் தருகின்றன. அவர்கள் அல்லாஹ்வை நிராகரிக்கிறார்கள், அவர்கள் மார்க்கத்துக்கு எதிரிகள், அவர்கள் இறைநேசர்களுக்கு எதிரிகள், இஸ்லாத்துக்கும் முஸ்லிம்களுக்கும் எதிராக

சூழ்ச்சிசெய்யக்கூடியவர்கள். என்றெல்லாம் குர்ஆனில் பல வசனங்கள் இடம் பெறுகின்றன.

அல்லாஹ் தனது திருமறையில், ‘மேலும் அவர்களுடைய வாய் (ச் சொற்)களிலிருந்தே (உங்கள் மீதுள்ள அவர்களுடைய) கடுமையான வெறுப்பு திட்டமாக வெளிப்பட்டுவிட்டது, (உங்களைப்பற்றி) அவர்களுடைய நெஞ்சங்கள் மறைத்து வைத்திருப்பவையோ மிகப்பெரிதாகும். நீங்கள் விளங்கிக் கொள்பவர்களாக இருந்தால் நிச்சயமாக நாம் (அவர்களுடைய) அடையாளங்களை உங்களுக்குத் தெளிவாக்கி விட்டோம், (விசுவாசங்கொண்டோரே) தெரிந்து கொள்ளுங்கள்! நீங்கள் அவர்களை நேசிக்கிறீர்கள், அவர்களோ, உங்களை நேசிப்பதில்லை, நீங்கள் வேதங்கள் யாவற்றையும் விசுவாசிக்கிறீர்கள், இன்னும், அவர்கள் உங்களைச் சந்தித்தால், நாங்கள் விசுவாசங் கொண்டு விட்டோம் என்று கூறுகின்றனர், இன்னும் (உங்களிலிருந்து விலகி) தனித்து விட்டாலோ, (உங்கள் மீதுள்ள) ஆத்திரத்தினால் (தங்கள் கை) விரல்களின் நுனிகளைக் கடித்துக் கொள்கின்றனர், ஆகவே (நபியே! அவர்களிடம்) நீர் கூறுவீராக! உங்கள் ஆத்திரத்திலேயே நீங்கள் இறந்து விடுங்கள்! நிச்சயமாக அல்லாஹ் (உங்கள்) நெஞ்சங்களில் உள்ளவற்றை நன்கறிகின்றவன். உங்களுக்கு ஏதேனும் நன்மை ஏற்படின், (அது) அவர்களை வருந்தச் செய்கின்றது, உங்களுக்கு யாதொரு தீங்கு ஏற்பட்டாலோ, அதற்காக அவர்கள் மகிழ்ச்சியடைகின்றனர், ஆகவே நீங்கள் பொறுமையுடனிருந்து, (அல்லாஹ்வை) பயந்தும் கொள்வீர்களாயின், அவர்களுடைய சூழ்ச்சி உங்களுக்கு யாதொரு தீங்கையும் விளைவித்து விடாது. (ஏனென்றால்) நிச்சயமாக அல்லாஹ், அவர்கள் செய்பவற்றைச் சூழ்ந்து அறிகிறவன்’. (ஆலு இம்ரான் 3:118-120).

யூதர்கள், கிறிஸ்துவர்கள் தற்காலத்தில் இஸ்லாத்துக்கும் முஸ்லிம்களுக்கும் எதிரான போர்ப் பிரகடனங்கள் செய்வதோடு, மக்களை இஸ்லாத்தை விட்டும் தூரப்படுத்தும் முயற்சிகள், இஸ்லாம் எனும் வழியை விட்டும் தடுக்க தமது பொருளாதாரத்தை செலவு செய்தல், அதற்கான சதித்திட்டங்களில் ஈடுபடுதல் போன்றவைகள் ஒழிவு மறைவின்றி அனைவருக்கும் தெரிந்த விடயமாகும்.

தற்கால முஸ்லிம்கள் காபிர்களுடன் கொள்ளக்கூடிய நட்புக்குப் பல வடிவங்கள் இருக்கின்றன. அவர்களை இஸ்லாத்திற்கு அழைக்கும் எந்த

நோக்கமுமின்றி அவர்களுடன் கலந்து இருத்தல், அவர்களுடன் மிகநெருக்கமாக பழகுதல், அவர்களது நாடுகளில் குடியிருத்தல், எந்த ஒரு அத்தியவசியத் தேவையுமின்றி அவர்களின் நாடுகளுக்குப் பிரயாணித்தல், ஆடை அணிவதில் மற்றும் வெளி நடவடிக்கைகளில், வாழ்க்கையில் அவர்களுக்கு ஒப்பாகுதல், அவர்களது மொழியில் எந்தத்தேவையுமின்றிக் கதைத்தல் போன்ற அனைத்தும் இந்த வகையிலேயே அடங்கும். இவை அனைத்தும் இறை நம்பிக்கையில் பெரியளவில் பாதிப்பேற்படுத்தக் கூடியவைகளே!

## இன்னும் நம்பிக்கையில் பெரியளவில் பாதிப்பை ஏற்படுத்தக்கூடியவைகள்!

நபித்தோழர்களை, நபியுடைய குடும்பத்தினரைக் குறைத்து மதிப்பிடல், அல்லது அவர்களை ஏசுதல் போன்றன மிக அபாயகரமானதாகும்.

நபித்தோழர்களை நேசிப்போம், அதே வேளை அவர்களில் எவரையும் நேசிப்பதில் அளவு கடந்து செல்லக்கூடாது. அலி (ரலி) யாக இருக்கலாம் அல்லது வேறு யாராக இருக்கலாம். இது விடயத்தில் நம் நம்பிக்கை இவ்வாறு அமைதல் வேண்டும்.

'அவர்களில் எவரையும் வெறுக்க மாட்டோம், அவர்களை வெறுப்பவர்களை நாமும் வெறுப்போம். அவர்களது நன்மைகளைத் தவிர வேறு எதனையும் கூறமாட்டோம்.'

அல்லாஹ் கூறுகிறான், 'முஹாஜிர்களிலும், அன்ஸாரிகளிலும் (இஸ்லாத்தை ஏற்க) முதலாவதாக முந்திக் கொண்டவர்களும், (அவர்களின் சொல், செயல்களாகிய) நற்கருமத்தில் அவர்களைப் பின்பற்றினார்களே அவர்களும் - அவர்களை அல்லாஹ் திருப்தியடைந்தான், அவர்களும் (அல்லாஹ்வாகிய) அவனை திருப்தியடைந்தனர்' (தவ்பா 9:100).

ஸஹாபாக்களுக்கு மத்தியில் பிளவுகள் ஏற்பட்டிருந்தால், போர்கள் நடைபெற்றிருந்தால் அந்த விடயங்களில் மௌனமாக இருப்பது அவசியம். ஏனெனில் மனிதர்கள் என்ற அடிப்படையில் அவர்கள் நல்லது செய்வதற்கும்

தவறிழைப்பதற்கும் வாய்ப்பிருக்கிறது என்பதே ஸுன்னத் வல்ஜமாஅதினர் என்போரின் கொள்கையாகும்.

அல்லாஹ் அந்தக்குழப்பங்களில் நமது வாள்கள்(ஆயுதங்கள்)சம்பந்தப்படுவதை விட்டும் எவ்வாறு பாதுகாத்தானோ, அதே போன்று நமது நாவுகளையும் அவர்கள் விடயத்தில தவறாக எதையும் பேசி விடாமல் பாதுகாக்க வேண்டும். அவர்களும் மனிதர்களதான். அகிலத்தார் அனைவருக்கும் எஜமான் மறுமையில் தீர்ப்பளிக்கும் போது அவர்களுக்கு மத்தியிலும் தீர்ப்பளிப்பான் என்பதே எமது நம்பிக்கையாக இருக்க வேண்டும்.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்குப் பிறகு ஆட்சி தலைமைத்துவம் அபூபக்கர் (ரலி) அவர்களிடம் ஒப்படைக்கப்பட்டது அவர் சமுதாயத்தின் தலைமைத்துவத்துக்குச் சிறந்தவராகவும் அதற்கு முற்படுத்தப்பட வேண்டியவராகவும் விளங்கினார். அதற்குப் பின் உமர் (ரலி), அதற்குப் பின் உஸ்மான் (ரலி), அதற்குப் பின் அலி (ரலி) ஆகியோர் இஸ்லாமியத் தலைமைத்துவத்தை முன்னெடுத்துச் சென்றார்கள் ..

## மேலும் நம்பிக்கையில் ஊறுவிளைவிப்பவை!

நூதன அனுஷ்ட்டானங்கள் (பித்அத்கள்) முஸ்லிம் சமுதாயத்தில் ஏற்படுத்தப்பட்ட மிகப் பெரியதோர் முஸீபத்தாகும். அவைகள் மூலம் அல்லாஹ்விடத்தில் நெருக்கத்தை அடைந்து கொள்ள முடியும் என்று அதிக முஸ்லிம் மக்கள் எண்ணிக் கொண்டிருக்கின்றனர்.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்கு பிறந்த நாள் (மீலாது) விழா எடுத்தல், மௌலிது பாடல்கள் பாடுதல், அதற்கு மத்தியில் எழுந்து மரியாதை செய்தல், அவர்களுக்கு ஸலாம் சொல்லுதல், அவ்லியாக்கள் நல்லடியார்களின் பெயரில் விழாக்கள் எடுத்தல் இவைகள் அனைத்தும் மார்க்கத்தின் பெயரில் ஏற்படுத்தப்பட்ட வழிகெட்ட நூதனங்கள் ஆகும். நபியோ ஸஹாபாக்களோ செய்யாத ஒன்று. ‘எவர் நமது விடயத்தில் (மார்க்கத்தில்) புதிதாக ஒன்றை ஏற்படுத்துவாரோ அது நிராகரிக்கப்படும்’ என நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள். ‘ஒவ்வொரு

நூதனமும் பித்அத்தாகும், ஒவ்வொரு பித்அத்தும் வழிகேடாகும்' என நபிகளார் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அல்லாஹ் தனது திருமறையில், 'இன்றையத் தினம் உங்களுக்காக உங்களுடைய மார்க்கத்தை நான் பரிபூரணமாக்கி வைத்துவிட்டேன், என்னுடைய அருட்கொடையை உங்களின் மீது முழுமையாக்கிவிட்டேன், இன்னும் உங்களுக்காக இஸ்லாத்தை நான் மார்க்கமாகப் பொருந்திக்கொண்டேன்' (அல்மாயிதா 5:3).

இது போன்ற நூதன அனாச்சாரங்களை இவர்கள் நபி (ஸல்) பெயரில் அரங்கேற்றுவதன் மூலம் விளங்குவது யாதெனில் அல்லாஹ் மார்க்கத்தைப் பூர்த்தியாக்கவில்லை என்பதுதான்! பிற்காலத்தில் வந்தவர்கள் பல நூதன அனுஷ்டானங்களை ஏற்படுத்தி அல்லாஹ்வின் நெருக்கத்தைப் பெற முடியுமென நினைக்கிறார்கள். இது அல்லாஹ்வையும், ரஸூலையும் புறக்கணிப்பதாகும். மௌலிதுகள், பிறந்த நாள் விழாக்கள் என்பதெல்லாம் மார்க்கத்தில் இருக்குமானால், மேலும் அல்லாஹ் அவைகளை பொருந்திக் கொள்வான் என்றால் இறைத்தூதர் அவர்கள் சமுதாயத்துக்கு அவற்றை அறிவித்துக் கொடுத்திருப்பார்கள். அறிஞர்கள் இந்த அனைத்து மௌலிதுகளையும் நிராகரித்திருக்கிறார்கள். ஏனென்றால் இவைகள் அனைத்தும் வழிகெட்ட நூதன வழிபாடுகள். குறிப்பாக நபியின் மீதுள்ள அன்பு, அளவு கடந்து சென்றதே இந்த நூதனங்கள் ஏற்படுவதற்குக் காரணமாக அமைந்தன. பெண்கள், ஆண்கள் இவ்வாறான நிகழ்ச்சிகளில் ஒன்றாகக் கலந்திருத்தல், இசைக்கருவிகளைப் பாவித்தல் போன்ற அனாச்சாரங்களும், நபியிடத்தில் உதவி தேடல், பிரார்த்தித்தல் பாதுகாப்புத் தேடல், இவை போன்ற பெரிய ஷிர்க்குகளும் நிகழ்வதற்கு வழிவகுக்கிறது. இது போன்ற எத்தனையோ நிராகரிப்புக்கு இட்டுச்செல்லும் விடயங்கள் அங்கு நிகழ்கின்றன.

சிலர் மீண்டும் மீண்டும் புர்தா எனும் பெயரில் அரங்கேற்றும் பூஸரீயின் பாடல்களில் நிறைந்து காணப்படும் ஷிர்க்கான வார்த்தைகளைப் பாருங்கள்.

يا أكرم الخلق مالي ألوذ به --- -- سواك عند حدوث الحادث العمم
إن لم تكن آخذا يوم المعاد يدي ---- - صفحا وإلا فقل يا زلة القدم
فإن من جودك الدنيا وضرتها ------ ومن علومك علم اللوح والقلم

**இதன் அர்த்தத்தில் எத்தனை ஷிர்க்குகள் நிறைந்து கிடக்கின்றன என்று சற்று கவனியுங்கள்.**

**--படைப்புகளில் சங்கை மிகுந்த நபியவர்களே.. (மறுமை நிகழ்ந்தவுடன்) திடுக்கமும், அச்சமும் சூழ்ந்து கொள்ளும் அந்த நேரத்தில் நான் அடைக்கலம் தேடுவதற்கு எனக்கு உங்களை விட்டால் வேறு யார் இருக்கின்றார்...**

**அந்த மறுமை நாளன்று நீங்கள் எனது கரம் பிடித்து, எனக்கு உதவி செய்ய வில்லையென்றால் நான் கால் தடுக்கி நரகத்தில் விழுவதைத் தவிரவேறு வழியில்லை...**

**உங்கள் கருனை மிகுந்த அருட்கொடையினாலேயே இவ்வுலகமும், அதன் சக்களத்தியான வானங்களும் நிலை பெற்றிருக்கின்றன. இன்னும் லௌஹூல் மஹ்பூழ் எனும் பலகையிலும், கலம் எனும் எழுதுகோல் பற்றிய அறிவும் உம்மிடம் உள்ள அறிவின் ஒரு பகுதியே...**

**இது போன்ற இறைபண்புகள், மறைவான ஞானம், மறுமை நாளில் பாவங்களை மன்னிப்பது, இவ் உலகத்திலும் மறுமையிலும் காரியங்களைத் திட்டமிடுவது அனைத்துமே வானங்களையும் பூமியையும் ஆட்சி செய்துகொண்டிருக்கும் அல்லாஹ்விற்கு மாத்திரம் உரிய பண்புகளாகும். நபிக்காக நடைபெறும் மௌலிது விழாக்களில் அல்லது வேறு நல்லடியார்களின் பெயரில் நடைபெறும் மௌலிதுகளில் இது போன்ற பெரும் தவறுகள் நிகழ்வதைச் சர்வ சாதாரணமாகக் காணலாம். அவர்கள் நாம் இவ்வாறான மௌலிதுகளை கொண்டு ரஸூலை நினைவு கூர்வதற்காகவும், அவரது வரலாறை மக்களுக்கு எடுத்துச் சொல்வதற்காகவுமே செய்கின்றோம் என்று கூறுகின்றனர். சரி அப்படியானால் ஏன் அதைக் குறிப்பிட்ட ஒரு தினத்தில் நடத்துகின்றீர்கள்? ஏனைய காலங்களிலும் பொது மேடையைப் போட்டு அல்லது கூட்டங்களைக் கூட்டி அவர்களின் வரலாற்றை மக்களுக்கு எடுத்துச் சொல்ல வேண்டியதுதானே...**

**சரி இதை ஒரு சர்ச்சைக்குரிய விடயம் என்றே எடுத்துக் கொள்வோம். அல்லாஹ் கூறுகின்றான், ‘நீங்கள் ஏதேனும் ஒரு விடயத்தில் கருத்து**

வேற்றுமைப்பட்டால் அத(ன்தீர்வி)னை அல்லாஹ் ரஸூலின் பக்கம் விட்டு விடுங்கள்' என்று கூறுகின்றான் இதன் படி நாம் இந்த மௌலீது விவகாரத்தை, அல்குர்ஆனின் ஒளியில் தீர்வு தேடினால் அல்குர்ஆன், நபி (ஸல்) அவர்கள் கூறியபடி வாழுமாறும், மார்க்கம் முழுமை பெற்று விட்டது என்றும்தான் இருக்கின்றது. சரி நபியவர்களிடம் எடுத்துக் கூறி இதற்குக் தீர்வு காண முற்பட்டால் அப்போதும் இவ்வாறான மௌலீதுகளை நபியவர்களோ, ஸஹாபாக்களோ செய்ய வில்லை என்பதே எமக்கு விடையாகக் கிடைக்கின்றது.

எனவே இது ஒரு பித்அத் - நபியவர்கள் காட்டித்தராத நூதன அனுஷ்டானம் என்பது தெரிய வருகின்றது. அது மட்டுமல்ல எமது விரோதிகளான யூத கிருஸ்தவர்களிடம் இருந்து காப்பியடிக்கப்பட்ட இவ்வனுஷ்டானங்களை நாமும் புரிவதால் நாம் அவர்களது கலாச்சாரத்தைப் பின்பற்றியதாகவே கணிக்கப்படும். நாம் இப்படியான மௌலிது விழாக்களை மறுக்கிறோம். நபியை பின்பற்றுமாறு புனித இறைவேதம் நமக்குச் சொல்கிறது, இறைவேதம் நமக்கு மார்க்கம் பூர்த்தியாகி விட்டதாக அறிவிக்கின்றது. நபியோ ஸஹாபாக்களோ செய்யாத, நமக்கு கற்றுத்தராத இந்த மௌலிதுகளை விழாக்களை நாம் மறுக்கிறோம். இவைகள் மார்க்கத்தில் உள்ளவைகள் அல்ல. இவைகள் நிராகரிக்கப்பட வேண்டிய வழிகெட்ட பித்அத்துகள், இன்னும் யூதர்களின் கிருஸ்தவர்களின் கொண்டாட்டங்களுக்கு ஒப்பான செயல்கள், மனிதர்களில் அதிகமானவர்கள் இவ்வாறு செய்கிறார்கள் என்பதைப் பார்த்து மனிதனின் புத்தி ஏமாந்து விடக்கூடாது.

அல்லாஹ் தனது திருமறையில், (நபியே) நீர் பூமியில் பெரும்பான்மையானவர்களைப் பின்பற்றினால் அவர்கள் உம்மை அல்லாஹ்வின் வழியை விட்டு (திருப்பி) வழிகெடுத்து விடுவார்கள்'. (அல் அன்ஆம் 6:116).

## சில ஆச்சரிய நிகழ்வுகள்!

இப்படி அனாச்சாரங்கள் நிறைந்த கொண்டாட்டங்களுக்கு வருகை தருவதில் கவனம் செலுத்தும் அதிகமானவர்கள் கூட்டுத் தொழுகை, ஜும்ஆ போன்ற தொழுகையில் கவனம் செலுத்தாமல் இருக்கிறார்கள். இன்னும் சிலர் மௌலிது நடக்கும் சபைக்கு நபிகளார் (ஸல்)அவர்கள் வருகை தருகிறார்கள் எனும் மூடத்தனமான நம்பிக்கையில் இருக்கிறார்கள். அதனால் தான் நபியை வரவேற்பதற்காக எழுந்து பாடல்களை பாடுகின்றனர் இது வழிகெட்டதும் அறியாமைத்தனமான ஒரு செயலாகும். நபி (ஸல்) அவர்கள் அடக்கப்பட்டு கப்ரில் இருப்பார்கள். மறுமை நாள் சம்பவிக்கும் வரை அங்கிருந்து வெளியேற மாட்டார்கள் அவர்களுடைய உயிரோ இல்லிய்யீன் எனும் உயர்ந்த நல்லடியார்களின் உயிர்கள் வைக்கப்படும் இடத்தில் ரப்பிடத்தில் இருக்கின்றது. இதனைப்பற்றி நபி (ஸல்) அவர்கள் கூறும்போது, 'மறுமை நாளில் கப்ரில் இருந்து முதலில் எழுப்பப்படுபவனாக நான் இருப்பேன்'. நபியின் மீது ஸலாவாத்தும் ஸலாமும் சொல்வதும் (அல்லாஹ்விடத்தில் அருளுக்காகவும் சாந்திக்காவும் பிறார்த்திப்பதுமே) சிறந்த முறையாகும்.

அல்லாஹ் தனது திருமறையில், 'நிச்சயமாக அல்லாஹ் நபியின் மீது அருள் புரிகிறான், அவனது வானவர்களும் நபிக்காக அருள்வேண்டி பிறார்த்திகின்றனர், மு.:மின்களே நீங்களும் நபியின் மீது ஸலவாத்தும் ஸலாமும் சொல்லுங்கள்'. (அஹ்ஸாப் 33:66).

ஒரு அடியான் நபியின் மீது முழுமையான அன்பு செலுத்தாத வரை அவன் பரிபூரண மு.:மினாக மாட்டான் என்பதை நாம் அனைவரும் அறிந்து வைத்திருக்கிறோம். நபியவர்களுக்கே உரிய முறையில் அவர்களை கண்ணியப்படுத்த வேண்டும், பின்பற்றப்படும் வழிகாட்டியாக அவர்களை எடுத்துக் கொள்ளவேண்டும். இஸ்லாம் மார்க்கமாக்கிய வணக்க வழிபாடுளைத்தவிர அளவு கடந்து செல்லக்கூடாது.

அல்லாஹ் தனது திருமறையில், '(நபியே மனிதர்களிடம்) நீர் கூறுவீராக நீங்கள் அல்லாஹ்வை நேசிக்கக்கூடியவர்களாக இருந்தால் என்னைப் பின்பற்றுங்கள் (அப்போது) அல்லாஹ் உங்களை நேசிப்பான், உங்களது

பாவங்களையும் மன்னிப்பான் அல்லாஹ் மன்னித்து கிருபை செய்யக்கூடியவனாக இருக்கிறான்'. (ஆலு இம்ரான் 3:31).

## ரமழான் 27 இரவை விஷேடமாகச் சிறப்பித்தலும் பித்அத்தாகும்!

ரமழானில் அதிகமான வணக்க வழிபாடுகளில் ஈடுபடுவதற்கு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் வழிகாட்டி இருக்கிறார்கள். அவர்கள் இறுதிப் பத்தில் வணக்க வழிபாடுகளில் அதிக ஈடுபாடு செலுத்தக்கூடியவர்களாக இருந்தார்கள். 'எவர் ரமழானில் நம்பிக்கையோடும், நன்மையை எதிர்பார்த்தவராகவும் நின்று வணங்குவாரோ அவர் முன் செய்த பாவங்கள் மன்னிக்கப்படும், இன்னும் எவர் லைலதுல் கத்ர் இரவில் நம்பிக்கையோடும் நன்மையை எதிர்பார்த்தவராகவும் நின்று வணங்குவாரோ அவர் முன் செய்த பாவங்கள் மன்னிக்கப்படும்'. என்பது நபி மொழியாகும். (புஹாரி, முஸ்லிம்).

இது லைலதுல் கத்ர் இரவிலும், ரமழானின் ஏனைய நாட்களிலும் நடந்து கொள்வதற்கான நபியுடைய வழிமுறையாகும். 27ம் இரவை லைலதுல் கத்ராக நினைத்துக் கொண்டாடுவது நபியுடைய வழிமுறைக்கு மாற்றமானதாகும், அதைக் கொண்டாடுவது வழிகெட்ட பித்அத்தாகும். லைலதுல் கத்ர் இரவு 27ம் இரவிலும் ஏனைய இரவுகளிலும் வர வாய்ப்பிருக்கின்றது.

## மிஃராஜுடைய இரவைக் கொண்டாடுவதும் பித்அத்தே!

இதுவும் வழிகெட்ட பித்அத்களில் உள்ளதாகும். சந்தேகத்திற்குக்கிடமில்லாமல் மிஃராஜ் பயணம் நபியுடைய தூதுத்துவத்தை உண்மைப்படுத்தும் ஒரு நிகழ்ச்சியாகும். மிஃராஜ் பயணம் தொடர்பாக அல் குர்ஆனிலும், ஸுன்னாவிலும் வலுவான ஆதாரங்கள் இருக்கின்றன. எனினும் அந்த பயணம் மேற்கொள்ளப்பட்ட இரவு ஆதாரப்பூர்வமான எந்த ஒரு ஹதீஸிலும் ரஜபா அல்லது வேறு மாதத்திலா எனத் தெரிவிக்கப்பட வில்லை. சரி அப்படியே ஹதீஸ்களில் இடம்பெற்றிருந்தாலும் அதற்கென விஷேச வணக்க வழிபாடுகள் கொண்டாட்டங்கள் என நடத்துவது

தடுக்கப்பட்டதாகும். ஏனெனில் நபிகளார் (ஸல்) அவர்களோ, ஸஹாபாக்களோ அந்த நாளை இபாதத்துகள் புரிவது கொண்டு விஷேசப்படுத்தவோ விழாக்களை எடுக்கவோ இல்லை. நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தூதுத்துவத்தை முழுமையாக எத்திவைத்து விட்டார்கள். அவர்களது பொறுப்பை உரிய முறையில் நிறைவேற்றினார்கள். இந்த இரவு சிறப்பானதாகவும் விழாக்கள் எடுக்கப்படவேண்டிய இரவாகவும் இருந்திருந்தால் அதை நமக்குத் தெளிவுபடுத்திச் சென்றிருப்பார்கள்.

## ஷஃபானின் 15 வது இரவை சிறப்பிப்பதும் பித்அத்தே!

ஷஃபானின் 15வது இரவை விஷேசப்படுத்துவதும் அந்நாளில் நோன்பு நோற்பதும் வழிகெட்ட பித்அத்களில் உள்ளதாகும். ஷஃபான் இரவைப் புனிதப்படுத்துவதற்கோ, அந்த நாளில் நோன்பு நோற்பதற்கோ எந்த ஒரு வலுவான ஆதாரமும் இல்லை. இமாம் இப்னு ரஜப் (ரஹ்) உணர்த்தியது போல இது தொடர்பாக வந்திருக்கும் ஹதீஸ்கள் அனைத்தும் பலவீனமானதாகும். அவைகளை செயல்ப்படுத்துவது மார்க்கத்தில் அனுமதிக்கப்பட மாட்டாது. அந்த நாளில் விஷேச தொழுகைகள் இருப்பது சம்பந்தமாக வந்த அனைத்து ஹதீஸ்களும் இட்டுக்கட்டப்பட்டதாகும். ஸைது இப்னு அஸ்லமிடமிருந்து வழ்ழாஹ் அறிவிக்கும் செய்தியில், ‘நாம் கண்ட எந்த ஒரு அறிஞரும் ஷஃபானுடைய 15ஆவது நாளைத் திரும்பிக்கூட பார்க்கவில்லை’.

## இஸ்லாத்தைப் பாழாக்குபவை!

ஒரு முஸ்லிமை மார்க்கத்தில் இருந்து வெளியேற்றக்கூடிய பல விடயங்களை அறிஞர்கள் அடையாளப்படுத்தியுள்ளனர். அவனது சகோதர முஸ்லிமுடைய சொத்துகளை, செல்வங்களை, இரத்தத்தை அனுமதிப்பது இஸ்லாத்தில் இருந்து வெளியேற்றும் செயல்களில் நின்றும் உள்ளதாகும். இவைகளில் அபாயகரமான - அதிகமாக நிகழக்கூடிய 10 வெளியேற்றும் விடயங்களை இங்கு தெளிவு படுத்துகின்றேன்.

1. வணக்க வழிபாடுகளில் அல்லாஹ்வுக்கு இணைகளை ஏற்படுத்துதல் முன்னர் தெளிவுபடுத்தப்பட்டது போல....

2. அல்லாஹ்வுக்கும் நமக்கும் மத்தியில் இடைத்தரகர்களை ஏற்படுத்துதல். அவர்களிடம் பிரார்த்தித்தல், அவர்களிடத்தில் பரிந்துரைக்க வேண்டுதல், அவர்களிடத்தில் காரியங்களை ஒப்படைத்தல் அனைத்துமே ஏகோபித்த கருத்துப்படி குப்ர் -இறை நிராகரிப்பாகும்.

3. இணைவைப்பாளர்களை காபிராக நினைக்காமல் இருத்தல், அல்லது அவர்கள் காபிர்கள் என்பதில் சந்தேகம் கொள்ளுதல், அல்லது அவர்கள் பின்பற்றும் கொள்கையைச் சரிகாணுதல் இவைகள் அனைத்தும் குப்ராகும். இஸ்லாத்தைத் தவிர வேறுமார்க்கத்தை ஏற்றுக்கொண்டவர் காபிராவார். அவர் யூதனாக இருக்கலாம் அல்லது கிறிஸ்துவனாக இருக்கலாம் அல்லது பௌத்த மதத்தைச் சார்ந்தவனாக இருக்கலாம். அல்லது வேறு எந்தக் கொள்கையை ஏற்றவனாகவும் இருக்கலாம். அவர் உறவினராகவோ அன்னியராகவோ எப்படி இருப்பினும் அவர் காபிரே.

4. நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் காட்டிய வழியை விட ஒரு சிறந்த பரிபூரண வேறு வழி இருப்பதாக நினைத்தல். அவர்கள் வழங்கிய தீர்ப்புகளை விட வேறு தீர்ப்புகளை சிறந்ததாகக் கருதுதல்.

வேறு வேறு அசத்தியவான்களின் தீர்வுகளை சிறந்ததாக கருதுவானானால் அவன் காபிராவான். மனிதர்களால் உருவாக்கப்பட்ட சட்ட திட்டங்கள், யாப்புகளை இஸ்லாமிய சட்ட திட்டங்களை விடச் சிறந்ததாகவோ அல்லது அதற்கு சமமாகவோ கருதுபவனும், அல்லது அவைகளை வைத்துத் தீர்ப்பு வழங்குவதை அனுமதிப்பவனும் (அவன் மார்க்க சட்ட திட்டங்களை சிறப்பாக கருதினாலும் சரி, காபிராகவே கருதப்படுவான்.

21ம்-நூற்றாண்டுக்கு இஸ்லாமிய சட்ட திட்டங்கள் பொறுத்தமற்றதாக, நடைமுறைப்படுத்த முடியாததாக கருதுபவன் அல்லது முஸ்லிம்களின் பின்னடைவுக்கு இவைகள் தான் காரணம் என நினைப்பவன், அல்லது ஒரு மனிதனுக்கு தனது இறைவனுடனான தொடர்பை வாழ்க்கையில் ஏனைய பகுதிகளுக்கு நுழையாதவாறு குறிப்பிட்ட வட்டத்திற்குள் கட்டுப்படுத்துபவன், அல்லாஹ்வின் சட்டங்களை நிறைவேற்றுவதை இந்நவீன நூற்றாண்டில் பொறுத்தமற்றதாகக் கருதுபவன், திருடியவனின் கையை துண்டிப்பது, திருமணம் முடித்தவன்

விபச்சாரம் செய்யும் போது கல்லெறிந்து கொள்ளுதல் போன்றவைகளை மறுப்பவனெல்லாம் காபிராகவே கருதப்படுவான்.

அவ்வாறே ஒருவன் அன்றாட வாழ்க்கையில் ஏற்படும் பிரச்சினைகள், இஸ்லாமிய குற்றவியல் தண்டனைகள், இஸ்லாம் அல்லாத சட்ட திட்டங்களைக் கொண்டு தீர்ப்பளிப்பதை அனுமதிப்பவன், அதை அவன் மார்க்க சட்ட திட்டங்களை விட சிறப்பாக கருதாவிட்டாலும் சரியே அனைவருமே காபிராவார்கள். ஏனெனில் அறிஞர்களின் ஏகோபித்த முடிவின் படி அல்லாஹ் தடுத்தவைகளை இவன் அனுமதிக்கிறான். ஒவ்வொருவரும் கட்டாயம் ஹராமென அறிந்திருக்க வேண்டிய விபச்சாரம், வட்டி, மது, ஏனைய மதங்களின் அடிப்படையில் தீர்ப்பளித்தல் அனைத்துமே உலமாக்களின் ஏகோபித்த முடிவின் படி இஸ்லாத்தை விட்டும் வெளியேற்றக் கூடியவையாகும்.

5. அல்லாஹ்வின் தூதர் கூறிய ஒன்றை ஒருவன் வெறுத்தால், அவன் அதை நடைமுறை படுத்தினாலும் சரி - காபிராகிவிட்டான்.

அல்லாஹ் தனது திருமறையில், '(ஏனெனில்) அல்லாஹ் இறக்கி வைத்ததை நிச்சயமாக அவர்கள் வெறுத்து விட்டார்கள் அதலால், அவர்களுடைய செயல்களையெல்லாம் (அல்லாஹ்வாகிய) அவன் அழித்துவிட்டான்' (முஹம்மது 47:9).

6. அல்லாஹ்வின் தூதர் கொண்டு வந்த மார்க்கத்தில் ஒன்றை பரிகசித்தல். அது வழங்கப்படும் கூலியாகவோ அல்லது தண்டனையாகவோ இருக்கலாம் அவன் காபிராகி விட்டான். இதற்கு ஆதாரமாக பின்வரும் இறைவசனத்தில் அல்லாஹ் கூறுகிறான், 'அல்லாஹ்வையும், அவனது வசனங்களையும், அவனது இறைத்தூதரையுமா நீங்கள் பரிகசித்துக் கொண்டிருந்தீர்கள்? என்று நீர் கேட்பீராக!. (நீங்கள் செய்யும் பரிகாசத்திற்கு வீண்) சாட்டு கூறவேண்டாம், உங்களின் விசுவாசத்திற்குப் பின்னர், திட்டமாக (அதனை) நீங்கள் நிராகரித்தே விட்டீர்கள்'. (தௌபா: 9: 66-65).

7. சூனியம் செய்தல். இதன் மூலம் கணவன் மனைவிக்கு மத்தியில் பிரிவை உண்டு பண்ணுதல், அல்லது ஒருவர் மற்றவரை வெறுக்குமாறு செய்தல். அல்லது அவர்களுக்கு மத்தியில் நேசத்தை ஏற்படுத்த சூனியத்தைப்

பயன்படுத்துதல். இதை எவன் செய்கிறானோ அல்லது செய்வதைச் சரி காண்கின்றானோ அவன் காபிராகி விட்டான்.

இதற்கு ஆதாரமாக:
அல்லாஹ் தனது திருமறையில், 'அவர்கள் இருவரும், நாம் இருவரும் சோதனையில் இருக்கிறோம் நீங்கள் (இச்சூனியத்தைக் கற்றுக் கொள்வதன் மூலம்) காபிராகி விடாதீர்கள் எனக்கூறியேயன்றி சூனியத்தை அவர்களுக்குக் கற்றுக் கொடுக்கவேயில்லை'. (அல்பகரா 2: 102).

8. முஸ்லிம்களுக்கு எதிராக இணைவைப்பாளர்களுக்கு உதவியாக, பக்க பலமாக இருத்தல்.

இதற்கு ஆதாரம்:
அல்லாஹ் தனது திருமறையில், 'அவர்களை (காபிர்களை) உங்களில் எவர் நேசம் பாராட்டுகின்றார்களோ அவர்களும் அந்தக் (காபிர்)களில் உள்ளவர்களே ..'

9. மனிதர்களில் சிலர் முஹம்மத் (ஸல்) அவர்கள் கொண்டு வந்த அல்லாஹ்வின் மார்க்கத்தை விட்டு வெளியேறலாம் என்ற நம்பிக்கையில் இருக்கின்றனர். ஹில்ர் (அலை) எப்படி மூஸா நபி (அலை) யின் மார்க்கத்தை விட்டு வெளியேறினார்களோ அது போன்று சூபியாக்களில் சிலர் நமக்கு மார்க்கக் கடமைகளை நிறைவேற்றும் அவசியம் இல்லை எனக் கருதுகின்றனர், இவர்கள் காபிர்கள்.

அல்லாஹ் தனது திருமறையில், 'எவர் இஸ்லாத்தை தவிர்த்து வேறு வழியை தனது மார்க்கமாகத் தேர்ந்தெடுத்துக் கொள்கிறாரோ அவர் மறுமை நாளில் பெரும் நஷ்டவாளர்களில் ஆகிவிடுவார்'. (ஆலு இம்ரான் 3: 51).

10. அல்லாஹ்வின் மார்க்கத்தைப் புறக்கணித்தல். அதை கற்றுக்கொள்வதுமில்லை அதன் படி செயலாற்றுவதுமில்லை என்று இருப்பதும் இஸலாத்தை விட்டு வெளியேற்றும், இதற்கு ஆதாரமாக அல்லாஹ் தனது திருமறையில்:

'மேலும் தன்னுடைய இரட்சகனின் வசனங்களைக்கொண்டு நினைவுபடுத்தப்பட்டு, அதன் பின்னர் அவைகளைப் புறக்கணித்து விடுகிறவனை விட மிக அநியாயக்காரன் யார்? நிச்சயமாக, நாம் (இத்தகைய) குற்றவாளிகளை (அவர்களின் முந்திய பாவத்திற்காக) தண்டிக்கக்கூடியவர்களாகவோம்'. (அஸ்ஸஜதா: 22).

## நினைவூட்டல் ..

குற்றங்களிலேயே மிகபெரும் குற்றமும், பாரிய துரோகமும் தான் தொழுகையை விடுவதாகும். தொழுகையை விடுபவர்கள் ஷைத்தானின் உதவியாளர்கள் அல்லாஹ்வின் எதிரிகள், முஃமின்களின் விரோதிகள், காபிர்களின் நண்பர்கள். அவர்கள் நாளை மறுமையில் 'பிர்அவ்ன், ஹாமான்' போன்ற கொடிய காபிர்களுடன் எழுப்பப்படுவார்கள். அவர்களுடன் நரகில் போட்டு புரட்டப்படுவார்கள்.

அப்துல்லாஹ் இப்னு ஷகீக், அபூ ஹுரைரா (ரலி) போன்றோர் அறிவிக்கும் செய்தி: நபித்தோழர்கள் - அமல்களில் தொழுகையை விடுவதைத் தவிர வேறு எந்த ஒன்றையும் குப்ராகக் கருத வில்லை. (திர்மிதி, ஹாகிம்).

அறிஞர் ஸாலிஹ் அல் உதைமீன் (ரஹ்) கூறுகிறார்கள்... நாம் தொழுகையை விடுபவனைக் காபிரெனத் தீர்ப்பளித்தால் அவனுக்கு மதம் மாறியவனுடைய சட்டம் நடைமுறைபடுத்தப்பட வேண்டும். அவனைத் திருமணம் முடித்துக் கொள்வது ஏற்றுக்கொள்ளப்பட மாட்டாது. அவனுக்குத் திருமண ஒப்பந்தம் நடந்தாலும் அவன் தொழவில்லையானால் அந்த நிகாஹ் செல்லுபடியற்றதாகும். திருமண ஒப்பந்தத்திற்குப்பின் அவன் தொழுகையைப் புறக்கணித்தாலும் அவனது நிக்காஹ் முறிந்து விடும். மனைவிக்கு அவனுடன் வாழ்வது ஹலாலாக மாட்டாது. அவன் கையால் அறுத்தால், அதனை சாப்பிடக்கூடாது அது ஹராம். அவன் மக்காவிற்குள் நுழைய முடியாது, அவனது உறவினர்களில் எவராவது மரணித்துவிட்டால் அவனுக்கு அச்சொத்துக்களில் எவ்வித பங்கும் இல்லை, அவன் மரணித்துவிட்டால் அவனை குளிப்பாட்டுவது கபனிடுவது அவனை தொழுவிப்பது முஸ்லிம்கள் அடக்கப்படும் இடங்களில் அடக்குவது அனைத்தும் தவிர்க்கப்படும். அவன் மறுமை நாளில்

காபிர்களு(இறைநிராகரிப்பாளர்களு)டன் எழுப்பப்படுவான், அவன் சுவர்க்கத்தில் நுழைய மாட்டான், அவனது குடும்பத்தினருக்கு அவனுக்காக அருள் வேண்டி பாவமன்னிப்புக்காக அல்லாஹ்விடத்தில் பிரார்த்திக்க முடியாது. ஏனெனில் அவன் காபிர். தொழுகையை விட்டவனின் மரண வேளை மிகக் கேவலமானதும் பயங்கரமானதுமாகும்.

இமாம் இப்னுல் கையூம் (ரஹ்) அவர்கள் பின்வரும் ஒரு சம்பவத்தைக் குறிப்பிடுகின்றார்கள். ஒரு ஊரில் தொழுகையில் பொடு போக்கான, தினமும் பாவங்களில் ஈடுபட்டு வரும் ஒருவன் இருந்தான். இபாதத் விடயங்களில் மிகவும் பராமுகமாக இருந்தான். அவனுக்கு மரணத்தின் இறுதி வேளை நெருங்கியது. உடனே உறவினர்கள் புடைசூழ அமர்ந்து கொண்டனர். அவனுக்குக் கலிமாவைச் சொல்லிக் கொடுத்தனர். அல்லாஹ்வைப் பற்றிய அச்சத்தை ஏற்படுத்தினர். 'லாஇலாஹ இல்லல்லாஹ்' என்று சொல் மகனே என்று வற்புறுத்தினர். இறுதியில் அவனது உயிர் பிரியும் வேளையில் அவன் கூறினான்...சரி நான் இக்கலிமாவைக் கூறுகின்றேன், ஆனால் இக்கலிமாவால் எனக்கு என்ன பிரயோசனம் ஏற்படப் போகின்றது? நான் வாழ்க்கையில் ஒரு முறை கூடத் தொழ வில்லை. எவ்வித இபாதத்தும் செய்யவுமில்லை. இப்படியிருக்க இதனால் எனக்கு என்ன பலன் கிடைக்குமோ? என அங்கலாய்த்தான். பின்னர் அவனது உயிர் பிரிந்தது ..

ஆமிர் இப்னு அப்துல்லாஹ் இப்னு ஸுபைர் அவர்கள் மரணப்படுக்கையில் இருந்த வேளை அவரது இறுதி மூச்சுக்களை எண்ணிக் கொண்டிருக்கும் வேளை... உயிர் தொண்டைக் குழிக்குள் ஊசலாடிக்கொண்டிருந்தது. அவரது குடும்பத்தினர் அவரை சூழ்ந்து கொண்டு அழுதனர். மரணத்தை நெருங்கிக்கொண்டிருந்த அவ்வேளையில் மஃரிப் தொழுகைக்கான அழைப்பு கேட்டது. அவரது உயிர் தொண்டைக்குழியை நெருங்கியது, ஸக்ராத் வேதனையோ மிக கடுமையாகியது. பாங்கோசையை கேட்டவுடன் தன்னைசூழ உள்ளவர்களுக்கு எனது கரத்தைப் பிடித்து அழைத்துச் செல்லுங்கள் என்றார். அவர்கள் எங்கே? எனக் கேட்டனர், மஸ்ஜிதுக்கு எனக்கூறினார். அவர்கள் நீங்கள் இந்த மோசமான நிலையில் இருக்கும் போதுமா? என வினவ அதற்கு அவர் ஆச்சரியத்துடன் அல்லாஹ் தூய்மையானவன் தொழுகையின் அழைப்பைக் கேட்டு நான் விடையளிக்காமல் இருப்பதா? எனது கையை பிடித்து அழைத்துச் செல்லுங்கள் என்றார். அவரைத்

தூக்கி மஸ்ஜிதுக்கு அழைத்துச் சென்றனர் இமாமுடன் ஒரு ரக்அத்தை நிறைவேற்றினார் பின்பு ஸுஜூதில் இருக்கும் நிலையில் அவர் மரணித்துவிட்டார் ஆம் அவரது உயிர் ஸுஜூதில் இருக்கும் போது பிரிகிறது. இன்னா லில்லாஹ்...

அதாஉ இப்னுஸ் ஸாஈப் (ரஹ்) கூறுகிறார்கள், அபூ அப்துர் ரஹ்மான் என்பவர்கள் நோயுற்றிருந்தார்கள். அவரை நோய் விசாரிக்கச் சென்றோம் அவர் மஸ்ஜிதில் தான் தொழும் இடத்திலேயே இருந்தார் அவரது நோய் கடுமையாகியது அவரது உயிர் உடலை விட்டுப் பிரிய ஆரம்பித்தது. எனவே அவர் மீது பரிவு ஏற்படவே நாம் அவருக்கு ஒரு மென்மையான விரிப்பில் அமர்ந்து கொண்டால் நல்லதல்லவா? என்று சொன்னோம். அதற்கு அவர்கள்.. 'நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் சொன்னதாக, ஒருவர் எனக்கு சொன்னார், ஒருவர் தொழுகையை எதிர்பார்த்து தொழுமிடத்தில் இருப்பாரானால் அவர் தொழுகையிலே இருக்கிறார்' எனவே நான் இந்த நிலையில் இருக்கும் போது எனது உயிர் கைப்பற்றப்படுவதையே விரும்புகிறேன் என்று கூறினார்கள். (அவ்வாறே அவரது உயிரும் கைப்பற்றப்பட்டது).

ஆம் எவர் தொழுகையை நிலைநாட்டி அல்லாஹ்வுக்கு வழிப்படுவதில் பொறுமையுடன் இருப்பாரானால் அல்லாஹ்வின் திருப்பொருத்தத்தோடு அவரது முடிவு அமையும்.

ஸஃத் இப்னு முஆத் (ரலி) எனும் நபித்தோழர் நல்லடியாராகவும், அதிகமாக வணக்க வழிபாடுகளில் ஈடுபடுபவராகவும் அல்லாஹ்வை அஞ்சக்கூடியவராகவும், இரவு காலங்களில் ஸஹருடைய வேளையில் அழுது கண்ணீர் வடிப்பவராகவும், பகல் காலங்களில் இறைவனைத் தொழுவதும், அவனிடம் பிழை பொறுக்கத் தேடுவதுமாக இருந்து வந்தார்கள்.. 'பனூ குரைலா' எனும் யூதக் கோத்திரத்தாருடன் நடந்த யுத்தத்தில் அவருக்குப் பல காயங்கள் ஏற்பட்டன, தொடர்ந்து நோயினால் பீடிக்கப்பட்ட அவர் மரணத்தை தழுவிவிடும் இறுதித் தறுவாயில் இருந்து கொண்டிருந்தார்கள். நபி (ஸல்) அவர்களுக்கு செய்தி தெரிவிக்கப்பட்டபோது அன்னார் தனது தோழர்களுடன் அங்கு செல்ல ஆயத்தமானார்கள்.

ஜாபிர் (ரலி) சொல்கிறார், நபி (ஸல்) அவர்கள் புறப்பட்டவுடன் நாமும் அவர்களுடன் சென்றோம். எமது பாதணிகளின் வார்கள் அறுந்து விடுமளவுக்கு, நமது மேல் துண்டு வழுகிக் கீழே வீழ்ந்து விடுமளவுக்கு வேகமாக நபியவர்கள் நடந்ததைக் கண்டு நாம் ஆச்சரியப்பட்டோம். இது பற்றி நபியவர்களிடம் வினவியதும் அவர்கள் சொன்னார்கள், 'ஹன்லலாவைக் குளிப்பாட்டியது போல் வானவர்கள் இவரையும் குளிப்பாட்டும் விடயத்தில் நம்மை முந்திக் கொள்வார்களோ என அஞ்சுகிறேன்' என்று சொன்னார்கள். நாம் அவர்களது வீட்டை அடைந்தோம். அதற்கிடையில் அவரை மரணம் தழுவிக் கொண்டது. அவரது உடலைத் தோழர்கள் குளிப்பாட்டிக் கொண்டிருந்தனர். அவரது தாய் அழுது கொண்டிருந்தார். நபியவர்கள் 'ஒவ்வொரு பெண்ணின் அழுகையும் போலியானதாகும் ஸஃதுடைய தாயின் அழுகையைத் தவிர'. என்று கூறினார்கள். நாங்கள் கப்ர் வரைக்கும் அவரது ஜனாஸாவைத் தூக்கிச் சென்றோம். நபியவர்கள் தாமே அவரைக் கப்றுக்குள் வைத்து நல்லடக்கம் செய்யும் வேலையில் ஈடுபட்டார்கள்.

நாம் அவரது ஜனாஸாவைச் சுமந்து செல்லும் போது அது மீகவும் பாரம் குறைந்ததாக இருப்பதை அவதானித்தோம். இது பற்றி நபி (ஸல்) அவர்களிடத்தில் 'அல்லாஹ்வின் தூதரே இது வரை இவ்வளவு இலகுவான ஒரு மய்யித்தை நாம் சுமக்கவில்லை' என்று அவர்கள் கூறிய போது நபி (ஸல்) அவர்கள் ஒருபோதும் இறங்கிராத அளவுக்கு அதிகளவில் வானவர்கள் இவரது ஜனாஸாவில் கலந்து கொள்வதற்காக புடைசூழ முன்னெப்போதும் இல்லாதவாறு வந்து கொண்டிருக்கும் போது உங்களுக்கு எப்படி சுமப்பது இலகு இல்லாமல் இருக்கும்' எனக்கூறினார்கள் அவர்கள் உங்களுடன் அவரை சுமந்து வருகின்றனர். எனது உயிர் எவன் கைவசம் இருக்கின்றதோ அவன் மீது ஆணையாக ஸஃதுடைய உயிர் விடயத்தில் வானவர்கள் மகிழ்ச்சியாக இருக்கின்றனர் அவரது மறுமையின் வருகைக்காக சுபசோபனம் கூறுகின்றனர். அல்லாஹ்வின் அர்ஷே இவரது மரணத்திற்காகத் தளம்பியது என்று கூறினார்கள்.

'நிச்சயமாக விசுவாசங்கொண்டு நற்கருமங்களும் செய்கின்றார்களே அத்தகையோர்களுக்கு ஃபிர்தவ்ஸ் என்னும் சுவனபதி அவர்களுக்கு விருந்தினர் தங்குமிடமாக ஆகிவிட்டது. அதில், அவர்கள் என்றென்றும்

நிரந்தரமாக(த் தங்கி) இருப்பார்கள், அதை விட்டு வேறிடம் செல்ல அவர்கள் விரும்ப மாட்டர்கள்'. (அல்கஹ்ப் 18: 108).

## ஸகாத் கொடுக்க மறுப்பதும் பெரும் பாவமே..

ஜகாத் இஸ்லாத்தின் மூன்றாவது அடிப்படையாகும். 'எவர் தங்கம் வெள்ளிக்குரிய (ஜகாத்தை) உரிமையை வழங்கவில்லையோ மறுமையில் அவரது சொத்துக்கள் நெருப்புத் தட்டுக்களாக மாற்றப்பட்டு அவற்றை நரக நெருப்பில் பழுக்கக் காய்ச்சி அவற்றால் அவரது நெற்றியிலும், விலாப்புறத்திலும், முதுகிலும் சூடு போடப்படும் அதன் சூடு சற்றுத் தணிந்தாலே மீண்டும் நரக நெருப்பில் காய்ச்சப்பட்டு ஒத்தடம் போடப்படும். இவ்வாறே ஐம்பதாயிரம் வருடங்கள் வேதனை செய்யப்பட்டு அதன் பின்னரே படைப்பினங்களுக்கு மத்தியில் அல்லாஹ் தீர்ப்பளிப்பான். பின்னர் அவர் (அவரது இதர செயல்களுக்கேற்ப) சுவனத்திற்கோ நரகத்திற்கோசெல்வார். (ஆதாரம் முஸ்லிம்).

சொத்து செல்வங்களுக்கு ஸகாத்தை நிறைவேற்றாதவர்களுக்கு மறுமை நாளில் அவர்களுடைய செல்வங்கள் கூரிய கொம்புகளைக் கொண்ட மொட்டைத் தலையுடைய ஒரு முரட்டு பாம்பாக உருமாற்றப்பட்டு மறுமையில் அவனைக் கொத்திக் கொண்டே இருக்கும். பின் அவனது இரு தந்தங்களிலும் பிடித்து அவனைத் தூக்கிய வாறே நான்தான் உன் செல்வம், நானே சேமித்த சொத்துக்கள் என்று கூறிய வண்ணம் அவனை வேதனை செய்யும். (புஹாரி).

இவ்வாறு கூறிய நபியவர்கள் பின்வரும் வசனத்தை ஓதிக் காட்டினார்கள்... 'மேலும், அல்லாஹ் தன் பேரருளால் அவர்களுக்குக் கொடுத்தவைகளில் உலோபித்தனம் செய்கின்றார்களே அத்தகையவர்கள், அது தங்களுக்கு நல்லதென்று நிச்சயமாக எண்ணி விடவேண்டாம், மாறாக, அது அவர்களுக்குத் தீங்காகும், எதை அவர்கள் உலோபித்தனம் செய்தார்களோ அதைக் கொண்டு மறுமை நாளில் அவர்கள் கழுத்தில் மாலையாக மாட்டப்படுவார்கள்'. (ஆலு இம்ரான் 3:180).

## இறுதியாக ..

அன்பிற்குரிய சகோதர்களே! சகோதரிகளே அல்லாஹ்வின் அழைப்புக்கு செவி சாயுங்கள் அவன் மீது முழுமையாக நம்பிக்கை வையுங்கள் அவன் உங்களது பாவங்களை மன்னிப்பான் கடுமையான வேதனையை விட்டும் உங்களைப் பாதுகாப்பான். அல்லாஹ்வின் மீதாணையாக நிச்சயமாக நான் உங்களுக்குப் போதகனாவேன், இது சத்தியம். உங்களுக்குத் தெளிவுபடுத்தப்பட்டு விட்டது சத்திய மார்க்கம் ஒன்றென்பதை நீங்கள் அறிவீர்கள் அதுவன்றி வேறு மார்க்கம் கிடையாது. அல்லாஹ் தவிர வணங்கப்படுவதற்கு தகுதியானவன் வேறு யாருமில்லை. அவன் என்றென்றும் உயிருடன் இருக்கக் கூடியவன், அவன் ஏகன் எந்தத் தேவையுமற்றவன், அவனுடன் எந்த ஒன்றையும் இணையாக்குவதை அவன் பொருந்திக் கொள்ள மாட்டான்.

'நிச்சயமாக நாங்கள் எங்கள் மூதாதையரை ஒரு வழியில் (இருக்கக்) கண்டோம், நிச்சயமாக நாங்கள் அவர்களின் அடிச்சுவடுகளின் மீதே பின்பற்றிச் செல்பவர்கள்'. (அஸ்ஸுஹ்ருப் 43:23).

என்று சொல்லக்கூடிய மூடர்களின் கூட்டத்தில் நீங்கள் ஆகிவிடாதீர்கள். உங்களது நாவுகள் முழங்க வேண்டியது, நாம் ஏகத்துவவாதிகள் என்ற ஒரே வார்த்தையைத்தான். நாம் ஓரிறைக்கொள்கையில் பிடிப்புள்ளவர்கள், அவனுக்கு மாத்திரம் வழிப்பட்டு அவனுக்கு மாத்திரம் கட்டுப்படக்கூடியவர்கள் என்ற ஒரே வார்த்தைதான் எமது கோஷமாகும்.

இன்றைய முஸ்லிம் சமூகத்தில் பெரும்பாலானவர்கள் சமாதிகளுக்காக அறுத்துப் பலியிடுவதைக் கண்டோ, அங்கு அல்லாஹ்வுக்கு பல இணைகளை ஏற்படுத்துவதைக் கண்டோ நீங்கள் ஏமாந்து விடாதீர்கள்.... சமாதிகளுடன் தொடர்பு படுத்தி சொல்லப்படக்கூடிய பொய்யான கதைகளை-வலீ மார்கள் துன்பங்களைப் போக்குகிறார்கள், பிரார்த்தனைகளை ஏற்றுக் கொள்கிறார்கள் என்பவைகளைக் கேட்டு நீங்கள் ஏமாந்துவிடாதீர்கள்.

நபி (ஸல்) அவர்களின் சிறிய தந்தை அபூ தாலிபின் நிலையைப் பாருங்கள், நபியை உண்மைப் படுத்திய, இஸ்லாத்தைச் சத்திய மார்க்கமென மனதால் ஏற்றிருந்த அவர் சிலைகளை வணங்கிக்கொண்டிருந்தார். அவரது வாய் மொழிந்த வார்த்தைகள் சிலவற்றைப் பாருங்கள்...

முஹம்மதே ..அல்லாஹ் மீது ஆணையாக குரைஷிக் காபிர்கள் அனைவரும் உனக்கெதிராக ஒன்று சேர்ந்தாலும் நான் இருக்கும் வரை- அல்லது நான் இறந்து மண்ணுள் புதைக்கப்படும் வரை அவர்களால் உனக்கு எவ்வித தீங்கும் ஏற்படுத்த முடியாது...

நீர் என்னை இஸ்லாத்தின் பக்கம் அழைத்தீர். எனக்குத் தெரியும் நீர் என் நலனுக்காகவே அப்படிச் செய்தீரென்று! நீர் உண்மைபேசுபவர்! நம்பிக்கைக்குரியவர் எனப் பட்டம் வாங்கியவர்.

மக்கள் ஏற்றிருக்கும் அனைத்து மதங்களை விடவும் நீர் சொல்லும் மார்க்கம்தான் உண்மையென்பது எனக்கு நன்றாகவே தெரியும் ..

எனினும் மக்கள் என்னைப் பழிப்பார்கள் - இறுதியில் மதம் மாறி விட்டீரே என்று இகழ்வார்கள் என்று எண்ணுகின்றேன். அப்படி இல்லையெனில் நான்தான் முதலில் இஸ்லாத்தை ஏற்று அதைப் பகிரங்கப்படுத்தியிருப்பேன்... என்று பாடியதாக வரலாற்றின் மூலம் நாம் அறிகின்றோம்.

எனினும் அவரை சத்தியத்தைப் பின்பற்றுவதையும் தடுத்தது மூதாதையர்களின் வழிக்கு மாற்றம் செய்துவிடுவேனோ என்ற அச்சம்தான். தன் முன்னோருக்கு மாறு செய்வதை அவர் பெரிய அவமானமாகக் கருதினார். சத்தியத்தை ஏற்பதை விட குலப்பெருமையைக் காப்பதே அவருக்குப் பெரிதாகிப் போய்விட்டது. எலும்புகள் வலுவிழந்து, உடல் பலகீனமுற்று வயது முதிர்ந்தவராக மரணப் படுக்கையில் இருக்கும் அவரின் தவணை நெருங்கியிருந்தது. நபி (ஸல்) அவர்கள் அவரது தலை அருகில் இருந்தவராக பெரிய தந்தையே 'லா இலாஹ இல்லலாஹ்' என்று சொல்லுங்கள் என்று வேண்டிக் கொண்டே இருந்தார்கள். அந்த ஏகத்துவ மந்திரத்தை அவர் மொழிய முயலும் போதெல்லாம் அவரது தலை அருகே நின்ற குரைஷிக்காபிர்கள் நீர் அப்துல் முத்தலிபின் மார்க்கத்தை வெறுக்கின்றீரா? அப்துல் முத்தலிபின் மார்க்கத்தை வெருக்கின்றீரா? என்று

அதட்டினார்கள். தொடர்ந்து நபியவர்கள் கலிமாவை மொழியச் செய்வதற்கு முயன்று கொண்டே இருந்தார்கள், குரைஷிக் காபிர்களோ அவரை அவரது மூதாதையரின் பெற்றோரின் மார்க்கத்தில் மரணிக்கும் வரை, சிலைகளை வணங்குவதில்-அரசர்களுக்கெல்லாம் அரசனான அல்லாஹ்வுக்கு இணைகளை கற்பிப்பதில் தரிப்படுத்துவதில் முயன்று கொண்டியிருந்தார்கள். மரணத்தைத் தழுவிய அவர் நரகத்தை தங்குமிடமாக்கியவராக இவ்வுலகத்திலிருந்து பயணமாகிறார். அல்லாஹ் இறை நிராகரிப்பாளர்கள் மீது சுவர்க்கத்தைத் தடைசெய்து விட்டான்.

ஒரு முறை நபியிடத்தில் கேட்கப்பட்டது...

அல்லாஹ்வின் தூதரே உங்களது பெரிய தந்தை உங்களுக்கு உதவியாக பக்க பலமாக இருந்தார். சிலைகளை உடைத்தெறிந்தார் இந்த நற்செயல்களால் அவருக்கு மறுமையில் ஏதேனும் பிரயோசனம் ஏற்படுமா? என வினவப்பட்ட போது, நபியவர்கள் ஆம்.. நான் அவரை நரகத்தில் இருக்கக் கண்டேன். அவரது இரு பாதங்களின் கீழும் இரு நெருப்புக் கட்டிகளைப் போட்டு வேதனை செய்யப் படுகின்றது. அதன் வெப்பத்தால் அவரது மூளை கொதிக்கின்றது. அவர் நான் கொண்டு வந்த இஸ்லாத்திற்கு உதவியளிக்க வில்லையெனில் நரகத்தின் அடிப்பாகத்தில் போட்டு வேதனை செய்யப் பட்டிருப்பார் என்று கூறினார்கள். இன்னும் சிந்தித்துப் பாருங்கள்! சிலைகளை உடைத்தெறிந்த புனித இறை ஆலயமான கஃபாவை நிர்மானித்தவர் தான் இப்றாஹீம் (அலை) ஆவார்கள். அவரது எஜமானான அல்லாஹ்வால் பல சோதனைகளுக்குற்படுத்தப்பட்டார்கள், அல்லாஹ்வின் பாதையில் வேதனை செய்யப்படுகிறார்கள். இவ்வளவு அர்ப்பணிப்புகள் செய்தவருக்கு மறுமை நாளில் தனது தந்தைக்கு எந்த ஒரு உதவியும் செய்ய முடியாது. ஏனெனில் அவரது தந்தை முஷ்ரிக்காக மரணித்து விடுகிறார். புஹாரியில் ஒரு செய்தி வருகிறது: ‘இப்றாஹீம் (அலை) தனது தந்தை ஆஸரை கவலையால் முகம் கறுத்தவராகச் சந்திப்பார், இப்றாஹீம் (அலை) - அவரிடம் எனக்கு மாறு செய்யவேண்டாமென நான் உங்களிடம் கூறவில்லையா? எனக் கேட்க அதற்கு அவரது தந்தை நான் இன்றைய நாளில் உனக்கு மாறு செய்யமாட்டேன் எனக்கூறுவார், இப்றாஹீம் நபி ரப்பிடம் யா அல்லாஹ் நீ என்னை அனைவரும் எழுப்பப்படும் நாளில் சஞ்சலத்துக்குள் ஆழ்த்த மாட்டாய் என வாக்களித்துள்ளாய், எனது

தந்தையை பீடித்துள்ள சஞ்சலத்தை கவலையை விட வேறு என்ன கவலை சஞ்சலம் எனக்கு இருக்கிறது? என வினவ அல்லாஹ் கூறுவான்: நான் இறை நிராகரிப்பாளர்கள் மீது சுவர்க்கத்தை தடை செய்து விட்டேன்' என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். (புஹாரி).

இந்த அனைத்தையும் மனக்கண் முன் நிறுத்தி நல்லுணர்ச்சி பெறுங்கள். அந்நாளில் மனிதன் தன் சகோதரனை விட்டு, தன் தாயை விட்டு, தன் தந்தையை விட்டு தன் மனைவியை விட்டு, தன் மக்களை விட்டு வெருண்டோடுவான். அந்நாளில், அவர்களில் ஒவ்வொரு மனிதருக்கும் அவரைத் திருப்பி விடும் ஒரு காரியம் உண்டு'. (அபஸ 80:34-37).

'செல்வமும், மக்களும் (யாதொரு) பயனுமளிக்காத (அந்த) நாளில், பரிசுத்தமான இதயத்துடன் (தன் இரட்சகனாகிய) அல்லாஹ்விடம் யார் வந்தாரோ அவர் தவிர (மற்றவருக்குப் பயனளிக்காத நாள்)'. (அஷ்ஷுஅரா 26: 88,89).

சத்தியத்தை ஆதரவு வைக்கக்கூடியவனாக, சத்தியத்தைப் பிறருக்கு உபதேசிக்கக்கூடியவனாக, ஏகத்துவத்தின் பால் அழைப்பு விடுக்கக்கூடியவனாக நீ ஆகிவிடு. அனைவரும் நேர்வழி அடைய நானும் பிரார்த்திக்கிறேன்.

அல்லாஹ் மிக அறிந்தவன். அல்லாஹ்வின் தூதர் மீது அவனது அருளும், சாந்தியும், பரக்கத்தும் உண்டாவதாக. ஆமீன்..